உ

# பிரம்மவித்தை

என்னும்

# வேதாந்த ஜட்ஜிமெண்டு

**ஸ்ரீமான், சந்திரசேகர சுவாமிகள்**,
ஸ்ரீமான், பரூர் - சேஷகிரி அய்யங்கார்,
ஸ்ரீமான், கோ - செங்கல்வராயராஜா

இவர்களால்
திருவாய்மலர்ந்தருளப்பட்டு,

சிறுமணவூர்,
**முனிசாமி முதலியார்**
அவர்களால்

தமது
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1906.

*இதன் விலை*] [*ரூபா* 1.

## விளம்பரம்.

## முகவுரை.

இந்த கிரந்தமானது ஸத்தியோ மோக்ஷத்தைக் கொடுக்கத் தக்கதா யிருக்கிறது. ஒருவன் இரண்டு நாழிகையில் மோக்ஷத்தை அடையவேணுமென்று அவசரப்படுவானேயானால், அவன் இந்த புஸ்தகத்தைத்தான் பார்க்கவேணுமென்று 3 - வது முதல் 46 - வது பிரிவுகளால் தெளிவா யேற்படுகிறது. சரீரம் ஸ்திரமில் லாததினால் யாவரும் அவசர முள்ளவர்களாகவே இருக்கிறார்கள். அதனால் யாவரும், இதைத்தான் பார்க்கவேணுமென்று தாத்பரியம், மேலும், 25, 26 - வது பிரிவுகளால் ஜாதி மதாபிமான மில்லாதவரால் இந்தப் புத்தகம் செய்யப்பட்டதென்று யேற்படுகிறது. அனேக கிரந்தங்களைப் பார்த்தவர்களை, தேகத்திலிருந்து ஜீவனைப் பிரித்து ஜீவேஸ்வர ஐக்கியத்தைச் செய்யுமென்றால் அப்படிச் செய்ய சக்தியற்றவர்களாய் சாஸ்திர வாதங்களை மட்டில் எடுத்துச் சொல்லுகிறார்களே யல்லாமல் அனுபவத்தைக் காட்ட அவர்களால் சாத்தியப்படவில்லை. இந்த கிரந்தத்தைப் பார்த்தவர்களுக்கு அப்படிச் செய்ய சாத்தியப்படும். 7 - வது முதல் 41 வது பிரிவு வரையில் ஜீவேஸ்வர ஐக்கியத்தையும்பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றது ஓம் சுபமஸ்து.

# பிரம்ம வித்தை

என்னும்

# வேதாந்தஜட்ஜிமெண்டு.

### கணபதி.

நித்தியா நந்தமாகி நிட்கள சொரூப மாகிச்
சத்தியாய்ச் சிவமுமாகித் தாணுவா யுலகுக் கெல்லாஞ்
சித்தியாய் முத்தியாகித் திகழ்பர மார்த்த மாகி
யத்தியி னுருவமான வண்ணலை வணங்கு வொமே,

### சுப்ரமணியர்.

மடமையெனுஞ் சத்தியினால் விளைந்த தான
    மலத்திமிரக் கிரி நூறி மாயா பந்தந்
துடருபவக் கடல்விளைக்குஞ் சம்சா ரத்தின்
    றொடர்பில்வரு வினைக்கொடுஞ்சூர்க் கடிந்த தூயோ
னடர்மலையத் துயர்முனிவற் குறைத்தற் குன்மை
    யமரர்சிறை மீட்டயனைச் சிறையில் வைத்துச்
சடமாயை சூரன் மயில் மடக்கி யேறுஞ்
    சரவணனா யகனிருதா டலைமேற் கொள்வாம்.

### பராபரம்.

பூரணங் களுக்கு முன்னே பூரண மாதியாகி
யாரணங் களுக்கு முன்னே யராண மாகியெல்லாக்
காரணங் களுக்கு முன்னே காரண மானசோதி
நீரணங் கமைந்த வேணி நிமலனை நினைதல் செய்வாம்.

### பராபரை.

பராபரையாய்ச் சத்தியைந்தாய்ப் பூதந்தானாய்ப்
    பலவுலகாய்ப் புவனவண்டப் பரப்பாய் மேலுஞ்
சராசரமா யனைத்துயிராய்ப் படைத்தெல் லாந்தான்
    ஜகமென்னுஞ் சிறுவீட்டிற் சரித்து வாழப்
புராதனமாய்க் காத்துவிளை யாடிப் பின்னர்
    புனல்வடிவா யெழுந்தருளிக் கற்பாந் தத்தில்
நிராதரமா யனைத்துமழித் தெல்லாந் தானாய்
    நிறைந்துநின்ற பராபரையை நினைந்துய் வோமே.

## நந்தி.

முந்துசஞ் சிதங்கடீர மும்மலக் கங்குல்மாற
இந்தியப் புலக்கண்மாய விதயமொட் டலர்ந்துபூப்ப
அந்தியோ டு தயமில்லா வாதித்த னகத்திற் றோன்ற
நந்தியெம் பெருமான்பாத நளினமென் சிரமேல்வைப்பாம்.,

## திருமால்.

பார்புனல் தீக்கால்வானம் பலவித புவன மண்ட
மேர்பெற வுலகமெல்லா மினிதெனத் தோன்றியெங்கும்
நேர்பெறு உருவமாகி நின்றிடு மாயை நீங்கக்
கார்செறி வண்ணத்தண்ணல் கழலிணை கருத்துள்வைப்பாம்.

## மாகன்கள்.

பூதலந் தனிலுமிக்க பொன்னுல கதனி னுந்தான்
பாதலந் தனிலுந் தூய பழமறை யாய்ந்து தேர்ந்து
சாதலும் பிறப்புமில்லாத் தத்துவ ஞானமுள்ள
தீதில்மா தவர்கடங்க டிருவடி சிரமேற் கொள்வாம்.

# நூன்முகம்.

## சிஷ்யகுரு ஸம்வாதம்.

### 1. சிஷியன்.

அஞ்ஞானமாவது என்ன?

### ஆசாரியன்.

தன்னைத்தான் அறியாமல் இதரகாரியங்களில் பிரவர்த்திக்கிறதற்கு அஞ்ஞானமென்று பெயர்வைத்திருக்கிறார்களேயொழிய, அஞ்ஞானமென்று ஒரு வஸ்து இல்லை. அஞ்ஞானமென்றால் அறியாமையேயாம்.

### 2. சிஷியன்.

மாயையாவது என்ன?

### ஆசாரியன்.

மாயையென்றால் பகவானுடைய காரியங்களேயாம், மாயையென்று ஒரு வஸ்துவும் இல்லை.

### 3. ஆசாரியன்.

நீ இவைகளை ஏன் விசாரிக்கிறாய்?

### சிஷியன்.

சுவாமி! மோட்சத்தை அடைய வேண்டியதற்காக விசாரிக்கிறேன்.

### ஆசாரியன்.

மோட்சமாவது விடுதலை. விடுதலை என்றால் அதற்கு முந்தி எதினாலேயாவது பிடிப்பு இருந்திருக்கவேண்டும், பிடிப்பு என்றால் பந்தமென்று அர்த்தம். மோட்சத்தைக் கோருகிற நீ இருபத்துநாலு தத்துவங்களில், யெந்த தத்துவம் உன்னைப் பிடித்துக் கொண்டிருக்கிறதோ அதை அறிந்து விடுதலை பண்ணிக்கொள்ள வேண்டியதே யல்லாமல், மாயை, அஞ்ஞானம், ஜெகத்ருஷ்டி முதலானவைகளை விசாரிக்கவேண்டிய தவசியமில்லை.

### 4. சிஷியன்.

எனக்கு ஏன் ஞானமில்லை?

### ஆசாரியன்.

கறுப்பு, சிகப்பு, ருசி, அருசி, பக்குவாபக்குவங்கள், ஸ்வர அட்சரங்கள், கணக்குகள், லாபாலாபங்கள், விவகாரங்களிலுள்ள ஞாய மனியாயங்கள் முதலானவைகளை ஞானமில்லாமல்தா னறிகிறாயோ?

### ஆசாரியன்.

ஞானமில்லை என்று அஞ்ஞானத்தினா லறிந்தாயா? ஞானத்தினாலறிந்தாயா?

### சிஷியன்.

ஐயா! இதனால் எனக்கு ஞானமிருப்பதாக ஏற்படுகிறது. ஞானமென்றால் என்னமோ யென்றிருந்தேன்.

### 5. சிஷியன்.

எனக்கு ஏன் பிரம்மஞானமில்லை?

### ஆசாரியன்.

பிரம்மஞானமென்று ஒன்று, இந்திரஞானமென்று ஒன்று, சந்திரஞானமென்று ஒன்று இருக்கிறதோ?

### 6. சிஷியன்.

எந்த வழியைப் பிடித்தால் மோட்சத்தை அடைந்து, நித்தியானந்தத்தைப் பெறலாமோ அந்த வழியைக் காட்டவேண்டும்.

### ஆசாரியன்.

என்னத்தினால் உன்னுடைய கால் நொண்டியாயிருக்கிறதோ அதை ஆலோசனை செய்து பார். இதுதான் ஞானமார்க்கம். பிராப்தகாலம் வரவேண்டுமென்று சில சோம்பேரிகள் சொல்லுவார்கள், “சிரத்தாவான்லபத" ஞானமென்று கிருஷ்ணபகவான் சொல்லியிருப்பதால், அக்கரையுள்ளவன் ஞானத்தையடைவான்.

## தத்துவசோதனைப்ரகரணம்.

**7.** என்னுடைய கால் என் நொண்டியாயிருக்கிறதோ அதை யாலோசனை செய்யென்று சொன்னாரல்லவோ அதை இப்போது ஆலோசிக்கிறேன்.

**8.** என்னுடைய கால் ஏன் நொண்டியாயிருக்கிறது. இந்த நொண்டி சரீரத்தை நானே எடுத்துக்கொண்டதல்ல, நானே எடுத்துக்கொள்ளுகிறதாக யிருந்தால் என்னிஷ்டப்படி நல்ல சரீரம் எடுத்துக்கொள்ளுவேன். என் தாயாருடைய கற்பத்திலேயே அல்லவோ, இந்த நொண்டி சரீரம் உண்டாயிருக்கிறது. என் தாயாருடைய கற்பத்திலே பிரவேசித்து, என்னுடைய காலை நொண்டிபண்ணின மனிதர்களாலே ஆக மாட்டாது. நான் செய்த பாவத்திற்கு எவரோ கெற்பத்திலேயே சிட்சை கொடுத்திருப்பதாக ஏற்படுகிறது. அவர் தான் ஈஸ்வரனாக இருக்கவேண்டுமென்று எண்ணுகிறேன். கெற்பத்திலேயே சிட்சை கொடுத்ததினாலே அதற்கு முந்திய ஜென்மத்திலே நான் செய்த பாவத்திற்குக் கொடுத்த சிட்சையாயிருக்கிறது.

**9.** இன்னும் இந்த ஜென்மத்தில் பாவம் செய்தால் வருகிற ஜென்மத்தில் எப்படி சிட்சை செய்வாரோ?

**10.** இதனால் நான் போன ஜென்மத்தி லிருந்தேன், இந்த ஜென்மத்தி லிருக்கிறேன், வருகிற ஜென்மத்தி லிருப்பேன்.

**11.** இவ்விதமாய் அந்தந்த ஜென்மத்தில் ஆலோசனை செய்தால் மும்மூன்று ஜென்மங்கள் தெரியவரும்.

**12.** மூன்று ஜென்மங்களிலும் நானிருப்பதாய்த் தெரியவருகிறபடியினாலே நான் நித்தியன்.

**13.** இதற்கு முந்திய ஜென்மத்தில் நானில்லாவிட்டால் எனக்குப் பாவமுமில்லை. என்னுடைய கால் நொண்டியாக மாட்டாது. பாவம் பண்ணாதவனை சிட்சிக்க நியாயமில்லை, பாவமில்லாமல் சிட்சித்திருந்தால் அப்படி சிட்சித்தவன் ஈஸ்வரனாக மாட்டான்.

**14.** நான் போன ஜென்மத்தில் இறந்துபோயிருந்தால் இந்த ஜென்மத்தில் எப்படி பிறப்பேன் இறந்து போகிறதென்றால் இருக்கிற சரீரத்தை விட்டு வேறொரு சரீரம் எடுக்கிறதென்று தோணுகிறது.

**15.** எந்த தத்துவம் பிடித்துக்கொண்டிருக்கிறதோ அதை மோக்ஷார்த்தியானவர் விசாரிக்கவேண்டுமென்று சொன்னாரல்லவோ அதை யிப்போது விசாரிக்கிறேன்.

**16.** நான் வருகிற ஜென்மத்தில் பசுவாகப் பிறந்தால் அப்போது கைகள் இருக்க மாட்டா தானத்தினால் கைகள் இந்தச் சரீரத்திலேயே நின்றுவிடுகிறது. எனக்கு கைகளிருந்தால் நான் எடுக்கும் படியான பசு சரீரத்திலும் இருக்க வேண்டுமல்லவோ அப்படிக்கில்லாமல் இந்தச் சரீரத்திலேயே நின்றுவிடுகிற தானத்தினாலே கர்மேந்திரியங்கள் என்னைப் பிடித்துக் கொண்டிருக்கவில்லை. கர்மேந்திரியங்கள் நானல்ல பசு சரீரத்திற்கு கர்மேந்திரியங்கள் ஐந்துக்கு குறைவுபடுகிறது ஆனதினால் கர்மேந்திரியங்கள் சரீர சம்மந்தமேயல்லது சரீரியாகிய எனக்குச் சம்மந்தமானவைகளல்ல.

**17.** வண்டாகப் பிறந்தால் சுரோத்திரேந்திரியமில்லை ஆனதினாலே இதுவும் முன்போலவே சரீர சம்பந்தமேயல்லது சரீரியாகிய எனக்குச் சம்பந்தமான தல்ல ஆனத்தினால் ஞானேந்திரியங்களும் என்னைப் பிடித்துக்கொண்டிருக்கவில்லை.

**18.** விருட்சமாகப் பிறந்தால் இருபத்துநாலு தத்துவங்களுமில்லை யானதினால் இருபத்துநாலு தத்துவங்களும் முன்போலவே சரீரத்துக்குச் சம்பந்தப் பட்டவைகளேயல்லாமல் சரீரியாகிய எனக்குச் சம்பந்தப்பட்டவைகளல்ல. இருபத்துநாலு தத்துவங்களும் என்னைப் பிடித்துக்கொண்டிருக்கவில்லை. எல்லா

தத்துவங்களும் சரீரத்தையே பிடித்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் மரமானது எதை யறியுமென்றால் ஸ்பரிசத்தைமாத்திரம் அறிகிறது. மரமாகப் பிறந்தால் எல்லா தத்துவங்களும் நசித்து அறிவுமாத்திரம் சேடித்து நித்தியமாக யிருக்கிறது. பின்னும் சர்ப்பத்திற்கு சட்.சு சுரோத்திரேந்திரியங்கள் ஒன்றாக யிருக்கின்றன வௌவாலுக்குப் பிராணாபானங்கள் ஒன்றாக யிருக்கின்றன. இன்னும் அநேக பிரகாரங்களாக சரீரங்களுக்குத் தக்கபடி ஏற்றக்குறைச்சலாயும் ஸ்தானபேதங்களாயு மிருக்கிறது.

**19.** புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி சரீரங்கள் வந்துக் கொண்டும் போய்க்கொண்டு மிருக்கின்றன. ஆகையால் எனக்கு ஸ்திரமாரமான சரீரமே யில்லை. ஆனத்தினால் சரீரம் நானல்ல. சரீரமும் என்னைப் பிடித்துக்கொண் டிருக்கவில்லை.

**20.** ஆனால் நான் எப்படிப்பட்டவன் என்றால் அந்த சரீரங்களுக்கு உண்டாகிற சுகதுக்கங்களை அறிகிறேன் ஆனதினாலே அறிவாக மாத்திரம் இருக்கின்றேன்.

**21.** பசுவாகப் பிறந்தால் அப்போது புல்லையல்லவோ புசிக்கவேண்டும். ஆகையால் ஆகாரங்கள் சரீரத்துக்குச் சம்பந்தப் பட்டவைகளேயல்லாமல் சரீரியாகிய எனக்குச் சம்பந்தப்பட்டவைகளல்ல.

**22.** இன்னமும் இந்த தேகத்திலுள்ள செவிடு, ஊமை, வலி, வியாதிகள், காயங்கள் முதலானவைகள் இந்த தேகத்திலேயே நின்று மற்றொரு தேகத்திற்கு வராமலிருப்பதினாலே இவைகளும் சரீர சம்பந்தமேயல்லாமல் சரீரியாகிய எனக்குச் சம்பந்தப் பட்டவைகளல்ல. இவைகளும் சரீரத்தையே பிடித்துக் கொண்டிருக்கிறதேயல்லாமல் சரீரியாகிய என்னைப் பிடித்துக் கொண்டிருக்க வில்லை.

**23.** இந்த தாய் தந்தைகள் இன்னொரு சரீரம் எடுக்கும் போது எவ்வித முறையுள்ளவர்களாவர்களோ அல்லது சத்துருக்களோ அல்லது மித்திரர்களோ ஆனதினால் இவர்களும் சரீர சம்மந்திகள்.

**24.** இப்போது இந்த சொத்துக்கள் என்னுடையதென்றும், இன்னமும் அண்டை வீட்டுக்காரனுடைய சொத்துக்களை அபகரிக்க வெண்ணுகிறேன். அந்த அண்டை வீட்டில் நான் பிறந்தால் அப்போது இந்த வீட்டுச் சொத்துக்களையல்லவோ அபகரிக்க வெண்ணுவேன் ஆனதினால் எனக்குச் சொந்தமான சொத்துக்கள் எவை ஆகையால் சொத்துக்களும் சரீர சம்பந்தங்களாகவே யிருக்கின்றன.

**25.** இப்பொழுது பிராமணனாக யிருக்கின்ற நான் இனி மிலேச்சனாகப் பிறந்தால் இந்த வர்ணாஸ்ரமாசார தருமங்கள் அப்போது இருக்கமாட்டா ஆனதினாலே இந்த வர்ணாஸ்ரமாசாரதருமங்களும் சரீரத்துக்குச் சம்பந்தப் பட்டவைகளாகவே யிருக்கின்றன.

**26.** இப்போது இந்த சைவமதத்தில் இருந்துக்கொண்டு வைஷ்ணவர்களைத் தூஷிக்கிறேன் வைஷ்ணவனாகப் பிறந்தால் வைஷ்ணவச் சின்னங்களைத் தரித்துக் கொண்டு சைவர்களையல்லவோ தூஷிப்பேன் ஆனத்தினாலே மதங்களும் சரீர சம்பந்தங்கள்.

**27.** இந்த சேஷகிரி அய்யர் என்கிற பெயர் பிறந்த பதினோராவது நாள் புண்ணியாவசன தினத்தில் தாய் தந்தையர்களாலே வைத்த பெயரல்லவோ அதற்கு முந்தி எனக்கு இருந்த பெயரென்ன என்னமோ அவர்களுக்குத் தோன்றியபடியே வைக்கிறார்கள்.

**28.** இப்போது எனக்கு நூறு வயதென்று வேதம் ஆயுசு விதித்திருக்கிறது. நான் குதிரையாகப் பிறப்பனேயானால் அப்போது எனக்கு பிரமாயுசு முப்பத்தி ரண்டல்லவோ ஆகையால் வேதம் சரீரத்திற்கு ஆயுசு விதித்ததேயல்லாமல் சரீரியாகிய யெனக்கு ஆயுசு விதிக்கவில்லை.

**29.** ஆனதினாலே மேற்சொன்னவைகளெல்லாம் சரீரசம்பந்தங்களாய் சரீரத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிறதே யல்லாமல் சரீரியாகிய என்னைப் பிடித்துக் கொண்டிருக்கவில்லை. ஆகையால் சதாமோட்சத்திலேயே யிருக்கிறேன்.

**30.** இதுவரையில் சோதனை செய்து பார்த்ததில் ஒன்றும் என்னைப் பந்திக்காமல் நித்தியமாய் அறிவாகமாத்திரம் இருக்கிறேனென்று ஏற்படுகிறது. அறிவென்று சொன்னால் அறிவை உடைத்தானவன் ஒருவன் இருக்கவேண்டும். அதைப்பற்றி யின்னம் ஆலோசிக்கிறேன்.

இந்த அர்த்தத்தைப்பற்றி தான் மேலே சொல்லப்பட்டிருக்கின்றது.

சிஷகம் என்பதைப்பற்றி அடுத்த பிரகரணத்தில் சொல்லப்படுகிறது.

## ஜீவன் முத்திப் பிரகரணம்.

**31.** அப்படி நித்தியமாய் அறிவாகமாத்திரம் யிருக்கின்ற யெனக்கு சரீரம் எப்பொழுது வந்ததென்றால் பாஞ்சபூதிக சிருஷ்டிக்குப் பின்பல்லவோ வந்தது. அதற்கு முன் எனக்குச் சரீரமேயில்லாமல் இருந்ததென்று வெளிப்படையாய் ஏற்படுகிறது. நான் நித்தியனாய் அறிவுமாத்திரமாக இருக்கின்றேன் என்று முன்னமே சொல்லியிருக்கிறேன்.

**32.** அறிவு என்றால் அறிவைக்கொண்டு அறிகிறவன் ஒருவன் இருக்கவேண்டும். அறிவைக்கொண்டு அறிகிற காரியங்கம் இருக்கவேண்டும். முதலில் அறிவைக்கொண்டு அறிகிறவனை நிச்சயிப்போமாக.

**33.** இந்த அறிவு நித்தியமென்று முன்னமே சொல்லியிருப்பதினாலே மகதாதி சிருஷ்டிக்கு முன்னும் இந்த அறிவை இருந்திருக்கவேணும். மகதாதிசிருஷ்டிக்கு முன்னும் இந்த அறிவைக் கொண்டு அறிகிறவனும் இருந்திருக்கவேண்டும்.

**34.** அப்படி மகதாதி சிருஷ்டிக்கு முன் இருந்தவன் எவன் பிரம்மதேவனா? விஷ்ணுவா? சிவனா? அது எவரோ ஒழுங்குபடி விசாரிப்பதில் எற்படுகிறவன் தான் அவன் இந்த ஜெகத்தை யுண்டுபண்ணினவன் தான் அப்போது இருந்திருக்க வேண்டும் ஆனால் இந்த ஜெகத்தை யார் சிருஷ்டித்தது?

**35.** இந்த ஜெகத்துக்கு முந்தி யிருந்த ஜெகத்முதலான சர்வத்தையும் சம்மாரஞ்செய்து எவன் மீந்தானோ அவன்தான் இந்த ஜெகத்சிருஷ்டிக்கு காரணனாக இருக்கவேண்டும்.

**36.** அப்படிக்கு யார் சர்வசம்மாரம் செய்தது? எல்லாப் புராணங்களிலும் சர்வசம்மார அதிகாரம் சிவனுக்கே யிருப்பதாக வெளிப்படையாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதினாலே அப்படிப்பட்ட சிவன் தான் இந்த ஜெகத்துக்கு முந்தியிருந்த ஜெகத்து முதலான சகலத்தையும் சம்மரித்து மீந்து இந்த ஜெகத் சிருஷ்டி, ஸ்திதி, சம்மாரங்களுக்குக் காரணனாக இருக்க வேணும். சர்வசம்மார மாவது அப்படிப்பட்ட சிவனைத்தவிர வேறே எவராவது ஒருவர் இருந்தாலும் வேறெந்த வஸ்து இருந்தாலும் சர்வசம்மாரம் ஆகமாட்டாது.

**37.** ஆனதினால் இந்த ஜெகத்சிருஷ்டிக்கு முந்தி யார் இருந்ததாக ஏற்படுகிறதென்றால் இந்த ஜெகத்துக்கு முந்தி யிருந்த ஜெகத்து முதலானவைகளைச் சம்மரித்து மீந்து சிவனல்லவோ இருந்தான். அப்போதும் நித்தியமா யிருக்கும்படியான அறிவு யிருந்ததானதினாலே இந்த அறிவைக்கொண்டு அறிகிறவன் அந்த சிவன் தானென்று வெளிப்படையாக ஏற்படுகிறது.

**38**. அந்த சிவன் இப்பொழுது எங்கே யிருப்பானென்றால் அந்த அறிவு இருக்கிறவிடத்தில் அவன் இருக்கவேண்டும். அறிவு அவனை விட்டுப் பிரியா தானதினால் அவனிருக்கிற விடத்தில் அந்த அறிவு இருக்கவேண்டும். அந்த அறிவு எங்கேயிருக்கிறது? அந்த அறிவானது இந்த என்னுடைய சரீரத்தில் இருக்கிறதான தினாலே இந்த அறிவை உடைத்தான அந்த சிவனும் இந்த என்னுடைய சரீரத்தி லேயே யிருக்கவேண்டும்.

**39.** ஆனால் அறிவு வேறு அந்த அறிவை உடைத்தானவன் வேறென்று சொல்ல இடமில்லை. எப்படியென்றால் ஜுவாலை வேறு, ஜுவாலையை உடைத்தான அக்கினி வேறென்று சொல்ல எப்படி இடமில்லையோ? அப்படிப் போலவே அறிவை உடைத்தான அந்த சிவன் வேதென்று சொல்ல விடமில்லை. எப்படி ஜுவாலையே அக்கினியாகவும், அக்கினியே ஜுவாலையாகவும் இருக்கிறதோ அப்படியே அந்தசிவனே அறிவாகவும் அந்த அறிவே சிவனாகவும் இருக்கிறான்.

**40.** ஆனதினாலே அறிவே சிவன், அந்த சிவனே அறிவு, அவனே பரப்ரமம், அந்தப்ரமமே நான்.

**41**. இதனாலேதான் பிரஞ்ஞானம், பிரம்மா என்றுந் தத்துவம், சீ தத்துவம் சீ என்று வேதமானது சொல்லியிருப்பது மல்லாமல் "ததேகோ வசிஷ்டசிவக் கேவலோகமென்று" சங்கராச்சாரியர் சொல்லியிருக்கிறார்.

இந்த அர்த்தத்தைப்பற்றி தான் மேலே சொல்லப்பட்டிருக்கின்றது.

## நைராசியப் பிரகரணம்.

**42.** இப்படி அறிவுமாத்திரமாக இருக்கின்ற என்னை எவனாவது அடிக்கலாமா, கத்தியினால் வெட்டலாமா, அக்கினியினாலே கொளுத்தலாமா, தண்ணீரிலே நனைக்கலாமா, காற்றினாலே சோஷிக்கலாமா, பாஞ்சபூதிகங்களுக்கு சம்மந்தமான வைகளாலேதான் நான் சபரிசிக்கப்படுவேன். நான் ஒருவர் கையிலும் கண்ணிலும் தட்டுப்படுகிறவனல்லவே அறிவுமாத்திரமாக இருக்கின்ற எனக்கு இந்த சொத்துக்களாலேயும் ஈஷணத்திரவியங்களாலேயும், ராகத்துவேஷாதி களினாலேயும், அன்னபானாதிகளினாலேயும், மானாபிமானங்களினாலேயும், லாபாலாபங்களினாலேயும் என்னபிரயோசனமிருக்கின்றது.

**43.** சரீரசம்மந்தமானவைகள் எத்தனை வந்தன, எத்தனை போகின்றன. எனக்குச் சொந்தமானது ஒன்றும் வரவுமில்லை, போகவுமில்லை. இப்போது காமக்குரோதாதிகள் எவ்விடத்தில் எப்படிப் போய்விட்டதோ இவ்வளவு நானறிந்த பின்பல்லவோ காமக்குரோதாதிகள் என்னை விட்டன. இதற்கு முந்தி போ என்றால் போகுமா?

**44.** எவரோ, எந்த பறையனோ, எந்த கழுதையோ ஒருவன் வீட்டில் பெண்ணாகப் பிறந்து மனைவியென்று முறை சம்பாதித்துக் கொண்டு வந்து சேர்ந்தாள். இப்பிரகாரமே புத்திரனும் வந்து சேர்ந்தான். இதைப்போலவே ஒவ்வொருவரும் ஒவ்வொரு முறையை கற்பித்துக்கொண்டு சந்தைக்கூட்டம்போல வந்து கூடியிருக்கிறார்கள். இந்த ஜென்மத்தில் இவர்களைப் போஷிக்கிறதும் வருகிற ஜென்மத்தில் அப்போ திருக்கிற இந்த முறையுள்ளவர்களைப் போஷிக்கிறதும் இப்போ திவ்விடத்தில் வீடுகட்டுகிறதும் நிலம் வாங்குகிறதும் இன்னம் எந்தெந்த விடத்தில் பிறப்பேனோ அவ்வவ்விடத்திலு மிதேவேலைகள் தானா செய்கிறது? சீச்சீ அசங்கியம்.

## சந்தேகம் தெளிதற்பிரகரணம்.

**45.** இப்போது நான் அடைய வேண்டியதை அடைந்திருக்கின்றேனா, செய்யவேண்டியதைச் செய்திருக்கின்றேனா, இன்னம் ஏதரவது பாக்கி யிருக்கிறதா என்பதை விசாரிப்போம்.

**46.** "ஞானமே வமோக்ஷஹா" என்பதற்கு அறிகிறது தான் மோக்ஷம். என்று சொல்லியிருப்பதினாலேயும், அறிந்த பின்பு ஒன்று செய்யவேண்டியதில்லை. என்று வெளிப்படையாய் அர்த்தங் கொடுப்பதினாலேயும் இனி நான் செய்யவேண்டியது ஒன்றுமில்லை.

**47.** இதற்குத் திருஷ்டாந்தம் பரிட்சித்துமகாராஜன் சுகராலே ஞானோபதேச மடைந்தபின்பு மோட்சத்துக்கு வேண்டிய தபசு முதலான காரியங்கள் ஏதாவது இன்னும் இருப்பதாகச் செய்தானோ? ஸ்ரீகிருஷ்ணபகவானாலே ஞானோபதேசம் பெற்றுக்கொண்ட அர்ச்சுனன் தான் ஏதாவது இன்னும் இருப்பதாகச் செய்தானோ நான்மாத்திரம் ஏன் செய்வேன்?

**48.** ஆனால் ஞானமடைந்தபின்பு பரிட்சித்துவுக்குச் சாவகாசமா யிருந்தபடியினாலே பகவானுடைய குணாதிசயங்களைக் கேட்டார் ஆனதினாலே நானும் அப்படியே செய்கிறேன் அப்படிச் செய்வதினாலே இப்போது தெளிவடைந்த மனம் மறுபடியும் கலங்காமலிருக்குமென்று தோன்றுகிறது. ஆனால் அப்படித் தெளிந்தவர்கள் மறுபடியும் கலங்கிப்போனார்களோவென்றால் குடும்பியாயிருந்த ஒரு மஸ்தியத்தைப் பார்த்தமாத்திரத்திலே "சவுபரிஷி" என்பவர் சம்சாரியாய் விடவில்லையா? தனியாயிருந்த மச்சகந்தியைப்பார்த்து "பராசரிஷி" அவள்பேரில் மோகிக்கவில்லையா? மானுடைய சேர்க்கையாலே ரிஷியாயிருந்த பரதன் கெட்டுப் போகவில்லையா? ஆனதினாலே மனதை நம்பக்கூடாது. அடிக்கடி வேதாந்த காலக்ஷேப புராணஸ் ரவணங்களை நடத்திக் கொண்டே வரவேண்டும். பின்னும் வசிஷ்டாதி மகாரிஷிகள் விதி வாக்கியத்திற்கு உட்பட்டு நித்தியகருமானுஷ்டான ங்களை நடத்திக்கொண்டு வந்தார்களானதினாலே நானு மப்படியே நடத்திக் கொண்டு வருவேன்.

**49.** நான் என்னை எப்போது பிரம்மமென்று அறிந்தேனோ என்னைப்போலுள்ள ஸ்தாவரசங்காத்மாக்களாக இருக்கிற எல்லா ஜீவர்களும் பிரம்மமே, இதனாலே தான் "ஸர்வம், கல்வி தம்பிரம்மா" யென்று வேதம் சொல்லியிருக்கிறது. நான் இதுவரையில் இத்தியாதி வாக்கியங்களை உபசாரவாக்கியங்களென் றிருந்தேன். இப்போது என்னை பிரம்மமென்று அறிந்தபின்பு அந்த வாக்கியங்கள் யதார்த்தமான அர்த்தத்தைச் சொல்லியிருப்பதாக ஏற்படுகிறது.

**50.** நித்தியம், பூர்ணம், ஏகம், பரமார்த்தம், பரப்பிரம்மம், சத்தியம், ஜீவன், சூட்சம், போதம், சாக்ஷி, கூடஸ் தன், தத்துவம், சதாநந்தம், ஜோதி, ஆத்மா, முத்தம், சிவம் முதலானவைகள் பிரம்மத்தினுடைய பெயர்கள்.

**51.** எல்லாச் சீவனும் பிரம்மமாக யிருந்தால் ஒருவரோடொருவர் துவேஷிப்பானேன், சினேகிப்பானேன், என்று கேட்டால் ஒரே விஷ்ணுவான பரசுராமன் தசரதராமனோடு துவேஷித்தானென்று ராமாயணம் சொல்லவில்லையா? பிரகலாதனனும் நாரதரும் விஷ்ணுவென்று பாகவதம் ஏகவிம்சதி, அவதாரசங்கற் பத்தில் சொல்லவில்லையா? அவர்கள் ஏன் விஷ்ணுபக்தி செய்தார்கள்? விஷ்ணு தானே தன்னிடத்தில் பக்தி துவேஷங்களை எப்படி பண்ணிக்கொண்டாரோ அப்படியேயென்று அறியத்தக்கது. பின்னும் கிருஷ்ணபகவான் தானே கன்றுக் குட்டிகளாக யிருந்துக்கொண்டு தன்னையே தான் மேய்த்துக்கொள்ளவில்லையா? அப்படியேதான் இப்பொழுதும்;

**52.** ஜீவன் பிரம்மமாக யிருந்தால் சிருஷ்டிக்கிற அதிகாரம் இருக்கிறதா? என்று யோசிக்கிறபட்சத்தில் விஸ்வாமித்திரன் சிருஷ்டிக்கவில்லையா? அவர் ஜீவனல்லவோ! விஸ்வாமித்திரன் எந்த தேவதையாவது ஆராதித்து சிருஷ்டி அதிகாரத்தைப் பெற்றானென்று எந்த புராணங்களிலும் சொல்லவில்லை.

**53**. பிரம்மதேவன் முதல் எறும்புவரையிலுள்ள ஜீவர்கள் நித்தியர்களென்றும், ஜீவர்கள் வேறே பரமாத்மா வேறே என்று சிலர் சொல்லுகிறார்கள். மேலும் பிரம்மதேவன் எல்லா ஜீவர்களுக்கும் முந்தியிருந்த ஜீவனென்று சொல்லுகிறார்கள் அப்படிக் கானால் பிரம்மதேவனும் நித்தியமாயிற்று அப்படிக்கு நித்தியனாக யிருக்கின்ற சதுர்முகபிரம்மா வானவன் பகவானுடைய நாபிக்கமலத்தில் உண்டாவதற்கு முன்னிட்டு இருந்திருக்கவேண்டும் அப்படி உண்டாவதற்கு முந்தி இன்ன யிடத்தில் இருந்தானென்று எந்த புராணங்களிலு மகதாதி சிருஷ்டிப் பிரகரணங்களில் சொல்லவில்லை ஆனதினாலே ஆத்மாவை புத்திரனாமாசியென்ற சுருதிவாக்கியப்படி பரப்பிரம்மமே திருமூர்த்திகள் முதல் எறும்பு வரையில் தானாகவே யிருக்கிறது ஜீவர்கள் வேறே பரமாத்மா வேறேயென்று சொல்ல இடமில்லை. பரமாத்மாவே எல்லாமாக விருக்கிறது என்று செவ்வையாக ஏற்படுகிறது.

**54.** பிரம்மத்துக்கு எவ்விடத்திலுமுள்ள சங்கதிகள் தெரியுமே இந்த ஜீவன் பிரம்மமாக யிருக்கிறபட்சத்தில் இதற்கு மவ்விதமாய்த் தெரியவேண்டுமே என்கிறார்கள் அந்தப் பிரம்மம் எங்கும் நிறைந்ததான படியினாலே அவ்வவ்விடத்திலேயிருந்து அறிந்துக்கொள்ளுகிறது அந்தப்படியே இந்த ஜீவனும் இந்த சரீரத்தில் நிறைந்திருப்பதினாலே இதில் நடக்கிற காரியங்களையெல்லா மறிந்துக் கொள்ளுகிறது,

**55.** பிரம்மக்கியானியானவன் திரிகாலவேதியா யிருக்கவேண்டுமென்று சிலர் சொல்லுகிறார்கள் திரிகாலவேதியா யிருந்தால் தான் பிரம்மக்கியானம் ஸ்திரப்பட்டதா யெண்ணவேண்டியதென்று எந்த வேதாந்தத்திலும் சொல்லப்படவில்லை. இந்த முக்காலத்தையும் சோதிடசாஸ்திரங்களும், கர்ன்ன எக்ஷணிமுதலான பிசாசுகளும் சொல்லுகின்றன. அவைகளை பிரம்மக்கியானி யென்று சொல்லலாமோ?

### 56. சிஷியன்.

சுவாமி! இன்னொரு ஆட்சேபனை யிருக்கின்றது.

### ஆசாரியன்.

நீ இவ்விதமாய் ஆட்சேபனை பண்ணிக்கொண்டிருந்தால் பிரம்ம நிஷ்டையில் ததேகத்தியானமா யிருப்பது எப்போ? நீயும் என்னைப்போல புராணங்களைப் பார்த்தால் அந்த ஆட்சேபனைகளுக்கு சமாதானங்கள் ஏற்படும் அப்படி சமாதானங்கள் ஏற்படாவிட்டாலும் ஆத்மஞானத்துக்கு ஒரு கெடுதியுமில்லை.

### சிஷியன்.

ததேகக்தியானமாவ தென்ன?

### ஆசாரியன்.

நீ இதுவரையில் மனிதனாகிய நமக்கு எல்லாப் பொருட்களும் வேணுமென்று எப்படி அபிமானித்தாயோ அப்படியே பிரம்மமாகிய நமக்கு இவைகளினாலே என்ன பிரயோசனமென்று அபிமானிக்காமல் சொஸ் தச்சித்தனாக இருப்பதே ததேகத் தியானம். அதுவே பிரம்மரிஷ்டை.

## சிஷ்யசோதனை ப்ரகரணம்.

### 57. ஆசாரியன்.

ஒ சிஷியனே! நீ கண்கள் உடைத்தாயிருப்பதற்கு ஆத்மதரிசனம்தான் பிரயோசனம்.

### சிஷியன்.

சுவாமி என்னைச் சோதிக்கவேண்டாம்? ஆத்மா பாஞ்ச பூதிக சம்பந்தமல்ல பாஞ்சபூதிக சம்பந்தமாயிருக்கிற இந்த கண்களுக்குத் தென்படாது ஆத்மா யிருக்கிறதென்று புத்தியினால் அறியக்கூடுமேதவிற வேறொன்றினாலு மறியக் கூடாது.

### 58. ஆசாரியன்.

சிஷியனே இன்னும் தபோயோகங்கள் முதலான எவ்வளவோ செய்யவேண்டியிருக்கிறதே அவைகளையெல்லாஞ் செய்து முடித்தாயா?

### சிஷியன்.

சுவாமி மோட்சத்தை யடையவேணுமென்பது என்னுடைய கோறிக்கை. மோட்சத்தை யடைய வேண்டுமென்றால் அதற்கு முந்தி பந்த மொன்றிருக்க வேண்டுமே ஏதாவது என்னைப் பிடித்துக் கொண்டிருந்தாலல்லவா அதில் நின்று விடுதலையாக வேண்டியது எது என்னைப் பிடித்துக்கொண்டிருக்கிறது? என்று தத்துவசோதனை செய்துப்பார்த்ததில் ஒன்றும் என்னைப் பிடித்துக் கொண்டிருக்க வில்லை. ஆனதினால் சதா மோட்சத்திலேயே யிருக்கிறேனென்று தெளிவாய் ஏற்படுகிறது. ஆகையால் நான் ஒன்றும் செய்யவேண்டியதில்லை.

### 59. ஆசாரியன்.

ஒ சிஷியனே! இதுவரையில் நீ எவ்வளவோ பிரயாசைப்பட்டு உன்னையே பிரம்மமாகத் தெரிந்துக்கொண்டிருக்கிறாய் நானே இதைச் சொன்னால் நீ ஒப்புக் கொள்ளக் கூடாதா அல்லது வேதம் தத்துவமஸீ என்று சொல்லியிருக்கிறதே அதையாவது நீ ஒப்புக்கொள்ளக்கூடாதா?

### சிஷியன்.

சுவாமி தாங்கள் அவ்விதமாய்ச் சொன்னபோதிலும் வேதம் அவ்விதமாய்ச் சொல்லியிருந்தபோதிலும் எல்லாம் பரோக்ஷமாக யிருக்கிறதேயல்லாமல் அபரோக்ஷமாக யில்லை. "ஞானமே வமோக்ஷஹா" அறிகிறதுதான் மோக்ஷமென்று வேதம் சொல்லுகிறதேயல்லாமல் பரோக்ஷமாய்க் கேள்விப்படுகிறது மோக்ஷ மென்று சொல்லவில்லையே? ஆனதினாலே யாவரும் தத்துவசோதனை செய்து பிரம்மத்தை யறிந்தால் தான் மோட்சம் இல்லாவிட்டால் யில்லை.

**60.** 1. தத்துவமஸி அது நீயானா என்பதினாலே உபதேசவாக்கியமாயிற்று.

2. "அகம் பிரம்மாஸ்மி" நான் பிரம்மமாகிறேன் என்பதினாலே மேற்கண்ட உபதேசவாக்கியப்படி தத்துவசோதனை செய்துப்பார்த்ததில் சரியாயிருக்கிறதென் றொப்புக்கொண்ட வாக்கியமாயிற்று.

3. "அயமாத்மா" பிரம்மா இந்த ஆத்மா பிரம்மம் என்பதினாலே மேற்கண்ட உபதேச வாக்கியப்படி தத்துவசோதனை செய்துப்பார்த்ததில் மேலே சொல்லியபடி நிச்சயித்த வாக்கியமா யிருக்கிறதென்று ஏற்படுகிறது.

4. பிரக்ஞானம் பிரம்மா ஆராய்ந்து அறிந்த அறிவு, பிரம்மம் அறிவுதான் பிரம்மத்துக்கு ரூபமேயொழிய வேறே வடிவங்கிடையாதென்று அர்த்தமாகிறது.

### 61. ஆசாரியன்.

இன்னம் என்ன யோசிக்கிறாய்?

### சிஷியன்.

சுவாமி அறிந்த வஸ்துவைத் தியானம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன்.

### ஆசாரியன்.

நீ சொன்ன இவைகளெல்லாம் சரியே உன் மனதை சோதித்தேனேயொழிய வேறில்லை. "அகம் பிரம்மாஸ்மி" என்கிற மந்திரத்தை உனக்கு உபதேசிக்கிறேன் அதை ஜெபத்தியானம் பண்ணிக்கொண்டிரு பின்னும் கற்கண்டைக் கட்டியாய் வாயிற் போட்டுக்கொண்டு கற்கண்டினுடைய சுவையை நாக்கு அறிகிறதா? நாக்கின் வழியாய் அறிகிறது ஒன்று இருக்கிறதா? என்று கொஞ்சநேரம் யோசித்துப்பார்த்தால் அப்பொழுது அந்த சுவையை அறியும்படியான அறிவு ஒன்று இந்த சரீரத்தி லிருப்பதாக ஏற்படும் அந்த அறிவானது எப்போதும் புத்திக்குத் தென்பட்டுக் கொண்டேயிருக்கும் அதுதான் பிரம்மதரிசனம் அடியிலிருந்து தெளிந்துவந்தவன் செய்யவேண்டிய காரியம் இது.

### 62. சிஷியன்.

இவ்வளவு சுலபமானதினாலேதான் கட்வாங்கன் பார்த்த கோபஸ்திரீகள் முதலானவர்கள் இரண்டு நாழிகையில் மோட்சத்தை யடைந்தார்கள் இவ்வளவு சுலபமாக ஞானோபதேசம் செய்த தவங்களை ஜெகத்துக்கு சங்கராச்சாரியர் என்று எண்ணி சாஷ்டாங்க தெண்டனிடுகிறேன்.

### 63. ஆசாரியன்.

ஓ சிஷியசிகாமணி! நமக்கு குருதட்சணை கொடுங்காணும்.

### சிஷியன்.

என்ன கொடுக்கும்படிச் சொன்னாலும் அதைக் கொடுக்கிறேன்.

### ஆசாரியன்.

நீ பாகவதாதிப் புராணங்களைப் பார்த்து அவைகளுடைய பொருள்களும் நான் உனக்கு உபதேசம் செய்த பொருள்களும் ஒத்துமையா யிருக்கும்படியான இடங்களில் நீ சந்தோஷப்படுவாயே அதுதான் நமக்கு குருதட்சணை.

### 64. சிஷியன்.

அனுபவத்தினாலும், தத்துவ மணீ முதலாகிய வாக்கியார்த்தங்களினாலும் ஜீவேஸ்வர பேத மில்லையென்று தெரியவருகிறது சிலவிடங்களில் வாசித்துக்கொண்டுவரும்போது ஜீவேஸ்வர பேதமாக ஊகம் ஏற்படுகிறது கைவல்யக்காரர் அத்வைதியாயிருந்தும் அச்சுவத்தம் என்கிற விருட்சத்தில் இரண்டு பட்சிக ளிருக்கின்றன அவைகளில் ஒன்று ஜீவன் ஒன்று ஈஸ்வரனேன்று பேதமாகக் குறிப்பிட்டிருக்கிறான் அச்சந்தேகந் தெளியச் சொல்ல வேண்டும் இதுதான் 56-வது பிரிவில் நான் கேட்கவந்தது.

### ஆசாரியன்.

நீ அத்வைதியாயிருந்தும் தத்துவ சோதனை செய்கிறகாலத்தில் ஜீவேஸ்வர பேதமாகச் சொல்லியிருக்கிறாய் அந்தப்படி விவகாரகாலத்தில் பேதமாகச் சொல்லாவிட்டால் சொல்லும் சங்கதி ஏற்படாது. எப்படியென்றால், சரீரத்தில் முள்ளு தைத்திருக்கிறது என்று சொல்லும்போது முள்ளு யிருக்கிறதாகவும் கண்டுபிடிப்பது பிரயாசம். என்னுடைய வலதுகால் பெருவிரல் நுனியில் முள்ளு தைத்திருக்கிறதென்றால் எவ்வளவு சீக்கிரத்தில் கண்டுபிடிக்கக்கூடும் ஒரே சரீரமாக விருந்தும் ஏற்படும் பொருட்டு வலது காற்பெருவிரல் நுனியென்று பேதப்படுத்திச் சொல்லவேண்டியதாய் நேரிட்டது. இப்படியே சங்கதிக்குத் தக்கபடி இருக்குமென்று அறிந்துக்கொள்ள வேண்டியது.

2. கைவல்யக்காரர் சொன்னபடிக்கு பகவத்கீதையிலும், பாகவதம் கிருஷ்ணாவதார சந்தர்ப்பத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது அந்த அஸவத்த விருட்சமென்பது எப்படி யிருக்கிறதென்று விசாரித்தாயா? மேலே வேர் கீழே கிளையாக யிருப்பதாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. விருட்சத்துக்கு வேர் மேலேயும் கிளை கீழேயும் இருக்குமா? இப்படிப்பட்ட விருட்சமே யில்லை. அப்படிப்பட்ட விருட்சம் இருந்தாலல்லவா அதில் இரண்டு பட்சிகள் அல்லது ஒன்று இருக்கிறதாயென்று விசாரிக்க வேண்டும், பிறக்காதவனுடைய சாவைப்பற்றி விசாரப்பட்டவனுண்டோ? விவாகமே இல்லாதிருக்கும் பொழுது தீர்ப்பு உண்டாயி ருக்குமோ? அறுபதுநாழியும் தியாஜியமென்று எழுதியிருக்கிறதென்றால் அப்படிப்பட்ட பஞ்சாங்கம் ஒன்று இருக்குமென்று எண்ணுகிறவனும் உண்டோ! அந்த அஸவத்த விருட்சத்து மாயாவிருட்சமென்றும், சமுசார விருட்சமென்றும் சொல்லப்படுகிறது அப்படிப்பட்ட விருட்சத்தை இருக்கிறதாய் ஒப்புக் கொண்ட

மாயாவாதிகள் ஜீவேஸ்வர பேதமாகச் சொல்லுவார்கள் இந்த சங்கதியைப்பற்றி பாகவதத்தில் எப்படி சொல்லப்படுகிறதென்றால் ஓ பகவானே! எல்லாம் நீயாகயிருக்க மாயாவிருட்சத்தில் பேதமாகச் சொல்லப்படுகிறாய் எப்படிச் சொன்ன போதிலும் அப்படிப்பட்ட ஸ்தோத்திரங்களெல்லாம் உன்னையே வந்தடைகிறதென்று ஸ்ரீ கிருஷ்ணபகவானை ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள்.

## உபன்னியாசம்.

**2.** பிரம்மவித்தையாவது? பிரம்மத்தை அறிவிக்கும்படியான வித்தை பிரம்மவித்தை என்னப்படும்.

வித்தையென்றால் படிப்பு, படிப்பு படித்துவரவேணுமேயல்லாமல் கர்மத்தினால் வரமாட்டாது வர்ணாச்ரமாசார தருமங்கள், நித்திய நைமித்தியாதி கருமங்கள், தீர்த்தயாத்திரைகள், பக்தி வைராக்கியங்கள் முதலானவைகளால் பிரமக்யான முண்டாகவேணுமென்று சிலர் சொல்லுகிறார்கள். பரிட்சித்தானவன் மேலே சொல்லிய கருமங்கள் யாவும் தப்பாமல் செய்து அந்தப்படியே பிரஜைகளையும் செய்யும்படிக்குச் செய்வித்தும், தருமதேவதையை நாலுபாதங்களோடு கலியுகத்தில் நடக்கும்படியாக நடப்பிவித்தும், பிரம்மக்கியானம் வராமல் சுகராலேயல்லவோ பிரம்மக்யானத்தை யடைந்தான். பிரம்மக்கியானத்திற்கு உபதேசம் காரணமாக யிருக்கிறதேயொழிய கருமம் காரணமாகவில்லை. இன்னம் மோட்சத்தை யடைந்த அநேகர் பிரம்மவித்தையை உபதேசித்துக்கொண்டு மோட்சத்தை யடைந்தார்கள். பாகவதாதி புராணங்களால் ஏற்படுகிறது." நகர்மணா" என்கிற சுருதியிலே கருமத்தினால் பிரம்மக்யானம் வருகிறதா யிருக்கிறபட்சத்தில் கருமத்தைச் செய்துக்கொண்டே யிருக்கும்போது உபதேசமில்லாமல் பிரம்மக்யானம் வந்துவிடவேணும் ஆனதினால் இந்தப் பிரம்மவித்தையை வாசித்தே ஆகவேணுமென்று சித்தாந்தப்படுத்தி இந்த கிரந்தத்துக்கு பிரம்மவித்தையென்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது இதை அத்தியாத்மவித்தையென்று சொல்லலாம்.

இவ்வளவு சங்க்ஷேபமாக வேதாந்தசாஸ்திர மிருக்குமா? இந்த சங்க்ஷேப கிரந்தத்தினால் மோக்ஷம் கிடைக்குமா என்கிற சங்கைக்குப் பரிகாரம்.

கட்வாங்க மகாராஜா இரண்டு நாழிகையில் ஞானோபதேசம் பண்ணிக் கொண்டு மோட்சத்தை அதற்குள் அடைந்தானென்று பாகவதத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

அப்போது வேதாந்தசாஸ்திரமானது எவ்வளவு சங்க்ஷேபமாகயிருக்க வேணுமோ அதை யோசித்துக்கொள்ளவேண்டியது,

ஆனால் பரிட்சித்தானவன் விஸ்தார கிரந்தமான பாகவதத்தைச் சுகரிடத்தில் ஏன் கேட்டானென்றால் குதோகலத்தினால் கேட்டான் இன்னுமிருந்தால் இன்னுங் கேட்பான்.

அப்படி விஸ்தார கிரந்தத்தைக் கேட்டவன் தான் மோட்சத்தை அடையவேண்டுமென்கிறதாக யிருக்கிறபட்சத்தில் கட்வாங்கனுக்கு மோட்சம் வந்தது பொய்யாக யிருக்கவேணும் பரிட்சித்து கேட்ட பாகவதத்தை யாவருங் கேட்டு மோட்சம் அடைந்திருக்கவேண்டும்.

ஆனதினால் யாவரும் மோட்சத்துக்கு வேண்டிய இந்த கிரந்தத்தில் சொல்லியிருக்கிறது அவ்வளவு தெரிந்துக்கொண்டு பின்பு குதோகலத்தினால் விஸ்தார கிரந்தங்களைக் கேட்டார்கள்.

**1**-வது பிரிவைக் குறித்து உபன்னியாசம் அஞ்ஞானம் என்று ஒன்று இருப்பதாக அஞ்ஞானத்தினா வறிந்தார்களோ அல்லது ஞானத்தினா லறிந்தார்களோ அஞ்ஞானத்தினால் அறிந்திருந்தால் அப்படி அறிந்தவிஷயமானது தப்பாக யிருக்கவேண்டும் அல்லது ஞானத்தினால் அஞ்ஞான மிருப்பதாக அறிந்திருந்தால் அப்போது இவனுக்கு ஞானமிருக்கிறதென்றும், அதனால் அறியக்கூடுமென்று ஏற்படுகிறது. இதனாலேயும் 4-வது பிரிவினாலேயும் அஞ்ஞானமில்லையென்றும், ஞானந்தா னிருப்பதாயும் தெளிவாக ஏற்படுகிறது.

**2.** மாயை வந்து மூடிக்கொண்டதென்று சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்லுவதினாலே மாயை இவ்விதமாய் வந்து இன்னத்தினாலே மூடினதென்று அவர்களுக்குத் தெரிந்திருக்கலாம். எந்த ரூபமாய் வந்து எதினாலே மூடினதென்றால் அவர்களுக்குச் சொல்ல சக்தி யில்லை. மாயை என்பது ஒரு தேவதையுமல்ல மனிதர்களை வஞ்சிக்க சிருஷ்டியானதுமல்ல மாயாதத்துவமென்று ஒன்று இருக்கிறது அது வந்து மூடுகிறதென்று சொல்லுவார்களாக்கும் அதனுடன் பிறந்த மகதத்துவம், அகங்கார தத்துவங்கள் இவர்களை என்ன செய்கின்றன மாயா தத்துவத்துக்கும் மட்டில் நம்மை மூடும்படியான வல்லமையை யார் தந்தார் அப்படி பகவானே மாயையை உண்டுபண்ணி மனிதர்களை வஞ்சிக்கும்படியே விருப்பானே யானால் அவன் பகவானாவானா? அப்படிப்பட்ட வஞ்சகன் நமக்கு நல்ல பதவியைக் கொடுப்பானோ கொடுக்கமாட்டான்.

தமிழ்ப்பேசுகிறேன் தெலுங்கு பேசாமல் பண்ணிவிட்டது அந்த மாயை தானோ?

அப்பியாசம் செய்யாததினால் வரவில்லை.

இன்னமும் எனக்கு மிலேச்சபாஷை தெரியாது அப்படித் தெரியாமல் பண்ணி விட்டது அந்த மாயைதானோ?

ஞானமார்க்கத்தில் பிரவேசிப்பதற்கு சோம்பேரித்தனத்தை அடைந்திருக் கிறவர்கள் மாயை வந்து மூடுகிறதென்றும் அஞ்ஞானமொன் றிருக்கிறதென்றும் நல்ல காலம் பிறக்க வேண்டுமென்றும் பலவிதமாகச் சொல்லி காலத்தை

விருதாவாகக் கழிக்கிறார்கள் ஆனதினால் மேற்கண்ட 2-வது பிரிவில் சொன்னதே சரி.

**3.** மோக்ஷார்த்தியானவன் பக்தி செய்யவேண்டுமென்று சிலரும், ஸத்கருமம் செய்யவேண்டுமென்று சிலரும், சாதனசந்துஷ்டியத்தை யடையவேண்டுமென்று சிலரும், மகாவாக்கியார்த்தங்களை விசாரிக்கவேண்டுமென்று சிலரும், யோகாப்பியாசஞ் செய்யவேண்டுமென்று சிலரும் இன்னும் அனேகவிதமாய்ச் சொல்லி சந்தேகம் உண்டு பண்ணுவதினாலே அப்படிப்பட்ட சந்தேகங்கள் நிவர்த்தியாகும் பொருட்டு இன்னதுதான் செய்யவேண்டும் மற்றது செய்ய வேண்டியதில்லையென்று அந்த மோக்ஷமென்கிற வார்த்தையிலேயே நியாயங் காண்பிக்கப்பட்டது.

**4.** இருக்கிறது ஒரே ஞானம் ஸ்வரத்தை யறிந்தால் ஸ்வாக்கியானம், தாளத்தை யறிந்தால் தாளக்கியானம் இப்படியே பிரம்மத்தை யறிந்தால் பிரம்மக்கியானம், பிரம்மக்கியானமென்று தனியாய் ஒன்றில்லையென்று தாத்பரியம்.

**5.** எனக்கு தீர்க்க ஹிர்ஸவ ஸ்திரீ ஜராவியாதிகளோடு கூடிய சரீரம் ஏன் வந்ததென்று ஆட்சேபித்துக்கொள்ளலாம் கெற்பத்திலிருந்து வராத அடையாளங்களைப்பற்றி ஆட்சேபித்துக் கொள்ளக்கூடாது, பூர்வ ஜென்மம் இருக்கிறதென்று சொல்லுகிற சாஸ்திரங்களை மிலேச்ச ஜாதிகள் ஒப்புக் கொள்ளு கிறதில்லை. அவர்களைக்கூட சம்மதிக்கும்படியாய் கெற்பத்திலேயே உண்டான குறைவை சிட்சையாகக் காட்டி சிட்சைக்கு முந்தி குற்றம் நடந்திருக்கவேண்டும் அப்படி குற்றம் செய்தகாலம் பூர்வஜென்மமாக யிருக்கவேண்டுமென்றும் காண்பித்து அவர்களுடைய மதங்கள் இதனால் கண்டிக்கப்படுகின்றது.

**7**-வது முதல் **30**-வது பிரிவுவரையில் விவகாரகாலமானதினாலே போதமாகும் பொருட்டு ஜீவேஸ்வரபேதமாகச் சொல்லப்பட்டது,

**7**-வதுமுதல் **41**-வது பிரிவுவரையில் ஒரேபிரகரணமாயிருக்கலாம் விவேகம் உண்டாவதற்கு இரண்டு பிரகரணங்களாகச் சொல்லப்பட்டது.

முன் பின் ஜென்மம் இல்லையென்கிற மிலேச்ச ஜாதிகள் மதங்கள் கண்டிக்கப்படுகின்றன.

**16,17,18** - இவைகளினாலே கர்மேந்திரியங்களுக்கு மேற்பட்டது ஞானேந்திரியங்களென்றும், ஞானேந்திரியங்களுக்கு மேற்பட்டது அந்தக்கரணங்களென்றும், அந்தக்கரணங்களுக்கு மேற்பட்டது ஆத்மாவென்றும் இந்திரியாண்ணியா பாரண்ணியா ஹூஹூ என்கிற பகவத்கீதை வசனப்படிக்கு ஆத்மதரிசனம் பண்ணப்பட்டது.

**3** - க்கு அறிகிற காரியமாவது பிரம்மத்தினுடைய சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹார காரியங்களையும் தன்னையுமென்று யெண்ணத்தக்கது.

**50**-க்கு நித்தியனாக யிருக்கிறானென்றால் பிரம்மமாக யிருக்கிறானென்றும், சாந்தத்தை யடைந்தானென்றால் பிரம்மத்தை யடைந்தானென்றும், ஸமபாவனை யென்றால் பிரம்மபாவனையென்றும், ஸத்தியவாதியென்றால் பிரம்மவாதியென்றும் தாத்பரியம். மண் மண்ணோடு போயிற்றென்றும், விண் விண்ணோடு போயிற்றென்றும் ஜனங்கள் வழக்கமாகச் சொல்லுகிறார்கள். அதில் விண்ணென்பது பிரம்மம், பிரம்மம் பிரம்மத்தோடு கலந்ததென்று தாத்பரியம். இவ்விதமாக ஒவ்வொரு பெயருக்கும் அர்த்தம் பண்ணிக்கொள்ளத்தக்கது. சிலர் பிரம்மக் ஞானத்தை அடையவேண்டியதற்குச் சத்கருமங்கள் செய்யவேண்டுமென்று சொல்லுகிறார்கள்.

இவர் ஸத்தாயிருந்தாலல்லவோ இவர் செய்யும்படியான கருமம் ஸத்தாகும். விழுப்பினால் செய்த கருமம் விழுப்பல்லவா! ஸத்தென்றால் பிரம்மம். பிரம்மக்ஞான மில்லா தவன் அசத்து. அவன் செய்த கருமம் அசத்தாகும்.

பக்தியும் ஞானத்தில் அடங்கியிருப்பதினாலே அதைத் தனியாயெடுத்து இந்தக் கிரந்தத்தில் சொல்லப்படவில்லை.

ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்கள் அவைகளை அபிமானித்த விஸவதைஜஸ் பிராங்கர்கள் ஸத்துவம் ரஜோத்மோகுணங்கள் பஞ்சகோசங்கள், ஜாக்கிரம், சொப்பனம், சுழுப்தி இவை முதலானவைகள் அவித்தையினால் அத்திரோபமென்றும், கைவல்லிய முதலிய பூர்வீக கிரந்தங்களில் சொல்லி யிருக்கின்றன. அவித்தையென்றால் படிக்கவில்லையென்று அர்த்தமாகிறது அத்தியாரோபமென்றால் இல்லாததை விருதாவாக ஏற்றிக்கொண்டதென்று ஏற்படுகிறது. படிக்காத மூடத்தனத்தினால் ஏற்றிக்கொண்ட மேற்கண்ட ஸ்தூல சூட்சுமாதிகள் கிளிஞ்சலில் எப்படி வெள்ளி யில்லையோ? அப்படிப்போலவென்று அவைகளைச் சொல்லாமல் தள்ளிவிடப் பட்டிருக்கின்றன. மூடத்தனத்தினால் மேற்கண்ட ஸ்தூல சூட்சு மாதிகளை மாத்திரம் சொல்லுவார்கள் இன்னமுங்கூட அனேகத்தை விருதாவாக ஏற்றிக்கொள்ளுகிறார்கள்.

உ
சிவசுப்ரமணியர் துணை.

# வேதாந்த ஜட்ஜிமெண்டு.

## இரண்டாம் பகுதி.

ஸர்வ லோகாதீதமாயும், தேஜோ மயமாயும், சச்சிதானந்தமாயும் ஞானஸ்வரூபமாய் விளங்காநின்ற விவேகமாகிய குரு மூர்த்தியை அவிவேகத்தாற் றாமதகுணம் மேலிட்டு நானெனதென்கின்ற மோகபாசமுடைய சம்சார விருட்சரூபனாய், புத்ர மித்ரகளத்ராதிகளாகிய கிளைகளைத் தாங்கி காமாக்னியால் வெதும்பி ஜலாபேட்சை கொண்டதுபோலவும் வலையி கெப்பட்டு விடுவித்துக்கொண்டு போகின்ற மானைப்போலவும், ஜீவரூபனான சீடன் அதிதீவிர பரிபாகத்தாற் றரிசித்து நமஸ்காரமுஞ்செய்து கை கூப்பி ஆனந்தபாஷ்பங்களைச் சொரிந்து உடல், பொருள், ஆவியுமாசானுக்குத் தத்தம்பண்ணி குருராயனே நினது சிருபாகடாட் சத்தால் ஜனன மரணமென்கின்ற பவக்கடலையும் தேகாதிப்ரபஞ் சங்களிட வுற்பத்திலயங்களையும் ஜீவபா ஐக்யானு சந்தானமுந் தெரியச்சொல்லி கிர் தகிர்த்தியனாகச் செய்யவேண்டுமென்று நிஜ பக்திபாவத்தாற் றுதிக்க அவ்வாசான் சந்தோஷத்தாற் கிருபை கூர்ந்து ப்ரமரகீடக ஞாயமாய் சீடனை அருகிலழைத்து சன்னிதானத்திலிருத்தி பரிபூரண த்ருஷ்டியாற் பார்த்து சமரசத்தால் மனத்திற் கருதி ஆபாதக மஸ் தபரியந்தமுந் தமது கைகளினாற் றடவி அவலோகன மனன அங்கமென முத்தீட்சையுஞ்செய்து சொல்லத் தொடங்கினார்.

கேளும் சுத்தப்பிரம்மத்திற் கற்பிதமான மாயை யுற்பத்தி யானதாற் கன்மஜனி தங்களான தேகங்களுமுண்டாய் அவைகளில் அந்தக்கரணங்கள் ப்ரதிபலித்ததால் சுவர்க்க நரகம் இகபர மெனவும் பக்தமோட்சம், சராசரம், ஆதி யனாதி, ஏக மனேகம், அண்டபிண்டம், கண்டமகண்டம், பின்னாபின்னம், கார்யாகார்யம், பர்யாப்ர்யம், ஸ்தூலஞ் சூட்சுமம், ஞான மஞ்ஞானம், சத்தசத்து, ப்ரவர்த்தி நிவர்த்தி, இதமகிதம், மானாபிமானம், கன்மமகன்மம், தன்ம மதன்மம், சுத்த மசுத்தம், பக்குவ மவபக்குவம், ஏற்றக்குறைச்சல், தூரஞ் சமீபம், தூக்க முழிப்பு, லாபாலாபம், காம நிஷ்காமம், சீதள வுஷ்ணம், யுக்தாயுக்தம், ஆசை நிராசை, சோக மோகம், ஆபத்து சம்பத்து, சுபாசுபம், இராகத்வேஷம், இவைமுதலான தொந்தங்களாலே பிறந்திறக்கின்றவர்கள் அவயவங்களோடு கூடின தேகந் தானல்லவென வறிந்து தான் தேகியென மனதில் நிஜத்தை யறிந்தவனே மோட்சாதிகாரியென வறியப்படும்.

கேளும் இப்பூமியின்கண் அண்டஜ ஸ்வேதஜ உத்பிஜ ஜராயுதங்களென நான்குவித யோனியிலும் உற்பத்தியான வெழுவகைத் தோற்றத்திற் றெய்வ பேதங்கள் 11-லட்சம், மானிடபேதங்கள் 9 லட்சம், மிருகபேதங்கள் 10-லட்சம், பறவைபேதங்கள் 10-லட்சம், நீர்வாழும்பேதங்கள் 10-லட்சம், ஊர்வனபேதங்கள் 15-லட்சம், மரம் கொடி செடி மலை தாபரங்கள் 19-லட்சங்கூடி 84-லட்ச தேகபேதங்களில் இகலோக பரலோக ஞாபக சக்தியுடையது உத்தம சரீரமெனவும்,

பரலோகமறியாம லிகலோகமாத்திரமறிந்து யிருக்கின்றது மத்திம சரீரமெனவும் இகபரலோகங்க ளிரண்டையு மறியாமல் சலனமில்லாது தாபரமா யிருக்கின்றவை அதமசரீரமெனவும் இவ்விதமான உத்தம மத்திம அதம சரீரங்களில் மத்திம அதமசரீரங்களுக்கு மோட்சங்களில்லாமல் உத்தம சரீரங்க ளாகிய மானிட தேகங்களுக்கே மோட்சாதிகார சக்தி கிடைத்திருக் கின்றது. அப்படிக் கிருந்தும் அம்மானிடரில் பாஷண்டர் இகலோக காமி பரலோக காமி நிஷ்காமி முமுட்சு அப்யாசயோகி ஆரூடஞானியென வெழுவகைப் பேதத்தால் ஒப்பி யிருப்பார்கள் அவர்க ளெப்பேர்ப்பட்டவர்களென்றால்,

### பாஷண்டர்.

வேதசாத்திரங்களைப் பொய்யென்று விரோத கன்மங்களைச் செய்துக் கொண்டிருப்பார்.

### இகலோககாமி.

தாராபுத்ர தனாதிகட்காக இகசவுக்கியங்களே சத்யம் பரலோகமென்கின்றது பொய்யென்று நடத்திக்கொண்டிருப்பார்.

### பரலோககாமி.

சுவர்க்காதிசுகங்களுக்கு வேண்டிய கன்மங்கள் ஆசரித்துக் கொண்டிருப்பார்.

### நிஷ்காமி.

வேதசாத்திரங்களை விசாரித்து சித்தசுத்தியால் பெரியோரைச் சேவித்துக் கொண்டிருப்பார்.

### முமுட்சு.

இராகத்வேஷங்க ளில்லாமல் நித்யாநித்ய வத்து விவேகமறிந்து சாதன சதுஷ்டயமடைந்து பிரம்மவிசாரணை செய்துக்கொண்டிருப்பார்.

### அப்பாசயோகி.

சகலமு மனித்யமென வெண்ணி மகாவாக்யோபதேசத்தால் ஸ்தூல சூட்சும காரணாதி தேகங்களிட பேதமறிந்து வேதாந்த சிரவண மனன நிதித்யாசனாதிகள் செய்துக்கொண்டிருப்பார்.

### ஆரூடஞானி.

சிவோகமென்கின்ற பாவத்தால் ஜீவேஸ்வர பேதங்களை மறந்து சர்வ கர்மரகிதனாய் சதானந்தனாகிய ஜீவன்முக் தனெனச் சொல்லப்படுவன்.

ஆகையால் 84-லட்ச தேகபேதங்களில் மானிடதேகமாய் ஜனிக்கின்றது அரிதாகுமென வறிந்து முதன்மையான இராகத்வேஷ ப்ரகரணமென்றுஞ் சொல்லியிருக்கின்ற பதின்மூன்றுகுணங்களை மோட்ச அபேட்சையுடைய

முமுட்சுக்கள் விடத்தக்கது ஏனென்றால், இக்குணங்களை நீக்காதபட்சத்தில் ஜன்ம பரம்பரையாய் சம்சாரதாபத்ரயங்களான பவபந்தங்களை யனுபவிக்கும் பொருட்டு கிடைத்த ஜடபதார்த்தமான இத்தூலதேகம் நசிக்குங் காலையில் உபாதிகள் சம்பவித்து சித்தப்ரமையால் ஈஷணத்ரயத்திற் புத்தியடைந்து தன்னை யறியாமலும் ஈசனை யறியாமலும் யமன்கை யாயுதத்திற் காகாரமாய் ஜீவர்கள் அகப்படுகின்றார்கள் ஆகையால் அப்பேர்ப்பட்ட ஆபத்து சம்பவிப்பதற்கு முன்னமே அக்குணங்களைத் தகித்து விவேகத்தைக் கிடைக்கும்படிச் செய்துக்கொண்டால் மோட்சாதிகாரிகளா யிருப்பார்கள் ஜீவனுடன் சம்மந்தப்பட்டு நாளுக்குநாள் வளர்ந்திருக்கும் இக்குணங்களுய விர்த்திகளையும் அவைகளாற் கிடைக்கும் அனுபவமும் ஏற்படுத்தியிருக்கும் படத்திற் பாம்பினிட தலையிலக்கமும் அதினிட வாலிலக்கமும் பார்க்கின் கிடைக்கும், துக்கங்களான ஜனனங்களும் அப்படத்திலுள்ள ஏணியினிட ஆரம்ப விலக்கமும் மேல் அந்தியவிலக்கமும் பார்க்கின் பின் அடையும் பரசவுக்கியமான சாதனங்களை யறியலா மா கையால் இக்குணங்களை விடவேண்டும் இவையன்றி இப்படத்திற் காய்களை வைத்தும் ஆடலாம் அதெப்படியெனின், ஓர் பாச்சிகையினிட முதற்பக்கம் 1, இரண்டாம்பக்கம் 2, மூன்றாம்பக்கம் 3, நான்காம்பக்கம் 4, எனக் கணக்குப்போட்டு இரண்டுபேர் அல்லது மூன்றுபேர் ஒவ்வொருத்தர் ஒவ்வொரு காயை அப்படத்தினிட முதலிலக்கத்தில் வைத்து அப்பாய்ச்சிகையை யாட கண்ட கணக்கின்படி முதலிலக்கத்தில் வைத்த காய்கள் அறைகள் தாண்டி வருகிறபோது பாம்பின் தலையிற் காய்விழுந்தால் அக்காயை பாம்பின் வாலில்வைத்து மறுபடியும் அதுமுத லாடவேண்டும் எணியினிட இலக்கத்தில் காய் விழுந்தால் அக்காயை அந்த ஏணிபினிட மேலிலக்கத்தில் வைத்து அதுமுதல் ஆடவேண்டும் அறைகள் தப்பிப்போகுமென்று கிரமமாய் அறைகளுக்கு இலக்கம் எழுதியிருக்கப்பட்டது கடைசீ அகங்காரமெனும் அறையில் காய் விழாமல் மேல் 122-வது இலக்கமுடைய ஸ்தானத்திற் காய் விழுந்தால் ஆட்டம் ஜெயித்ததுபோலவும் ஜன்மமு மில்லையென்றும் அறியவேண்டியது.

## இராகத்வேஷப்ரகரணம்.

இராகம், த்வேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம், ஈரிஷை, அசூயை, டம்பம், தற்பம், ஆங்காரம் இப்பதின்மூன்றிற்கும் விவரம்.

## இராகம்.

பரஸ்திரீக மனம் பண்ணவேணுமென்கிற சித்தம் இராகமேனப்படும் இதற்குச் சாட்சி ராவணன் படத்தினிட விலக்கம்.

## த்வேஷம்.

தனக்கு அபசாரம் பண்ணினால் பதில் அபகாரம் பண்ண வேண்டுமென்கிற சித்தம் த்வேஷமெனப்படும். சாட்சி இரண்யன்.

### காமம்.

கிரக கிராம தன தான்யங்கள் மேன்மேலும் சம்பாதிக்கவேண்டுமென்ற சித்தம் காமமெனப்படும். சாட்சி நரகாசுரன்.

### குரோதம்.

தான் சம்பாதித்த பதார்த்தத்துக்கு விக்கினம் பண்ணினால் வயாக்ரரூபமாய்க் கோபிக்கின்ற சித்தம் குரோதமெனப்படும். சாட்சி பகாசுரன்.

### லோபம்.

தான் சம்பாதித்த பதார்த்தத்தில் ஒரு காசு கேட்டால் கொடுக்கிறதில்லை யென்ற சித்தம் லோபமெனப்படும், சாட்சி துரியோதரன்.

### மோகம்.

தான் சம்பாதித்த பொருளில் அதிக விசுவாசமா யிருக்கின்ற சித்தம் மோகமெனப்படும். சாட்சி தசரதமகாராஜன்.

### மதம்.

ஐஸ்வரியத்தினால் ஆணுவம் படைத்து கிரியாக்ரித்யந் தெரியாமல் நடக்கின்ற சித்தம் மதமெனப்படும். சாட்சி கார்த்தவீரியார்ச்சுனன்.

### மாச்சர்யம்.

யாதாமொருவன் தன்னிலும் அதிகமாகவிருந்தால் அவனைப் பார்த்துப் பொறாமையுடைய சித்தம் மாச்சரியமெனப்படும். சாட்சி சிசுபால தந்தவக்ரன்.

### ஈரிஷை.

தனக்கு வந்த துக்கம் பிறருக்கும் வாராதோவென்ற சித்தம் ஈரிஷையெனப் படும். சாட்சி அருணாட்சதன்.

### அசூயை.

தனக்கு வந்த சுகம் பிறருக்கும் வரலாமோவென்ற சித்தம் அசூயை யெனப்படும். சாட்சி பௌண்டரீக வாசுதேவன்.

### டம்பம்.

தான் பண்ணின புண்ணியத்தைப் பிறர் பார்த்து நன்றாயிருக்குதென்று துதிக்கவேணுமென்ற சித்தம் டம்பமெனப்படும். சாட்சி அம்பரீஷன்.

### தற்பம்.

நான் பெரியவன் எனக்குச் சமானம் ஒருவருமில்லையென்ற சித்தம் தற்பமெனப்படும். சாட்சி சதகண்டராவணன்.

### ஆங்காரம்.

ஏண்டா என்னை யறியாயா நான் பிடித்த காரியம் விடுவேனா நீயா யெனக்குப் புத்திசொல்லுகிறவனென்ற சித்தம் ஆங்காரமெனப்படும். சாட்சி மதுகைடபன்.

ஆகையால் இப் பதின்மூன்று குணங்களை விடவேண்டியது. ஏனென்றால், ராவணன் முதல் மதுகைடபன் வரையில் இப் பதின்மூவரும் வரப்ரசாதிகளாயும், மகாபலபராக்ரமசாலிகளாயு மிருந்தும் ஒவ்வொரு குணத்தால் ஒவ்வொருவன் புத்ர மித்ர களத்ர பந்துவர்க்கங்களுடன் இகபரசவுக்கியங்களை யனுபவியாமற் சத்து ருக்களால் பிராண ஆணி, ராஜிய ஆணி, பந்துநாச முதலான அனேக அனர்த்தங்கள் அனுபவித்தது சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றபடியால் இப் பதின்மூன்றும் நரகத்துக்கும், ஜனன மரணத்துக்கும், சகல சம்சாரபவபந்தங்களுக்கும் ஏதுவாயு மிருக்கின்றமையால் முமூட்சுக்கள் முதலானவர்கள் விடவேண்டியது இதற்கு நிவர்த்தி எப்படியெனின், சாதுசங்கத்தாலும் சாஸ்திர விசாரணைகளாலுந் தன்னிட விவேகத்தினாலும் பெரியவர்களிட ஆசீர்வசனத்தினாலேயும் குருகுலவாசமுஞ் செய்ததினால் கிருபை பெற்று அவர்கள் போதிக்கின்ற ஞானமாகிய வச்சிராயுதத் தால் வெட்டி மோட்சத்தை யடையவேண்டியது. பூர்வத்தில் இக்குணங்களால் ஆபத்துகள் சம்பவித்தது சந்தேகமென்று வாதிக்கின்ற ஒரு திருஷ்டாந்தஞ் சொல்லப்பட்டது. ஓர் வேடனிட மனிநாதத்தைக் கேட்டு சிரவணானந்தத்தினால் மந்தபுத்தியாய் அவன் வைத்திருக்கும் வலையி லகப்பட்ட மானையும், பிரகாசிக்கின்ற தீபத்தைப் பார்த்து ஆகாரமெனக் கருதி சுத்திலும் பறந்து நசித்த விட்டிற்பறவையையும், கொஞ்சம் இரையைத் தூண்டின் முள்ளிற் கோர்த்துப் போட்ட வதனை ருசிபதார்த்தமென அற்பபுத்தியால் மிழுங்கப்போய் சிக்கிக்கொண்ட மீன்கூட்டங்களைப் பார்க்கின் ஒவ்வொரு குணத்தா லொவ்வொரு பிராணி நற்காலத்தில் ஆபத்து அடைகிறது நிச்சயமாக விருக்கின்றமையால் இக்குணங்கள் எல்லாம் ஏகமாய் நிறைந்திருக்கும். அஞ்ஞானிக்கு விசேஷ ஞானசாதனமான அறிவு கிடைக்க மாட்டாது. ஆகையால் இக் குணங்களை விடத்தக்கது.

மகானுபாவனே இல்லறமில்லாதிருந்து மரணமடைந்தவனுக்குப் பரலோகமில்லையென்று சிலர் சொல்லும் வாக்கியத்தினிட அனுபவத்தைத் தெரியச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கக் கேளும்.

கலியாணஞ் செய்துக்கொள்ளுதல் வலையிலகப்படும் மானைப் போலவும்,

மனைவிபோதனைக்கு வசப்படுதல் - ஆட்டிவைத்த குரங்குபோலவும்,

குடும்பத்தைப் பரிக்குதல் - வண்ணான் கழுதைபோலவும்,

விஷயங்கள் அபேட்சிக்குதல் - விளக்கைநாடி விழுகின்ற விட்டிலைப் போலவும்,

மடவாரிட சுகத்தை யிச்சிக்குதல் - சேற்றில் விழும் பன்றியைப்போலவும்,

திரவிய ஆபேட்சைக் குட்படுதல் - பின்தொடருகிற ஆட்டுக்கிடாவைப் போலவும்,

மனைவி மக்களைக் கார்க்குதல் - மாடு மேய்க்கின்றவனைப்போலவும்,

தன்மங் கொடுத்துப் பலனைத் தேடு தல் - சந்தைக் கோமுட்டியைப்போலவும்,

இவ்வண்ணமாக ஜீவர்கள் அனுபவிக்கின்றமையால் இல்லறத்தானா கவிருக்கினும், பிரம்மச்சாரியாயிருக்கினும் இவைகளால் நிஷ்பலமென்று நீக்கி முதன்மையா யனுபவத்திற்குக் கொண்ட வரவேண்டிய சாதன சதுஷ்டயங்களை விவரிக்கின்றோம்.

நித்யாநித்யவஸ்து விவேகமெனவும், இகமுத்ரார் தபலபோக விராகமெனவும், சமாதிஷட்க சம்பத்தியெனவும் முமுட்சுதத்வ மெனவும் நான்குவிதங்கள்.

## நித்யா நிக்யவஸ்துவிவேகம்.

பிரம்மமே நித்யம்சகலனாம ரூப பாஞ்சபூதமுமுதலான தேகாதிப்ரபஞ்சங்கள் யாவையும் அனித்யமென வறிதல்.

## இகமுத்ரார் தபலபோகவிராகம்.

இகத்திற் பெண்டு பிள்ளை கிரக குடும்ப தன தான்யங்களி லிருக்கின்ற ஆசையும், பரலோகத்தில் ரம்பா சம்போகமு முதலான கோரிக்கையை மனதில் இச்சியாமல் ஜகத்துக்குக் காரண கர்த்தாவா யிருக்கின்ற சுவாமியினிடத்தில் விசுவாசமாயிருப்பது.

## சமாதிஷட்கசம்பத்து.

சமம் தமம் உபாதி திதீட்சை சமாதானம் சிரத்தை இவை 6-க்கும் விவரம்,

### சமம்.

மனோநிக்ரகம் பண்ணுகிறது.

### தமம்.

ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை விஷயங்களிற்போய்விழாமல் மறிப்பது.

### உபரதி.

சகல பாபகன்மங்களை விட்டு சகல புண்யகன் மங்களைப்பண்ணிப் பகவானுக்கு ப்ரீதிபண்ணுகிறது.

### திதீட்சை.

சகலமும் போகின்றதைத்தொட்டு துக்கப்படாமலும் சகலமும் வருகின்றதற்கு மகிட்சியில்லாமலும் சமபுத்தியோடே கூடியிருப்பது,

### சமாதானம்.

பெரியோர்களிடத்தில் சேர்ந்து சிரவணம்பண்ணுகிறகாலத்தில் மனதும் இந்திரியங்களும் விஷயங்களிற்போய் விழாமல் மறிப்பது,

### சிரத்தை.

வேதாந்த சாஸ்திரத்தினிடத்திலும், குருவினிடத்திலும், அதிக விஸ்வாசத் தோடு கூடியிருப்பது,

### முமுட்சுத்வம்.

அக்கினியில் விழுந்தவன் அதிசீக்கிரமாய் ஜலத்தைத் தேட வோடினதுபோல எப்போ மோட்சங் கிடைக்குமென்ற அதிதீ விரபக்குவத்தோடு கூடியிருப்பது.

ஆகையால் இந்நான்கு சாதனங்களை யடைந்தவர்களே மோட்சாதிகாரிக ளென்று அறியப்படும்.

## இச்சை, பத்தி, வைராக்யம் இம்மூன்றுக்கும் விவரம்.

### இச்சை.

பசி,, தாகம் நிமித்யமாய் அன்னபாணாதிகள் கிரகிக்கவேண்டியதும், ஜலமலாதிகளை விகற்பம் பண்ணவேண்டியதென்ற விர்த்திக்கு இச்சையெனப்படும். இது சம்பவித்தகாலத்திற் செய்தால் சாதகமாயிருக்கும் இல்லாவிட்டால் பாதகமாக விருக்கும் ஆகையால் இவைகளாற் புண்ய பாபங்கள், சுவர்க்க நரகங்கள், பந்த மோட்சங்க ளில்லையென்று அறியவேண்டியது.

### பக்தி.

வேதாந்த சாஸ்திரங்களிடத்திலும் சர்வாந்தர்யாமியாகிய ஆசானிடத்திலும் உண்டாகின்ற விஸ்வாசத்திற்கு பக்தியெனப்படும்.

### வைராக்யம்.

மனோவாக்காய கன்மங்களான திரிகரணங்களால் யதார்த்தமாயும், அதிக வந்தனமான நடக்கைக்கு வைராக்யமெனப்படும். ஆகையால் முமுட்சுக்கள் பக்திவைராக்யங்களுடன் நடக்கவேண்டியது ஏனென்றால் பூர்வத்தில் கட்வாங்க மகாராஜன் பக்திவைராக்யங்களால் இரண்டு நாழிகையில் மோட்ச மடைந்தாரென் று சாஸ்திரங்களிற் சொல்லியிருக்கின்றமையால் பக்திவைராக்யங்களை கிடைக்கச் செய்துக்கொண்டால் மோட்சத்துக்கு யேதுவாயிருக்கும்.

### குணத்ரயங்கள்.

சாத்மீகம், ராஜதம், தாமதம்.

### சாத்மீகம்.

சன்மார்க்கமும் தெய்வசம்பத்துங் கிடைத்திருக்கும்.

### ராஜதம்.

லோகம் தேகவாசனை, சாஸ்திரவாசனை கிடைத்திருக்கும்.

### தாமதம்.

ராட்சச சம்பத்து கிடைத்திருக்கும்.

ஆகையால் விவேகிகளானவர்கள் இவை தங்கள் கிட்டே வரவொட்டாமல் எப்போதும் சாத்மீககுணத்தை வகித்திருக்க வேண்டியது.

தீன தயாளனே சம்சாரதாபத்ரயங்களை நசிக்கச்செய்து குரு புத்ரனாகச் செய்யவேண்டுமென்று வினயத்தால் விண்ணப்பஞ்செய்ய ஆசான் அதிக விசுவாசத்தோடு ஆனந்தித்து கேளும் மார்க்கத்தில் ஒரு பாழான கிணற்றின்மேல் புல் மூடியிருக்க இருட்டில் ஒருவன் நடந்து பள்ளத்தை யறியாமல் விழுந்ததுபோல அஸ்திமாம்ச ரக்த சர்ம பூரிதமான பெண்தேகத்தைப் பார்த்து மோகத்திலகப்பட்டு விஷயானந்தமாகிய அபிமானத்தால் ஜீவர்கள் ப்ராப்தாதீனர்களாய் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அஞ்ஞானத்தை நீக்கவேண்டி பிரம்மோபாசனை செய்யின் சம்சாரவ்யா பாராதிகள் நசிக்கும் விஷயசுகத்தி லிச்சைவைத்தால் விவேகமும் நாசமடையும் அவ்வுபாசனையைத் தொட்டுவிடாமல் சுருதி ஸ்மூர் திவாக்யங்களை குருமூலமாய் கிரகித்து சிரவண மனனநிதியாசனஞ் செய்தால் முக்தி கிடைக்கும். மாயை யனுசரிக்காமற் போகின்றதே ஸ்வரூபக்யானம் காணப்படுகின்றதெல்லாம் அதுர்சியமாகிறபடியால் முக்கியமாய் தேகத்தினிட வுற்பத்தியை அறியச்சொல்லுகின்றோம்,

### ஸ்தூலபஞ்சீகரணம்.

ப்ரிதிவ்யாதி பஞ்சபூதங்களில் முதன்மையான ஆகாயத்தில் வாயு, வாயுவினிடத்தில் அக்னி, அக்னியினிடத்தில் அப்பு, அப்புவினிடத்தில் பிரிதிவி, இப்பஞ்சபூதங்களை ஒவ்வொன்றை யிரண்டுபங்காக்கி யவைகளில் முற்பாதி பாகமிருக்க பிற்பாதிபாகத்தை நான்குபாகங்களாக்கி மற்ற பூதங்களுடைய பாகங்களுடன் சேர்த்து இருபத்தைந்துங் கூடி, பஞ்சீகரணமாயின அதெப்படி யெனின்,

**ஸ்தூலபஞ்சிகரண படம்**

| | ஆகாசதத்வம் | வாயுதத்வம் | அக்னிதத்வம் | அப்புதத்வம் | ப்ரிதிவிதத்வம் | |
|---|---|---|---|---|---|---|
| குணம் ஐந்து | ஆசை | ஓடல் | பசி | மஜ்ஜை | ப்ரிதிவி பாதி பாகம் அஸ்தி | ப்ரிதிவி அம்சம் |
| குணம் நான்கு | வெட்கம் | இருத்தல் | தாகம் | அப்பு பாதி பாகம் சிறுநீர் | மாம்சம் | அப்பு அம்சம் |
| குணம் மூன்று | பயம் | கிடத்தல் | அக்னி பாதி பாகம் நித்திரை | வேர்வை | சர்மம் | அக்னி அம்சம் |
| குணம் இரண்டு | லச்சை | வாயு பாதி பாகம் கடத்தல் | மைதனம் | உதிரம் | நரம்பு | வாயு அம்சம் |
| குணம் ஒன்று | ஆகாயம் பாதி பாகம் மோகம் | நிறுத்தல் | சோம்பல் | சுக்லம் | ரோமம் | ஆகாய அம்சம் |
| | ஆகாயபஞ்சகம் | வாயுபஞ்சகம் | அக்னிபஞ்சகம் | அப்புபஞ்சகம் | ப்ரிதிவிபஞ்சகம் | |

## பஞ்சபூதங்களினிட தன்ம கன்மங்கள்.

**தன்மம்.**

ப்ரிதிவிக்கு - உறவு.
அப்புவுக்கு - கூறுகிறது.
அக்னிக்கு - சுடுகிறது.
வாயுவுக்கு - அசைகிறது.
ஆகாயத்திற்கு வெளியாயிருக்கிறது.

**கன்மம்.**

ப்ரிதிவிக்கு- தரித்திடல்.
அப்புவுக்கு பதஞ்செய்தல்.
அக்னிக்கு- வேகவைத்தல்.
வாயுவுக்கு சேர்த்திடல்.
ஆகாயத்திற்கு இடங்கொடுத்தல்.

## பஞ்சபூதங்களினிட வர்ணமும், அதிதேவதைகளும்.

**வர்ணம்.**

பரிதிவிக்கு - பொன்.
அப்புவுக்கு - படிகம்.
அக்னிக்கு - சிகப்பு.
வாயுவுக்கு- புகை.
ஆகாயத்திற்கு - நீலம்.

**அதிதேவதை.**

ப்ரிதிவிக்கு - பிரமன்.
அப்புவுக்கு - விஷ்ணு.
அக்னிக்கு - ருத்ரன்.
வாயுவுக்கு- மயேசன்.
ஆகாயத்திற்கு- சதாசிவம்

## ஸ்தூலமனனம்.

பஞ்சீக்ருத பஞ்ச மகா பூதத்திலான இத்தூலதேகமென் றறிந்த அறிவேதான் தன்னா லறியப்பட்ட இத்தூலதேகந் தன்னை யறியமாட்டாதாகையா லிது ஜடம், இத்தூலதேகந் தானன்று இத்தூலதேகத்தினுடைய ஆனிவிர்த்திகளினாலே வருகிற சுகதுக்கந் தனக்குத் தேவையில்லை. இத்தூலதேகம் போனால் தான் போக வேணு மேயிது போனாலுந் தான் போகவில்லை. அதெப்படி தான் போகவில்லையெனின், பூர்வத்தில் தான் அசரீரியாயிருந்து பண்ணின கன்மத்தினால் தனக்கு இந்த சரீரம் வந்ததென்று மிந்த சரீரம் பண்ணுங் கன்மத்தினால் தனக்கு இனிமேல் சரீரம் வருமென்றும் இந்த சரீரத்துக்கு விலட்சணனான தன்னை யறிந்தா லினி மேல் தனக்கு சரீரம் வாராதென்றும் பூதபௌஷிய வர்த்தமான காலத்ரயத்திலேயு மிந்த சரீர மிருந்தாலும் போனாலுந் தான் போகவில்லை. இந்த வியஷ்டி தூலசரீரத்துக்கு சாட்சியான தான் பிரம்மாதி பிபீலிகாந்தமான சமஷ்டி தூலசரீரங்களிலேயும் அணு ரூபமாயிருந்து சாட்சியா பறிகிறபடியினாலே இந்த சமஷ்டி தூல சரீரங்களுந் தானன்று, இந்த வியஷ்டி சமஷ்டி தூலசரீரங்கள் பஞ்சீக்ருத பஞ்சமகா பூதங்களினுடைய அப்சங்களா யிருக்கின் றமையா லிந்த வியஷ்டி சமஷ்டி தூல சரீரங்களை சாட்சியாயறிந்த அறிவேதான்.

## ஸ்தூலசரீர அத்யாசம்.

இந்த தூலசரீரத்தினி. - த்தில் அத்யஸ்தமாய்த் தோன்றுகின்றது விசுவனெனவும், விராட்டெனவும், அபிமானமும், ஜாக்ரா அவஸ்தையும், நேத்ரத்தானமும், யுக்தபோகமும், அகாரமாத்ரயும், ராஜதகுணமும், க்ரியாசத்தியும், பிரம்மமுர்த்தியும், சிவதத்வமும், மனுஷதத்வமும், ஷட்பாவவிகாரங்களும், ஷட்கோசமும் ஷடாதாரமும், லட்சயத்ரயமென்கின்ற நாமங்களும், அன்னமய கோசமும், ஜாதிவர்னமும், குலகோத்ரமும், ஆசிரமம், வேஷம், நாமம், ரூபம், பாஷை, தேகம், ஆயு, க்ரியை முதலிய அகம்போந்தாவென்கின்ற அத்யாசங்களை யறிந்த அறிவே தான் தன்னாலறியப்பட்ட இந்த அத்யாசங்கள் தன்னை யறிய மாட்டாதாகையால் ஜடமிந்த அத்யாசங்கள் தானன்று இந்த அத்யாசங்கள் தூலசரீர த்தினுடைய அத்யாச மிவைகளால் அடையப்பட்ட சுகதுக்கந் தனக்குத் தேவை யில்லை இந்த அத்யாசங்களே தானானால் இவை போனால் தான் போகவேணுமே இவை போனாலுந் தான் போகவில்லை ஆகையா லிந்த அத்யாசங்களை சாட்சியா யறிந்த அறிவே தான் இந்த அத்யாசங்களை விசாரிக்குமிடத்து காலத்ரயத்திலேயு மில்லவேயில்லை இருக்கிறது தூலதேகம்.

## ஸ்தூலபஞ்சபூதத்தினிடத்திற் றோன்றுகின்ற அத்யாசங்கள்.

### ப்ரிதிவிக்கு.

சதுர்த்தசபுவன, நவகண்ட, குருட்சேத்ர, கும்பகோணம், சிதம்பரம், திருவண்ணாமலை, காஞ்சி, காளத்தி முதலான புண்ய க்ஷேத்ர அத்யாசங்களுண்டு.

### அப்புவுக்கு.

கங்கை, யமுனை, காவேரி, கோதாவரி, துங்கபத்ரி, சிந்து முதலான அத்யாசங்களுண்டு.

### அக்னிக்கு.

வடவானல், சடராக்னி, கோபாக்னி, தாபாக்னி, உதராக்னி, மூலாக்னி, காமாக்னி முதலான அத்யாசங்களுண்டு.

### வாயுவுக்கு.

மலைமாருதம், சுழல்காற்று, தென்றல், மேற்காற்று, வாடைக்காற்று, பெருங்காற்று முதலான அத்யாசங்களுண்டு.

### ஆகாயத்திற்கு.

அஸரீர - அவகாச, மடாகாச, கடாகாச, வனாகாச, மகதாகாச, ஜலாகாச, கோபுராகாச முதலான அத்யாசங்களுண்டு.

ஆகையால் இந்த அத்யாசங்களை விசாரிக்குமிடத்து காலத்ர யத்திலேயு மில்லவேயில்லை. யிருக்கின்றது பஞ்சபூதம்.

### ஸ்தூலபஞ்சதன்மாத்ரைகள்.

இந்த அபஞ்சீக்ருத பஞ்ச தன் மாத்திரையினிடத்தில் அத்ய ஸ்தமாய்த் தோன்றுகின்ற தூலப்ரபஞ்ச மெனக்கில்லை. அதெப்படியெனின், அஸ்தி மாம்ச முதலான விருபத்தைந்து தத்வத்தைக்குறித்து தூலசரீரமென்று சொல்லலாமெனின், இந்த விருபத்தைந்து தத்வங்களுக்கும் வெவ்வேறு நாமங்க ளிருக்கின்றபடி யாலும், குட்டை நெட்டைகளைக்குறித்தும் வேவ்வேறு நாமங்களிருக்கின்றபடியாலும், வர்ணங்களைக்குறித்தும், வெவ்வேறுநாமங்க ளிருக்கின்றபடியாலும், பஞ்சீக்ருத பஞ்ச மகாஸ்தூல பூதங்களைக்குறித்து ஸ்தூலசரீரங்களென்று சொல்லலா மென்றால் அவை கட்கும் வெவ்வேறு நாமங்க ளிருக்கின்றபடியால்,

சப்தத்தைத்தவிர ஆகாயமில்லை.
சப்த ஸ்பரிசத்தைத் தவிர வாயுவில்லை.
சப்த ஸ்பரிச ரூபத்தைத்தவிர அக்னியுமில்லை.
சப்த ஸ்பரிச ரூப ரசத்தைத்தவிர அப்புவில்லை.
சப்த ஸ்பரிச ரூப ரச கந்தத்தைத் தவிர ப்ரிதிவியுமில்லை.

ஆகையா லிந்த ஸ்தூலசரீரங்களை விசாரிக்குமிடத்து காலத்ரயத்தி லில்லவேயில்லை. இருக்கின்றது அபஞ்சீக்ருத பஞ்சதன்மாத்திரைகள் இந்த பஞ்ச தன்மாத்ரைகளிடத்தில் அத்யஸ்தமாய் தனக் கெதிராய்த் தோன்றுகின்ற பஞ்சீக்ருத பஞ்சமகாஸ்தூல பூதங்களு மிதின் கார்யமான வியஷ்டி, சமஷ்டி ஸ்தூலசரீரங்களு மிவைகட்கு ஆரோபமாய்ச் சொல்லப்பட்ட நாமங்களு மிதைக் குறித்து வந்த ஆபாசங்களும், சப்த சாஸ்திரங்களும், தர்க்கசாஸ்திரமும், மீமாம்சம், யோகசாஸ்திரம், வேதாந்தசாஸ்திரம் முதலானவை வந்தியா புத்ர ககனாரவிந்த மித்யா புருஷன் போலவே காலத்ரயத்திலேயு மில்லவேயில்லை.

## சூட்சுமபஞ்சீகரணம்.

இப்பஞ்சபூதங்களை ஒவ்வொன்றை யிரண்டுபங்காக்கி முற் பாதிபாகமிருக்க பிற்பாதியை நான்குபாகங்களாக்கி இதரபூதங்களுடைய பாகங்களுடன் பாகித்துச் சேர்த்தது பஞ்சீகரணமாயின அதெப்படியெனின்,

**சூட்சுமபஞ்சீகரண படம்**

| | அந்தக்கரணம் | ப்ரானேந்திரியம் | ஞானேந்திரியம் | பஞ்சதன்மாத்ரை | கன்மேந்திரியம் | |
|---|---|---|---|---|---|---|
| ப்ரிதிவி தத்வம் | ஆங்காரம் இருதயம் | ப்ராணன் இருதயம் | க்ராணம் மூக்கு | கந்ததன் மாத்ரை | ப்ரிதிவி பாதி பாகம் பாயுரு குதம் | ப்ரிதிவி அம்சம் |
| அப்பு தத்வம் | சித்தம் நாபி | அபானன் குதம் | சிங்குவை நாக்கு | அப்பு பாதி பாகம் ரஸதன் மாத்ரை | குய்யம் உபஸ்தம் | அப்பு அம்சம் |
| அக்னி தத்வம் | புத்தி நேத்ரம் | உதானன் கண்டம் | அக்னி பாதி பாகம் சட்சு நேத்ரம் | ரூபதன் மாத்ரை | பாதம் கால் | அக்னி அம்சம் |
| வாயு தத்வம் | மனது கண்டம் | வாயு பாதி பாகம் ஸர்வசரீரம் | த்வக்கு ஸர்வம் | ஸ்பரிசதன் மாத்ரை | பாணிகை | வாயு அம்சம் |
| ஆகாய தத்வம் | ஆகாயம் பாதி பாகம் ஞாதுரு புருவமத்தி | ஸமானன் நாபி | ஸ்ரோத்ரம் செவி | ஸப்ததன் மாத்ரை | வாக்கு வாய் | ஆகாய அம்சம் |
| | ஆகாயபஞ்சகம் | வாயுபஞ்சகம் | அக்னிபஞ்சகம் | அப்புபஞ்சகம் | ப்ரிதிவிபஞ்சகம் | |

இந்த ஞாதுரு சமானனுடன் சேர்ந்து ஸ்ரோத்ர யிந்திரியத் தினிடமாய் சப்தத்தை யறிந்து வாக்கினால் வசனிக்கும்.

இதே மனோரூபனாய் வியானனுடன் சேர்ந்து த்வக்கீந்திரியத்தினிடமாய் ஸ்பரிசத்தையறிந்த கைகளினாற்கொடுத்துவாங்கும்.

இதே புத்திரூபனாய் உதானனுடன் சேர்ந்து சட்சுவிந்திரியத்தினிடமாய் ரூபத்தை யறிந்து பாதங்களால் கமனாகமனஞ் செய்யும்.

இதே சித்தரூபனாய் அபானனுடன் சேர்ந்து சிங்குவை யிந்திரியத்தினிடமாய் ரசத்தை யறிந்து உபஸ்தத்தால் ஆனந்தமடையும்.

இதே ஆங்காரரூபனாய் ப்ராணனுடன் சேர்ந்து க்ராண இந்திரியத்தினிடமாய் கந்தத்தை யறிந்து குதத்தால் மலஜலாதிகளை விசர்க்கம்பண்ணும்.

## ஸ்தூலசரீரம்.

ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, ப்ராணாதி வாயுக்கள் 5, சப்தாதிவிஷயங்கள் 5, அந்தக்கரணங்கள் 4.

இந்த 24 - தத்வங்கள் கூடிநின்ற சமயம் ஸ்தூலசரீரம், விராட்டு, அபிமானி, விஸ்வன், க்ரியாசக்தி, ரஜோகுணம், லலாடம், நேத்ரஸ்தானம், தனிப்போகம், ஜீவான்மா, அகாரம், விவகார ஜீவன், ஜாக்ரதை, அவஸ்தை.

இந்த ஜாக்ர அவஸ்தை சகல நாம ரூப ப்ரபஞ்சங்களிடத்தில் தூலதேகத்தோடு வியாபித்து தான் பிரத்தியட்சமாய்த் தனு கரண புவன போகங்களை யனுபவிக்கின்றது.

## சூட்சுமசரீரம்.

ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, வாயுக்கள் 5, மனம், புத்தி 2.

இந்த 17 - தத்வங்கள் கூடிநின்ற சமயம் சூட்சுமசரீரம்' இரண்யகர்ப்பம், அபிமானி, தைஜசன், சத்வகுணம், இச்சாசக்தி, கண்டத்தானாம், இச்சாபோகம், உகாரம், அந்தரான்மா, ஸ்வப்னாவஸ்தை.

இந்த ஸ்வப்னாவஸ்தை துலதேக சம்பந்தமில்லாமல் நாம ரூப ப்ரபஞ்சங்களிடத்தில் தான் மனோரூபனாய் வியாபித்து சர்வ போகங்களையும் நினைவுமாத்ரமா யனுபவிக்கின்றது.

## காரணசரீரம்.

தான் கண்டதைப் பிறருக்குச் சொல்லப் புலப்படாததினாலே இது கூடிநின்ற சமயம் இருதயம், ஞானசக்தி, அபிமானி, ப்ராக்யன், ஆனந்தபோகம், பரஆன்மா, மகாரம், தாமதகுணம், சுழுப்தி, அவஸ்தை.

இந்த அவஸ்தை ஒரு கிணற்றி லொரு வஸ்து விழுந்திருக்க அதைக் கண்டு கொண்டுவர ஒருவன் கிணற்றி லிரங்கி பார்க்குங்கால் சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்களோடு கூடியிருந்தும் தான் ஜலத்தால் சூழ்ந்திருக்கின்றமையால் பிறருக்குச்

சொல்ல சக்தியில்லாததுபோல இந்த சுழுப்தி அவஸ்தையை மாயை ஆவரித் திருக்கின்றதால் ஜீவனும் அனுபவித்ததைச் சொல்லத் தோன்றாம லிருக்கின்றது.

## கோசங்கள்.

| | | |
|---|---|---|
| ஆங்காரம் சமஷ்டியுடன் கூடில் | - | அன்ன மயகோசம், |
| மனது வாயுவுடன் கூடில் | - | ப்ராணமயகோசம். |
| சித்தம் ஞா துருவுடன் கூடில் | - | ஆனந்தமயகோசம். |
| மனது கன்மேந்திரியங்களுடன் கூடில் | - | மனோமயகோசம். |
| புத்தி ஞானேந்திரியங்களுடன் கூடில் | - | விஞ்ஞான மயகோசம் |

## ஒன்றையொன்றறியும்.

சப்தமுதலான நாமரூபாத்மக விஷயங்களை சுரோத்ராதி ஞானேந்திரியங்க ளறியும்,

ஞானேந்திரியங்களை அந்தக்கரணங்க ளறியும்.

அந்தக்கரணங்களை ஜீவனறியும்,

ஜீவனை ஜீவசாட்சி யறியும்,

இவை யெல்லாவற்றையும் அறிந்த வறிவேதான் அறியும் பொருள்

அறியப்படும் பொருள்.

கடாதிகளை யறிந்த விந்திரியங்கள் கடாதிகளாகாவாம்.

இந்திரியங்களிடமா யறிந்த அந்தக்கரணங்கள் இந்திரியங்களாகாவாம்.

அந்தக்கரணங்களையறிந்தஜீவன் அந்தக்கரணங்களாகாவாம்

ஜீவனை யறிந்த ஜீவசாட்சி ஜீவனாகாவாம்.

இப்படி ஒன்றையொன்று அறியும். இவைகட்கெல்லாம் மேலான சாட்சி சைதன்யமாத்தமாயிருக்க அதை யறிகிற அறிவு இல்லாமையால் இந்திரிய கோசரமாயிருக்கும். சகல ப்ரபஞ்சங்களும் சைதன்ய விவகாரமாக விருப்பதால் ததாகாரமாயிருந்து அறியவேண்டியது.

## ஒன்றுக்கொன்றுவிசேஷம்.

ஞானவிந்திரியங்க ளில்லா மல் விஷயங்கள் தோன்றாது.

அந்தக்கரணமில்லாமல் இந்திரியங்கள் தோன்றாது.

ஜீவனில்லாமல் அந்தக்கரணங்கள் தோன்றாது.

ஜீவசாட்சியில்லாமல் ஜீவனிலை தோன்றாது.

## இதற்கு இதுவிஷயங்கள்.

நாமரூபப்ரபஞ்சமும் இந்திரியங்களுக்கு விஷயம்.

இந்திரியங்கள் காரணங்களுக்கு விஷயம்.

கரணங்கள் ஜீவனுக்கு விஷயம்.

ஜீவன் ஜீவசாட்சிக்கு விஷயம்.

சாட்சியும் விவேகஞானத்துக்கு விஷயம்.
விவேகஞானமும் ப்ரம்மசைதன்யத்துக்கு விஷயம்.
பரிபூரண சைதன்யமும் ஒன்றுக்கு விஷயமன்று.

ஆகையால் இந்த வறிவேதானென்று அறியவேண்டியது.

## ப்ராந்தியால் அடையும் தாபத்ரயமென்னும் துக்கத்துக்கு நிவர்த்தி.

துக்கம் எப்போ போகும்? சரீரம்போனால்,
சரீரம் எப்போ போகும்? கன்மம் போனால்,
கன்மம் எப்போ போகும்? இராகத்வேஷம்போனால்,
இராகத்வேஷம் எப்போ போகும்? அபிமானம்போனால்,
அபிமானம் எப்போ போகும்? அவிவேகம்போனால்,
அவிவேகம் எப்போ போகும்? அஞ்ஞானம்போனால்,
அஞ்ஞானம் எப்போ போகும்? ஆத்மஞான முதயமானால்,

ஆத்மஞான மெப்போ கிடைக்கும்? பக்தி வைராக்யத்தால் சாதன சதுஷ்டயங்கிடைத்து சத்குருவினிடத்தில் சத்காலட்சேபமான சிரவண, மனன, நிதித்யாசனங்களால் ஆத்மானாத்ம விசாரணை செய்யின் ஆத்மஞானங் கிடைக்கும் மற்றெவ்விதத்தாலும் ஞானங் கிடைக்கமாட்டாது.

## ஸ்தூலசூட்சுமசரீரப்ப்ரமைகள்.

வர்னப்ரமை, மந்திரப்ரமை, வாரப்ரமை, அபகீர்த்திப்ரமை, ஆஸ்ரமப்ரமை, தந்திரப்ரமை, நட்சத்ரப் மை, ஸ்தோத்ரப்ரமை, மதபேதப்ரமை, யந்திரப்ரமை, கரணப்ரமை, நிந்தைப்ரமை, சரிதைப்ரமை, ஸ்தானப்ரமை, யோகப்ரமை, இகலோகப்ரமை, க்ரியைப்ரமை, மூர்த்திப்ரமை, விரதப்ரமை, பரலோகப்ரமை, யோகப்ரமை, நவக்ரகப்ரமை, உபவாசப்ரமை, தெய்வப்ரமை, டம்பாப்ரமை, திதிப்ரமை, கீர்த்திப்ரமை, புண்யப்ரமை, பாபப்ரமை இவைமுதலான ப்ரமைகள் கானலில் நீரும், கிளிஞ்சலில் வெள்ளியும், கயற்றிற் பாம்பும், கட்டையிற் கள்ளனும் காண்கின்றது போலவே நிஷ்ப்ரபஞ்ச ஸ்வரூபத்தில் மாயாப்ரக்ருதி, மகதத்வ அகங்காரதத்வ பஞ்ச தன்மாத்ரைகள், தூலசூட்சுமாதி ஜகத்ப்ராந்தி காண்கின்றது. அப்படி காணப்படுவா னேனெனின், அஞ்ஞானத்தினாலும் அவிவேகத்தினாலும் காண்கின்ற ப்ராந்திக்கு நிவர்த்தி எப்படியென்றால், கானலில் நீரும், கிளிஞ்சலில் வெள்ளியும், கயற்றிற் பாம்பும், கட்டையிற் கள்ளனும், காலத்ரயத்திலில் லாததுபோல இந்த ப்ராந்திகள் எவையுமில்லை. அகண்ட பரிபூரண சச்சிதானந்தஸ்வரூபமே தானாய் விளங்குகின்றதென வறிய வேண்டியது.

## லயம்.

ஆகாயத்தினிட வெளியாம்சத்தில் ப்ரிதிவினிட கடினாம்சங் கலந்தால் வாக்குலயம்.

வாயுவினிட சலனாம்சத்தில் ப்ரிதிவினிட கடினாம்சங் கலந்தால் பாணிலயம்,

அக்னியினிட தேஜோம்சத்தில் ப்ரிதிவினிட கடினாம்சங் கலந்தால் பாதம் லயம்.

அப்புவினிடத்ரவாம்சத்தில் ப்ரிதிவினிட கடினாம்சங் கலந்தால் குய்யம்லயம்.

ஆகாயத்தினிட வெளியாம்சத்தில் அப்புவினிட த்ரவாம்சங் கலந்தால் சப்தம்லயம்

வாயுவினிட சலனாம்சத்தில் அப்புவினிட த்ரவாம்சங் கலந்தால் ஸ்பரிசம்லயம்.

அக்னியினிட தேஜோம்சத்தில் அப்புவினிட த்ரவாம்சங் கலந்தால் ரூபம் லயம்.

ப்ரிதிவினிட கடினாம்சத்தில் அப்புவினிட த்ரவாம்சங் கலந்தால் கந்தம்லயம்.

ஆகாயத்தினிட வெளியாம்சத்தில் அக்னியினிட தேஜோம்சங் கலந்தால் சுரோத்ரம்லயம்.

வாயுவினிட சலனாம்சத்தில் அக்னியினிட தேஜோம்சங் கலந்தால் தவக்கு லயம்.

அப்புவினிட த்ரவாம்சத்தில் அக்னியினிட தேஜோம்சங் கலந்தால் சிங்குவை லயம்,

ப்ரிதிவினிட கடினாம்சத்தில் அக்னியினிட தேஜோம்சங் கலந்தால் க்ராணம் லயம்.

ஆகாயத்தினிட வெளியாம்சத்தில் வாயுவினிட சலனாம்சங் கலந்தால் ஸ்மானன்லயம்.

அக்னியினிட தேஜோம்சத்தில் வாயுவினிட சலனாம்சங் கலந்தால் வுதானன் லயம்.

அப்புவினிட த்ரவாம்சத்தில் வாயுவினிட சலனாம்சங் கலந்தால் அபானன்லயம்.

ப்ரிதிவினிட கடினாம்சத்தில் வாயுவினிட சலனாம்சங் கலந்தால் ப்ராணன் லயம்.

அப்புவினிட த்ரவாம்சத்தில் பிரிதிவினிட கடினாம்சங் கலந்தால் அகங்காரம் லயம்.

அக்னியினிட தேஜோம்சத்தில் அப்புவினிட த்ரவாம்சங் கலந்தால் சித்தம் லயம்.

வாயுவினிட சலனாம்சத்தில் அக்னியினிட தேஜோம்சங் கலந்தால் புத்தி லயம்.

ஆகாயத்தினிட வெளியாம்சத்தில் வாயுவினிட சலனாம்சங் கலந்தால் மனது லயம்.

பிரிதிவி அப்புவிற் கறைந்தொடுங்கும்.

அப்புவும் அக்னியிற் சுவறியொடுங்கும்.
அக்னியும் வாயுவில் அணைந்தொடுங்கும்.
வாயுவும் ஆகாயத்தில் உயர்ந்தொடுங்கும்.
ஆகாயமும் விட்சேபசக்தியி லொடுங்கும்.

விட்சேபசக்தியும், ஆவறணசக்தியும் மூலப்ரக்ருதியின் தாம தகுணமாத்ரமாய் ஆலமரம் ஆலின் விரையி லொடுங்கினாற்போல சகலமும் ஒடுங்கி யதார்த்தபதார்த்தமான பிரம்மத்திலொடுங்கும்.

ப்ரிதிவி தத்வமொன்றுமிறக்கில் ஆகாரமில்லை.
மழைமறுக்கில் ஜலமில்லை.
தேயுவில்லாதிருந்தால் பாகமில்லை.
வாடைதென்றலில்லா விட்டால் வாயுவியக்கமில்லை.
ஆகாயமிறக்கில் அவகாசமில்லை.

மாயையும் மாயாப்ரதிபிம்பருமிறக்கில் சகல சமயத்திற்கும் தெய்வமில்லை. பிரம்மமில்லையோவெனில், ஒருத்தருக்கும் அறிவில்லை.

## சூட்சும மனனம்.

இந்த சூட்சும சரீரத்தினிடத்தில் தோன்றுகின்ற ஆரோபங்களை விசாரிக்குமிடத்தில் காலத்ரயத்திலில்லை. 24-தத்வங்களான அபஞ்சீக்ருத பஞ்ச தன்மாத்ரையினிடத்திற் றோன்றுகின்ற சூட்சுமப்ரபஞ்சமில்லை. 24-தத்வங்களைக்குறித்து சூட்சு மசரீரமென்று சொல்லலாமென்றால் 24-தத்வங்களுக்கும் வெவ்வேறு நாமங்களு மிருக்கின்றபடியாலும் 24-தத்வங்களும் 24-விர்த்திகளாயிருக்கின்றபடியினாலேயும் ஞானம், சமான வாயு, ஸ்ரோத்ர இந்திரியம், வாக்கேந்திரியம் இந்த நான்கு விர்த்தியும் ஸ்பரிசதன்மாத்ரையைத்தவிர வேறில்லை. சித்தம், அபானவாயுவு, சிங்குவையிந்திரியமும். குய்யம் இந்த நான்கு விர்த்தியும் ரசதன்மாத்ரையைத் தவிர வேறில்லை. அகங்காரம், ப்ராணவாய்வு, க்ராணேந்திரியமும் குதம் இந்த நான்குவிர்த்தியும் கந்ததன் மாத்ரையைத் தவிர வேறில்லை. இந்த சூட்சுமதேகத்தை விசாரிக்குமிடத்து யில்லை. யிருக்கிறது அபஞ்சீக்ருத பஞ்ச தன்மாத்ரைகள் இதனிடத்தில் அத்யஸ்தமாய்க் காண்கின்ற விதனுடைய கார்யங்களான சமஷ்டி, வியஷ்டி, சூட்சும சரீரங்களும் இவைகளுக்குச் சொல்லப்பட்ட சாஸ்திரங்கள் முதலானவை வந்தியாபுத்ர ககனாரவிந்த மித்யாபுருடன் போலவே இல்லவேயில்லை,.

## சூட்சுமசரீர அத்யாசம்.

இந்த சூட்சு மசரீரத்தினிடத்தில் ஆரோப மேதெனின், தைஜசன், இரண்யகர்பம், அபிமானம், ஸ்வப்னாவஸ்தை, கண்டஸ்தானம், ஸ்வ இச்சாபோகம், சாத்மீககுணம், இச்சாசக்தி, விஷ்ணு மூர்த்தி. ப்ராணமய மனோமய விஞ்ஞானமய கோசங்களும், நான் சொல்லுகிறவன் ஊமை, கொடுக்கிறவன் கையில்லா தவன்,

நடக்கிறவன் முடவன், மலவிசற்ஜிக்கிறவன் பண்ணமாட்டா தவனென்கின்ற கன்ம இந்திரிய அத்யாசங்களும், லௌகீக வைதீக சப்த பேதங்களும், சீத ஊஷ்ண மிர்து கடின ஸ்பரிசபேதங்களும், நீல ஸ்வேத ரக்தபேதங்களும், தித்தித்தல், புளித்தல், கசத்தல், கார்த்தல், கூர்த்தல், துவர்த்தலாகிய பேதங்களும், சுகந்த துற்கந்த பேதங்களான சப்தாதிவிஷயங்களுடைய அத்யாசங்களும், கேட்கிறவன் செவிடன், பார்க்கிறவன் குருடன், ருசியறிகிறவன் அரோசிகனென ஞானவிந்திரியங்களுடைய அத்யாசங்களும், பசியுடையவன், பசியில்லாதவன், தாகமுடையவன், தாகமில் லாதவன். பலமுடையவன், பலமில்லாதவன், தும்முகிறவன், இருமுகிறவன் என வாயுக்களுடைய அத்யாசங்களும், நான் சங்கற்பன், விகற்பன், காமித்வேஷி, புத்திவான், விவேகி, சபலனென சம்சய நிச்சய காஞ்சல்ய அபிமானமென்கின்ற அந்தக்கரணங்களுடைய அத்யாசங்களும், வைராக்யம், பொறுமை முதலான சாத்மீக விகாரமும், காமக்ரோத முதலான ராசத விகாரமும், சோம்பல் நித்திரை முதலான தாமத விகார குணத்ரயங்களுடைய அத்யாசங்களை யறிந்த வறிவே தான் தானல்லாமற் றனக் கன்ய மொன்றுமில்லை.

---

## காரணசரீரப்ரகரணம்.

இந்த காரணசரீரத்தை அறியச்செய்யும் விஷயத்தில் ஒன்று மில்லையென வறிந்த வறிவேதான் தன்னா லறியப்பட்ட விந்தக் காரணசரீரந் தன்னை யறிய மாட்டாதாகையால் ஜடம் இந்த காரணசரீரந்தானன்று இந்தக் காரணசரீரம் மகதத்வத்தினாலாவது இந்த காரணசரீரத்தினுடைய ஆனிவிர்த்திகளினாலே வருகிற சுகதுக்கந் தனக்குத் தேவையில்லை. இந்த காரணசரீரமே தானானால் இது போனாற்றான் போகவேணுமே இது போனாலுந் தான் போகவில்லை. அதெப்படியெனின், சமாதி அவஸ்தையில் இந்தக் காரணசரீரம் போனாலும் தான் காரணாத்மகமாயிருந்து திரும்பவும் விர்த்திவந்தபின்பு சுகமாயிருந்தேனென்று தானிருந்து அனுபவஞ் சொல்லுகிறபடியினாலே தான் போகவில்லை. இந்த வியஷ்டி காரணசரீரத்துக்கு சாட்சியான தான் பிரம்மாதி பிபீலிகாந்தமான சமஷ்டி காரணசரீரங்களிலேயும் இதற்குக் காரணமான மகதத்வத்தினிடத்திலேயும் அணுரூபமாயிருந்து சாட்சியா யறிகிறபடியினாலே இந்த வியஷ்டி சமஷ்டிக் காரண சரீரங்களுந் தானன்று இந்தக் காரணசரீரம் மகதத்வத்தினாலானது இதுகளினுடைய ஆனி விர்த்திகளினாலே வருகிற சுகதுக்கந் தனக்குத் தேவையில்லை. இந்த வியஷ்டி சமஷ்டிக் காரண சரீரங்களே தானானால் இதுகள் போனாற்றான் போகவேணுமே இவை போனாலுந்தான் போகவில்லை இவைகட்கு சாட்சியா யறிந்த வறிவே தான்.

### சிஷியன்.

சச்சிதானந்தரூபமாய் விளங்குகிற என் ஆசாரியனே மானிடரில் சிலர் விவேகிகளாயும், சிலர் அவிவேகிகளாயும் விவகரிக்கக் கரரண மேதெனின்,

## ஆசாரியன்.

உற்பத்தியிற் கரும்புக்கு மதுரம் சித்தமாயுண்டாய் கரும்பு வளருங்கால் மதுரமும் அமிர்தமா யுண்டானபடி விவேகி ஜன்மித்தபோது சத்யம், சமரசம், சாந்தம், தயை, தாட்சண்யம், தாதுர்த்வம், பயம், பக்திமுதல் கூடவேபிறந்து அடங்கியிருந்து இவன் வளருங்கால் அக்குணங்களும் வளர்ந்ததால் அவைகளை யனுகூலப்படுத்திக்கொண்டு சத்குருவினிடஞ்சேர்ந்து பரசவுக்கியங்களை யனுபவிக்கக் காரணபூதனா யிருப்பான்.

பூமியினிடத்தில் முளையாய்ப் புறப்பட்டவுடனே வேலஞ்செடிக்கு முள்ளுகள் கூடவே வுண்டாய் சிரிதாய்க் காணப்பட்டு விருட்சமானபோது ஊசியைப்போல பெரிதாயும் தன் சமீபத்தில் யாரையுங் கிட்டே நெருங்கவொட்டாமல் செடிமுழுதும் முள்ளுகள் வளர்ந்தது போல அவிவேகி பிறந்தவுடனே அக்ரமம் அநியாயம், அசத்தியம், அதிருப்தி, அசம்மதி, அநிருத்யம், அசூயை அஞ்ஞானம் முதல் கூடவே பிறந்து அணுரூபமாயிருந்து இவன் வளருங்கால் அக்குணங்கள் வ்யாபித்ததால் அவை தனக்கு சகோதராளாய் பாவித்து துன்மார்க்க காரியங்களைச் செய்து பவசாக ரத்தி லழுந்த வுடையவனாயிருப்பான்.

தயானிதே கன்மானுஷ்டான பரிதாளாய் தெய்வாராதனைகளுஞ் செய்து வ்ரதங்களும் பண்ணி தீர்த்தயாத்ரைகளு மாசரித்து சம்சாரத்தையும் விட்டு யோகத்தை சாதித்தவர்களுக்கே மோட்சம் சித்திக்குமென்று பெரியோர்கள் சொல்லுகின்றார்கள் அதினுண்மையை யறிவிக்கும்படி துதிக்க அவ்வாசான் புன்சிரிப்பு கொண்டு கேளும் சோக மோகங்களைத் தகிக்கும் ஞானத்தால் முக்தி கிடைக்குமேயன்றி தேகத்தினா லென்ன கன்மஞ் செய்யினும் ஜன்மரகிதமாகாவாம். அதேனெனின், எள்ளி லெண்ணையை யிறக்கி விளக்குக்கிடின் ஜோதிரூபமாய் விளங்குமேயன்றி எள்ளினால் அவ்விளக்கு எறியமாட்டாதென்றதை மறந்து நானாகஷ்டங்களைச் சகித்து சுகத்தைக் காணாம லிருக்கின் என்ன பிரயோசனம் அதெப்படியெனின்,

மீனை வேண்டி ஜலத்தில் முழுகித் திரியும் பட்சியைப் போல உதயத்திற் குளிர் நீரில் ஸ்தானஞ்செய்வதினா லென்ன?

வெண்மைநிறம்போன்ற பெரும்பூசனிக்காயைப்போல மேனியெல்லாம் வெண்ணீறு பூசிலென்ன?

காய்கள் நிறையக் காய்த்த இலவ மரத்தைப்போல உடம்பெல்லாம் நிறைய உருத்ராட்சந் தரிக்கிலென்ன?

கொத்தி மச்சம் விழுங்கும் வெள்ளைக்கொக்கு சிறகைவிரித்ததுபோல பத்திபத்தியா யுடம்பில் த்வாதசிநாமங்கள் போட்டாலென்ன?

பிளந்த பாகற்காயைப்போல முத்திரைகள் தேகந்தனி லிட்டாலென்ன?

பழுத்த மூங்கிலிலையைப்போல கோபி சந்தனங்களைச் சாற்றில் என்ன?

தாகந் தணிக்கத் துதிக்கை நீரை யிறைக்கும் யானையைப் போல வானவர்க்காய்க் கைகளினால் ஜலம் விடுகிலென்ன?

இருளில் அடைமழையிற் கதறுகின்ற தவளையைப்போல நாள்தோறும் தேவாரம் திருவாய்மொழி செப்பிலென்ன?

வாணியராடுஞ் செக்கைச் சுத்திவரு மெருதுகள்போல ஆலயங்களை ப்ரதட்சணஞ் செய்கிலென்ன?

காட்டில் தழைகள் பேய்கின்ற பசுக்களைப்போல கந்தமூல பலாதிகளைப் புசிக்கி லென்ன?

காற்றை யாகாரம்பண்ணி ஜீவித்திருக்கும் பாம்பைப்போல வாயுவை யுண்டு ஊழிக்கால மிருக்கி லென்ன?

காற்று வெயிலினா லுலர்ந்த காஷ்டத்தைப்போல போற்றிடாமற் றேகத்தை வருத்தப்படுத்திலென்ன?

அசையாமலிருக்கும் மலைப்பாம்பைப்போல நிலைபேறா தோரிடத்தே கிடக்கிலென்ன?

மழை பனி வெயிற்கு சகிக்கும் தருவின் கிளையைப்போல சீத வூஷ்ணாதிகளைச் சகிக்கிலென்ன?

ஆரசைத்தாலும் அசையாமற் கல்லைப்போல கோரதவஞ்செய்து உடல் குலுங்காம லிருக்கிலென்ன?

அவயவங்களை வெளிவிடாமல் அடக்கும் ஆமையைப்போல விஷயங்களில் விழாமல் இந்திரியங்களைநிறுத்திலென்ன?

அஞ்சிடாம லுலைக்கனலில் யிருக்குங் கொல்லனைப்போல பஞ்சாக்னி மத்தியிற் பலநாளு மிருக்கிலென்ன?

இலைநிறைந்த மரத்தி லேறித் தொங்கும் வௌவாலைப்போல தலை கீழாயிருந்து தவம் செய்கி லென்ன?

வளைகளில் குடியாயிருக்கும் பெருச்சாளியைப்போல குகையில் யார்க்குந் தோன்றாம லிருக்கி லென்ன?

வசனம் சேஷ்டைக ளில்லாமல் மரப்பாவையைப்போல ஆசனம் துயிலில்லாமல் மௌனமாயிருக்கி லென்ன?

கயறாக ஆலவிழுதுகள் விட்டது போல தலை மயிரை முடியாமல் ஜடைகள் வளர்க்கி லென்ன?

இவை யெல்லாவற்றையும் நீக்கித் தன்னைத்தா னறியும்பொருட்டு முக்கியமாய் தேகத்தில் விளங்கும் தேகியென்ற ஆன்மானுபவத்தை விவரிக்கின்றோம். அதெப்படியெனின்,

கடத்தைப்போல ஸ்தூலசரீரம்.
கடத்திற் பூரித்த ஜலம் போல அந்தக்கரணம்.
ஜலத்தின் மலினம்போல அவித்தை.
கடஜலத்தி லாகாயம் ப்ரதிபிம்பம்போல ஜீவன்.

### சிஷியன்.

பதிதபாவனனே மாயையினிட உத்பத்தி லயங்களையுந் தெரியச் சொல்ல வேண்டுமென்று துதிக்கக் கேளும்,

### ஆசாரியன்.

அவித்தையென்கின்ற மாயையும் அகோசரமா யிருப்பதால் யான் எனதென்றும், இப்பிரபஞ்சம் யதார்த்தமென்றும் எண்ணுகின்றவர்கள் மாயைக்கு வுடையவர்கள் இவர்களுக்கு எப்போதும் ஜன்மரகிதமாகாது சகல பிரபஞ்சங்களும், சர்வ தேசகால அவஸ்தைகளும் சத்யமாய்த் தோன்றியிருக்க அவையெல்லாம் அசத்யம் எவ்விதத்தாலென்றால், இல்லையென்ற மாயைக் கொரு திருஷ்டாந்தஞ் சொல்லுகின்றோம். மலடி மைந்தனும், கட்டையினிடத்திற் கள்ளனும், வான்மலர் சூடிக்கொண்டு கிளிஞ்சினிடத்திற் றோன்றும் வெள்ளியை விலைக்கு வாங்கி மன்மதனிட பட்டணத்திற்கேகி விலையற விற்று லாபத்துக்குப் போர்செய்து முயற்கொம்பினாற் குத்திக்கொண்டு மரணமடைந்த விருவரும் பிசாசானார்களென்ற விவகாரத்தை யறிந்தவர்கள் மாயைக்குட்படமாட்டார்கள். பரலோக காரணங்களை யறியாமல் இகலோகத்திற் சகலத்தையும் சாத்யமென மனதில் எண்ணின் புத்தி விசார மற்றவர்கள். இதுவுமன்றி மாயாவித்தைகள் செய்கின்ற சித்தனொருவன் ராஜசபையிற்சென்று தனது சக்தியால் அனேக சித்ர விசித்ரங்களாகிய வனங்களும், தடாகங்களும், மலைகள் முதலியவை கற்பித்து பின் ஐக்யஞ்செய்யினும் இவையெல்லாந் தானல்லாமற் றனக் கன்ய மொன்றுமில்லாமற் றானொருவனாய்க் காணப்பட்டபடி தனது சக்தியால் நாமரூப ப்ரபஞ்சங்களைப் படைத்து பின் ஐக்யஞ்செய்யினும் சிந்து தரங்க புத்புத ஞாயமானபடி தானல்லாமற் றனக் கன்ய மொன்றுமில்லாமல் விளங்குகின்ற ஸ்வ ரூபத்தை சுருதி குரு சுவானுபவத்தாற் றரிசிக்கவேண்டியது.

# பிரம்மவித்தை என்னும் வேதாந்த ஜட்ஜிமெண்டு

நாமரூபங்களா வண்டான மனாதி அந்தக்கரணங்களுடன் சேர்ந்த விந்திரிய வியாபாராதிகள் முதலான தேகாதிப்ரபஞ்ச தர்மகர்மங்கள் மித்யாபூதங்களாகையால் அவை அசத்யமென வெண்ணி விவேகியா யிருக்கவேண்டும். அதெப்படியெனின், ஸ்தான சந்திய சபானுஷ்டான நித்ய நைமித்திகா திகளைத் தப்பாமல் ஆசரிக்கின்ற வேதமூர்த்தியான ஒரு பிராமணர் க்ராமாந்திரத்திற்குப் போகின்றகாலத்தில் வழியில் ஒரு மிலேச்சன் மாம்சத்தைச் சேதித்துக்கொண்டிருக்கின்ற சமயத்தில் பார்த்தானானால் சட்சு யிந்திரிய விஷயாபேட்சையை உபேட்சித்து ஓடிப்போனபடி சர்வ புண்ய பாப கன்மங்களை முழுமையும் விட்டு குருவை யடைந்து அவர் கிருபையால் சாதனங்களை யனுஷ்டித்து அமன ஸ்கபாவத்தை யடைய வேண்டியது. இதை யடையாமல் சிலர் நானாசாஸ்திரங்களிட யுக்தியினால் தர்க்கவாதங்கள் பண்ணி விவேகமுடையவர்களென்று நடக்கின்றதில் என்ன பலன் அதெப்படியெனின், இல்லறத்தாருடைய வில்லறத்தில் வசிக்கின்ற சிறுபிள்ளைகள் சிறுவீடுகட்டி மணலைக்கொண்டு அவை சகல பதார்த்தங்களாக வெண்ணி சமையல்பண்ணி புசித்ததுபோல எத்தனை லீலைகள் செய்யினும் அவையெல்லாம் நிஜமல்லவென நினைத்து நிசானுபவத்தாற் சகலமுமறிந்து அதையு மறந்து மனோலய மாயிருக்கின்ற ததுவே பாவாதீதமென அறிவாய்.

சாப்பிடவேண்டி அரிசியைச் சம்பாதித்துச் சமையல் பண்ணவேண்டிய கோறிக்கையாற் பானை சட்டி கொண்டுவந்து அரிசியைக் கழுவி சலத்தோடு பானையில் வைத்து அடுப்பின்மேலிருத்தி கட்டைமுட்டைமுதல் சாதனங்களென்ன செய்யினும் வெந்த அன்னமாகாது அதேனென்றால் காரணமான அக்னி தரிசனமாயின் பாகமான அன்னமுஞ் சித்திக்கும் இதுவுமன்றி சூர்ய அஸ்தமான காலத்தில் ஆகார விவகாராதிகளும், கமனாகமனங்களும், சுபாசுபங்களும் நடக்கிறதற்கு அகோசரமாயிருக்கும். அந்தகாரமான விருளை யனேக்கோடி ஆயுதங்களால் வெட்டிக் குத்தினாலும், ஏககாலத்தில் அனேக குண்டுகளைப்போட்டு சுட்டாலும் சூரிய தரிசனமில்லாமல் எங்கும் நிறைந்திருக்கும் இருட்டான போர்வை உலகத்தைவிட்டு நீங்காததுபோலவே சுகர்ம துஷ்கர்ம நித்ய நைமித்திகாதிகள் விரதங்கள் என்ன செய்யினும் மாயை நசித்து ஸ்வரூபதரிசன மாகாது ஆகையால் குருவை யடைந்து அவாள் கட்டளையிட்டபடி சாதனங்களை அனுஷ்டித்து தன்னைச் சூழ்ந்திருக்கும் மாயையை மாயைபண்ணி தன்யனாக வேண்டியது.

கேளும் ஆறு கடக்கிறவரையில் ஒடத்தினிட சகாயத்தைக் கோறி கரையைச் சேர்ந்ததே யவ்வோடத்தை மறந்ததுபோலவும், இருளறையிற் பொருளைக் காண்கின்றவரையில் விளக்குவேண்டி பொருளைக் கண்டதே விளக்கை விட்டது போலவும், பரோட்சஞானங் கிடைக்கிறவரையிற் சிரவணஞ்செய்யவும், அவ்வஸ்து வினிடத்தில் மனம் லயிக்கிறவரையில் மனனம்பண்ணவும், அவ்வஸ்து தன்னிடத்தில் விளங்குகிறவரையில் தியானதாரணைகள் செய்வதையும் விட்டு பிரம்மானுபவத்தை யறியாமல் வாசாப்பிரம்மமெனவும், ஆத்மார்தமு மறியாமல், வேதாந்திகளெனவும், சூனியமார்க்கமறியா மல் சன்யாசியெனவும், தன்னைத் தானறியாமல் பந்தமோட்சமெனவும், சொன்னதினா லென்ன பலன்? சித்திரத்திற் கண்ட விளக்கினால் இருள் அகலாததுபோல விஷயங்கள் நசிக்கிறவரையிற்

சாதனங்கள் வேண்டியது. அச்சாதன பலன் ஏதென்றால் பாம்பைக் கண்ட தவளையைப்போல, கருடனடித்த கோழியைப்போல, புலியைப்பார்த்த ஆடுபோல, கீரியின் வாய் சர்ப்பம்போல, பூனை பிடித்த எலியைப்போல நிஷ்டையைப்புரிந்து மனோலய மடைந்தவனை போதையானது பாய்ந்து தன்னைப் போலப் பண்ணு மாகையால் குருக்ருபாகடாட்சத்துக்குப் பாத்ரவானாகவேண்டியது.

உலகத்திற் பயிரிட்டுக் கிடைத்த பலத்தைப் புசித்து சௌக்கியமாய் ஜீவித்திருக்கின்றபடி மோட்சமடைய நிச்சயித்து குரு போதையின்படி சாதித்து அனுபவிப்பதற்கு ஒரு திருஷ்டாந்தஞ் சொல்லப்பட்டது.

---

## பயிரிடும்படியான கிரமமும், மோட்சத்தை சாதிக்கும் லட்சணமும்.

காட்டிற் செடிகளை வெட்டி - மதமாகிய காட்டை வெட்டி.
கல்லுகளைச் சேதித்து - அகங்காரமான கல்லைச் சேதித்து.
பூமியைச் சமமாய்த் திருத்தி - இருதய பூமியை சமரசப்படுத்தி.
வரப்பும் போட்டு - மௌனமென்ற வரப்பும் போட்டு,
வித்தை விரைத்து - ஞானமென்ற விதையை நட்டு,
நீரைப் பாய்ச்சி - அன்பாகிய நீரைப் பாய்ச்சி,
பயிராகுமட்டும் பறவைகளை வரவொட்டா மல் - சாதிக்கின்ற வரையில் மாயை யணுகாமல்
மஞ்சகமீது காத்திருந்து- தன் திருஷ்டியில் நிலைதது.

பலத்தை யறுத்து புசிக்கின்றபடி பூர்ணானுபவத்தை யடைகிறதுமன்றி பெரியோரைத் தரிசித்து உபசாரங்கள் செய்து அவாளாக்கினையின்படி நிவாததீபம்போல மனதி லொன்றும் நினையாமல் நிஷ்டையைப்புரிந்து ஜனன மரணமென்கின்ற பவக்கடலையுங் கடந்து மோட்சமடையவேண்டியது.

முற்கூறிய 84-லட்சம் ஜீவராசிகளில் உத்தமசரீரமான மானிடர்கள் சாதிக்கவேண்டிய பரிபாகங்களென்கின்ற வேழு பூமிகளிட அனுபவங்களைச் சொல்லுகின்றோம்.

## ஸ்வேச்சை, விசாரணை, தனுமானசி, ஸத்வாபத்தி, ஸம்சத்தி, பதார்த்தபாவனை, துரியம் இதற்கு விபரம்.

ஸ்வேச்சை- துற்சங்கரிவர்த்திபெற்று ஞானம் விரும்புவது முதற்பூமி.
விசாரணை - நற்சங்கத்தால் ஞான நூல் பழகல் இரண்டாம்பூமி.
தனுமானசி - ஈஷணைகள்விடல் மூன்றாம்பூமி.

சத்வாபத்தி - மனதி லுண்மையறிவுதித்தல் நான்காம்பூமி.
ஸம்சத்தி - தத்வத்தால் மிததையெல்லாம் மறப்பது ஐந்தாம் பூமி.
பதார்த்தபாவனை - த்ரிபடி போய் அத்வைதானந்தங் கிடைத்தல் ஆறாம்பூமி.
துரியம் - வஸ்துநிலையிருந்தபடி மௌனமடைதல் ஏழாம்புமி.

இப்பூமிகளில் ஒன்று இரண்டு மூன்று பூமிகளை யனுபவிக்கின்றவர்கள் அப்யாசிகள். மற்ற பூமிகளினுடைய அனுபவர்களில் வரனெனவும், வர்யனெனவும், வரிஷ்டனெனவும், ஜீவன் முக்தனெனவும் நான்குவிதங்கள். இப்பூமிகளி லொன்றிரண்டை அனுபவித்த மிலேச்ச பஞ்சமஜாதி முதலானவர்கள் முக்தாளென்று பிரமாண மிருக்கின்றமையால் சந்தேகிக்க வேண்டுவதில்லை.

கிருபாநிதியாகிய சற்குருவே! அரிதாகிய மானிடதேகங் கிடைத்தும் கடைசியிற் பிராமணதேகங் கிடையாமல் முக்தி இல்லையென்று சாஸ்திரங்களால் அறியப்பட்டிருக்க இப்பூமிகனை யனுபவிக்கின்ற மிலேச்ச பஞ்சமஜாதிகட்கும் முக்தி கிடைக்குமென்று கட்டளையிட்டருளிய விஷயம் சந்தேகமாக விருக்கின்றதை நிவர்த்திக்கவேண்டுமென சரணமடைந்த சீஷனை நோக்கிக் கேளும் பிரம்மக்கியானத்து பிராமணனென்கின்ற சுருதியாகையால் தன்னைத்தானறிந்த பிரம்மவித்தர்களான ஞானிகள் தேகங்களிட பேதங்கள் வர்ணாஸ்ரதர்மங்கள் குலகோத்ரமு முதலான எந்த சிந்தையுமில்லாமல் நிஷ்காமிகளா யிருப்பார்கள். அதெப்படி யெனின்,

சத்குலத்தில் ஜெனிக்கும் தாழ்ந்த குலத்தி லுதிக்கினும்
வாலிபமாக விருக்கினும் வயது போய்க் கிழமாயிருந்து
சாஸ்திரங்கள் கற்கினும் கல்லாதிருக்கினும்
காமனாக சஞ்சரிக்கினும் காறியுமிய யிருக்கினும்
சம்பத்து கிடைத்திருக்கினும் தரித்திரனாகவிருக்கினும்
சிங்காசனத்திருக்கினும் சேவகவனாகவிருக்கினும்
வாகனங்களிருக்கினும் காலால் நடக்கினும்
அறுசுவையுண்டி புசிக்கினும் ஆறினதைப் புசிக்கினுய்
பீதாம்பரத்தைத்தரிக்கினும் பீறற்றுணியையுடுக்கினும்
தன் மணமேனிபடைக்கினும் நாறவுடம்போடிருக்கினும்
கங்கைநதியாடினும் கால்முடமாகியிருக்கினும்
ஆரோக்யத்தோடிருக்கினும் பிணியோடிருக்கினும்
ஏகாசனத்திலிருக்கினும் ஏகாந்தமாகவிருக்கினும்
சூரனாகவிருக்கினும் சுத்தமூடனாகவிருக்கினும்

இவைகளா லொருபலனுமில்லை சாவம் பிரம்மமய மெனவறித்து சித்ரரூபம்போல சதாஆனந்தபரிதாளாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள்,

தரிகுண ரகிதனே ஞானிகளுடைய விர்த்திகளையும் மனோபரி பாகங்களும் அனுபவங்களும் அருள் செய்ய வேண்டுமென சீஷன் கேட்கக்கேளும்,

# பிரம்மவித்தை என்னும் வேதாந்த ஜட்ஜிமெண்டு

விருப்புவெறுப்பு அற்றஞானிகளுடைய மனோவிர்த்திகள் அணுவாயும் அறிவு அகண்டாகாரமாயு மிருக்கும் அஞ்ஞானிகளுடைய அறிவு அணுவாயும் மனோவிர்த்திகள் அகண்டாகாரமாயு மிருக்கின் றமையால் அதற்குத்தக்கப்ராரப்தவ சாதீனர்களாய் ஜனன மரண மென்கின்ற வாரியிலமுந்தி வருத்தமடைகின்றார்கள் உப்பு அப்புவிற்சேர்ந்திடில் ஜலரூபமான படிமனது விவேகத்துடன் சேர்த்து ப்ரம்மத்தி லயிக்யமாயின்ப்ரம் மஸவரூபமாய்விளங்கும், ப்ரம்மத்தில் ஜீவைக்ய மெவ்விதத்தார் சித்திக்குமென்றிடில் ஸ்ருதியெனுங்கயற்றினால் மனமென்னும் யானையைக் சுருக்கிட்டுச் சிற்ககனத்துறையிற்கட்டி குருவுரைத்தஸ்ரவணத்தின் படி நிற்கின் குதியாது குதித்தாலும் ப்ரபஞ்ச வாசனைகளிடத்திற் றிரியாது திரிந்தாலும் மதமேறாது ஜீவவைராக்ய முதுவென அறியவேண்டியது.

# வேதாந்த ஜட்ஜிமெண்டு.

**மூன்றாம் பகுதி.**

இந்நூலாசியர் தாமடைந்த நிரதிசயானந்தசாட்சாத்காரசுவானுபூதிப் பிரத்தியட்சத்தை முமூட்சுக்கள் எளிதினுணர்ந்து நித்தியதிருப்தியாகும் பொருட்டுக்கிருபை கூர்ந்துவயிராக்கியப் பிரகரணம் - முமூட்ஈப்பிரகரணம் - உற்பத்திபிரகரணம் - திதிப்பிரகரணம் - உபசாந்திப்பிரகரணம் - நிருவாணப் பிரகரணம் - என்னும், அறுவகைப்பிரகரணங்களால் இந்நூலினிது முடிக்கத்தொடங்கி பூர்வ ஜெமசமஸ்காரபலத் தினால்கிஞ்சித்து ஆவரணவிலட் சணப்பட்டு ஆத்மானாத்மவிவேகம்பண்ண வந்தசீஷனுக்குப்பிரபஞ்சவயிராக்கிய முண்டாகும்படி முந்திவயிரக்கியப்பிரகாணங் கூறுகின்றார்,

## கவி.

தேகமேயான்மாப்போகஞ் சேர்ந்திடன்முத்தியாமென்
றேகமின்மூகராய்நின்றிறந்தவர் பிறவாரென்ற
மோகங்களனைத்துநீக்கி முத்தியையடைவதற்கே
தாகமாயிருக்குமுத்தர் தானுமேதேவராவார். (1)

தேவர்மானிடரானாலுஞ்செனித்திடல் வளர் தன மாய்தன்
மூவகையிடத்துந்துன்ப மாதலான்மோகமென்னுஞ்
சீவனுட்பற்றை நீக்கச் சிந்தித்தெத்திறத்தானாலுந்
தாவுமால் துடைத்தல்வேண்டுஞ் சற்குருசகாயத்தன்றே (2)

## இதன்பொருள்

## வினா.

தேகமே யான் மாவல்லாமல் உள்ளேயாகிலும் வெளியேயாகிலும் ஆன்மாவேறில்லையென்னில்,

## விடை.

கரணங்களிருக்கிறபடியா லப்படி சொல்லக்கூடாது.

## வினா

மனம் ஒன்றே தவிர வேறுகரணங்களுமில்லை - போகங்களில் ஸ்திரீசையோகமேமுத்தி - அவர்களைச்சதாகாலமும் நினைத்திருபதே கல்வி - சதாகாலமும் அவர்கள் விசாரத்தினாற் சரீரமிளைப்பதே தவம் - சார்வதா அவர்களுடன் சரசவுல்லாசமாய் வசனித்திருப்பதே சீவன் முத்தி - எப்போது அவர்களது ஸ்தனங்களிற்கூடிச் சையோகவின்பத்தி லமிழ்ந்தியிருப்பதே விதேகமுத்தி - அவர்களணிந்துள்ள புஷ்பசந்தனாதிகளின் மணங்களை

ஆக்கிராணித்திருப்பதே சுவர்க்கயோம் - அவர்களதரபானமே தேவாமிர்தம் - இப்படிப்பட்ட மதத்தைவிட்டுப் பிரிந்தவனே நரகத்தையடைவன் - இறந்தவர்களொரு காலத்தும் பிறப்பதேயில்லை அப்படிபிறப்பதுண்டானால் முன்னுளவறிவு இப்போதிருக்க வேண்டும் - அப்படி காணாமையால் தேகமேயான்மா - போகமேமோக்ஷம் - இறந்தவர்கள் திரும்பவும் பிறவார்களென்பதே நிச்சயமென்றேன்.

## விடை.

இப்படிவுளறிக்கொண்டு மிருகபட்சிகளைப்போல வறிவில்லாதவர்களால் அருந்தல் பொருந்தல்மாத்திரமாய் வீண்காலம் போக்குவார்களாகில் அவர்களுக்கு நரகமேயன்றி மோட்சமில்லை - மேலும் நாமிறந்தால் நமக்கிருப்பிடமெங்கே - நாமெங்கேயிருந்துவந்தோம் நமக்குக்கதியேதென்று விசாரித்தறிய வொட்டாமல் அவர்கள் புத்தியை மறைத்திருப்பது அஞ்ஞானகாரிய மல்லாமல் வேறல்ல.

## வினா

அஃதெப்படியென்னில்,

## விடை

தேகமே அறிவாகிய வான்மா வென்றால், தேகமிருக்குங் காலமெல்லாம் அறிவிருக்கவேண்டுமே அப்படிகாணாதபடியினால் தேகம் பிண மாய்க்கிடக்கும் மோது அறிவாகியவுயிர்போய் விடுதல்லால் தேகத்தினுள் அறிவாகிய தேகியொருவனுண்டு - அவன் இத்தேகத்தைவிட்டு மறுதேகத்திற்போனதால் இத்தேகம் பிணமாய்க்கிடக்கின்றது - ஆகையினால் வேறேதேகி யொருவனுண்டென்றும் தேகம் ஆன்மாவல்ல ஜடமென்றுந் தள்ளப்பட்டது.

## வினா

ஸ்திரீபோகமே மோட்சமல்லவென்பதெப்படியெனில்.

## விடை

மலங்களைப்புசிக்க வேண்டுமென் றிச்சித்துத் திரிகின்ற ஊர்ப்பன்றியானது அன்னியரால்விடம்பட்ட அசுத்தமான மலங்களை ப்புசித்துக்கோடையான வெய்யிலால் தயித்துச் சூடுகொண்டுவரும்வழியில் அசுத்தமாகிய சாக்கடைச் சேற்றைக்கண்டு அதில்போய் விழுந்து புரண்டு அவ்வசுத்த நீரைக்குளித்துத் தன்னிளைப்பாகியதாக சோகந் தணிந்து சுகித்திருப்பதுபோல மூடனானவன் ரத்தமாங்கிஷ மல்மூத்திர தீட்டான துரக்கந்தங்கணிறைந்து அனேக சென்மங்களிற் செய்துள்ள பஞ்சமாபாதகங்களளைத்தையு மொன்றாகக்கூட்டிப் பிரமன் ஒருபெண்வடிவாகச் சிருஷ்டிக்கவந்த மாயாரூபத்தைக்கண்டு சுகமென்றிச்சித்து அவர்கள் எச்சிலாகிய வாய்நீரையுண்டு தனங்களாகிய மாமிசக்கட்டிகளிலழுந்தி அசுத்தமாகிய கால்களையெடுத்துக் கண்களிலொற்றிக்கொண்டு யோனியாகிய வுப்பளற்றில் விழுந்து சதாகாலமு மதுவேயின்பமென்று சுகித்திருப்பன் -

இந்தமூடனும் அந்தச்சாக்கடைச்சேற்றில் விழுந்து புரளுகின்ற ஊர்ப்ப ன்றியுஞ்சரியாம் - ஆகையால் பரிசுத்தமாகிய மோட்சவிருப்பமுடையவர்கள் சுத்தரித்தராயிருக்கின்ற ஈஸ்வரானுககிரகம் பெற்று அடிமைத்திறஞ் செய்கின்ற பெரியோர்களைக்கண்டு பூசித்து அவர்களால் நித்தியசுகமாயிருக்கப்பட்ட மோட்சத்தைப் பெறுவார்கள் அங்ஙனமிருக்கப் போகமே மோட்சமென்பது கூடாது இறந்தவர்கள் பிறப்பார்க ளென்பதே துணிவு.

### வினா

இறந்தவர்கள் பிறப்பாரென்ப தெப்படியென்னில்.

### விடை

சாக்கிரத்தில் மனோராச்சியம்பண்ணும்போது சீவன் ஆசத்தியாய் நினைந்த பொருள்களை ஸ்தூலத்தைக் கைவிட்ட சொப்பனாவஸ்தையில் சத்தியமாய்க் கண்டனுப விப்பதுபோல இந்தப்பிறப்யில் ஆசத்தியா யேறியிருந்தவாசனைகளே மரணமடையும்போது மறுபிறப் புக்குவித்தாகி அதற்கீடாசைரீரங்களை யெடுத்த அபவிப்பதென்பதே துணிவு.

### வினா

இறந்தவர்கள் மீண்டும்பிறப்பது மெய்யானால் முன்னுள்ள நினைவுகள் தோற்றவேண்டுமே யென்னில்

### விடை

இறந்துபோன புத்திரமித்திராதி தாய் தகப்பனுஞ் சொப்பனாவ ஸ்தையில்மெய்யாகவந் திருக்ககண்டனுப் விக்கும்போது இது பொய்யென்று ஒருவருமேனறியவில்லை முன்னமே இவர்களிறந்து போனார்களென்று சாக்கிரத்திலறிந்திருந்த சீவன் தானே இப்போதுஞ் சொப்பனங்காணுகிறான் இவனுக்கேன் முன்னுள்ள நினைவுகள் தோற்றவில்லை. ஆதலாலிறந்தவர்கள் பிறந்தாலு முன்னிருந்த நினைவுகள் தோற்றாதென் பதே துணிவு,

### வினா

அப்படி தோற்றாமைக்குக் காரணமேதென்னில்

### விடை

இந்தச்சீவன் தூலதேகத்துடன் கூடி இந்திரிய விவகாரமான சாக்கிக்ரதிருந்து பிறகு ஸ்தூல தேகத்தைவிட்டுச் சூட்சுமதேகத்தையபிமானித்ததினால் முன்னுள்ள நினைவுகள் தோற்றவில்லை இப்படியே எழுவகைப் பிறப்பிலுமுண்டான நினைவுகளு மந்தந்த தூலத்தைவிட்டு மறுபிறப்பாகிய வேறொரு தேகத்திற்புகும் போது இந்தச்சீவன் மரணாவஸ்தையிற் பட்ட துன்பத்தினா லறியவில்லை ஆதலால் இறந்தவர் பிறப்பாரென்ற சித்தாந்தமேகொள்ளப்பட்டது.

## வினா

ஆனால் சிலர் தேவபோகத்தைக் குறிந்து யாகாதிகருமங்களைச் செய்கின்றார்களே அதனாலின்ப மில்லையோவெனில்.

## விடை

அந்தத்தேவபிறப்பலு மின்பமில்லை - எப்படியென்றால், தேவ யோனிகளிற் பிறக்கின்றகாலத்திலுந் துக்கம் திதிகாலத்திலும் பிரமாதிதேவர்களாலும் ரிஷியீஸ்வரர்களாலும் ஒருவர்க் கொருவரால் நேரிடும் அன்னியோன்னிய சாபத்தினானும் ஒருவர் பெண் சாதி தனங்களை ஒருவரபகரிப்பதினாலும் ராட்சதர்கள் தங்கள் போகபூமியைப் பிடுங்கிக்கொண்டு அடித்துத் துரத்திவிடுவார்க ளென்கிற பயத்தினாலுந் துன்பமேயல்லாம் வெள்ளளவுமின்பமில்லை - மரணகாலத்திலும் முன்செய்துள்ளயா காதிகர்மபலத்தினால் எழுபத்தொருசதுர்யுகம் ஆனந்தபோக மனுபவிதுத்தீர்ந்தவுடன் அங்குள்ள தேவதைகளால் பிடித்துத் தள்ளப்பட்டுநட் சத்திரங்களாகித் தலைகீழாய் பூமியி லெரிந்துவிழும்போது அவ்வானந்தமறந்தனித்தியமாய்ப் போவதினாலும் மீண்டுற்பவிரகுங் காலத்திலும் முன்பு பசுபந்தனம்பண்ணின பாவகர்மத்தினால் பூமியில் நாக்குப் பூச்சி கிருமிகளாய்ச் செனிப்பதுனாலுந் துன்பமென்பதே துணிவு.

## வினா

ஆனாலிந்த மானிடப்பிறப்பில் தா னின்பமில்லையோவெனில்.

## விடை

இந்தமானிடயோனிகளிற் பிறக்கின்ற காலத்திலும் மாதாவின் கருப்பப்பையிற் கட்டுண்டு அவளது மல மூத்திரக் கிருமிகளினாலும் மூலாக்கினியிலும் வெதும்பி அவள் அன்னபானாதிகளை நிறைய வுண்டபோது உடல் நெருக்கத்தினால் மூச்சு விடுதற் கிடமின்றிய வுருத்தத்தினாலும் அவளுண்ணாதபோது எழுகின்ற வுதராக்கினியினால் சுடப்படுகிற பிர்யாசையினாலும் பிறவிநேருகுங்கால் பிரசூத வாயவினால் மொத்துண்டு ஆலையிற்பட்ட கரும்பு போலும் செக்கிலிட்ட வெள்ளுபோலும் யோனித்துவாரத்தி நெருக்குண்டு மலை மேல்நின்றானைத் தலைகீழாய்த்தள்ளுவதுபோல் பூமியிற் பிள்ளையாய் விழுகின்றதினாலுந் துன்பம் - திதிகாலத்திலும் கைசவப்பருவத்தில் கணங்கள் பறவையாதிகளால் வருந்தோஷங் களினாலும், பாலப்பருவத்தில் காதுகுத்தல் சுரமுதலிய பலவியாதிகளாற்படும் பிரயாசத்தினாலும், வாசித்தல முதலிய கருமங்களால் உபாத்தியாயர் முதலான வர்களா லுண்டாகும் வருத்தத்தினாலும் குமாரப்பருவத்தில் தன தானியங்களைச் சம்பாதிக்கவேண்டி வருகிறதாக மோகங்களினாலும், அதற்கிடையூறுவருவதினாலும், விஷயபோக விச்சையினாலும், அகங்காரமிருப்பதினாலும், படியாமறபோனதினாலும், படித்துந் தர்க்கங்கள் பேசவருவதினாலுந் துன்பம் - விருத்தபருவத்திலோவென்றால், ஆசைமிகுவதினாலும், நரைதிரை முப்புகளினாலும், பலவியாதிகளுடை தலினாலும், மனைவிமுதலியோர்களுக்கு வியாதிவருவதினாலுந் துன்பம்

ஒருவனுக்குப் பிராணா தாரமாயிருந்த பிள்ளைசாகவும், அந்நேரம்வீடிடிந்து விழவும் உழுகிறமாடுசாகவும், கடன்காரர்வந்து மறிக்கவும் அடிமையாள் மறிக்கவும், வாராவிருந்துவரவும், வீட்டில் அரைக்காசளவிலில்லாமல் அயல்வீட்டில் கடன் கேட்க - அவர்களைக்கொடுக்கவொட்டாமல் முன் கடன்காரர்மறிக்கவும், இப்படி நானாவித துன்பங்களினல் காற்றசைவானசலத்தில் பிரதிபிம்பித்த சந்திரன்போற் கலங்கப்படுகிற வருத்தமுண்டாவதினாலுந் தும்பம் - மரணசாலத்திலும் வாத பித்த சுர க்ஷய குன் மநூலை முதலான பலரோகங்கள் மேலிட்டுச் சீவத்துவம் பேதித்திருக்கிற போது நமனைக்கண்டது போல் வரும் பயங்களினாலும், நடுக்கங்களினாலும், ஊர்த்தசுவாசத்தினாலும் வருந்திச்சிலேத்துமத்தில் தட்டுண்டு வேதனையான பிராணப்பிரயாண காலத்திற் காண்கிற துக்கங்களினாலும், அப்படி பிராண நீங்கிண போது நெருப்பாற்றிலுங் கும்பிபாகமான நரகத்திலும், சுடுகிற பாறையிலும் அசிபத்திரவனத்திலும் வீழ்த்தி, யமபடாள் தண்டிக்கப்பட்ட யாதனைகளினாலுந் துன்பம் - இப்படி தேவர் மானிடரென்று மிருவகைப் பிறவிக்கே துன்பமானால் ஏனையபிறவிகளாகிய மிருகபட்சிதாபராதிகளெல்லாம் துக்கசமுத்திரத்தழுந்தி பாவமானநரகங்களிற் படும்பாடுகளையெல்லா மிவ்வளவென்றளவிட்டுச் சொல்லமுடியாது ஆகையினாலிந்தப்பிறவிக ணீங்குமார்க்கத்தையே விசாரித்தறியவேண்டும்.

### வினா

விசாரித்தறியுமார்க்க மெப்படியென்னில்,

### விடை

யானெனதென்னும் பற்றுக்களொழிந்தால் சீவத்துவங்கெடும் இந்த யானெனதென்னும் பற்றுக்களேசீவசொரூபம் இவ்விரு வகைப்பற்றுக்களில் முந்தி எனதென்னும் பற்றைவிடவேண்டும்.

### வினா

அஃதேனென்னில்

### விடை

பெண்சாதி பிள்ளைகள் கிராமம் பூமி தனதானியாதிகளை யென்னதென் றபிமானிப்பது ஆன்மாவுக்குச் சுபாவமல்ல - அது அறியாமையான மோகாந்தகார மூடபுத்தியினால் வந்தது.

### வினா

அதற்கு விவரமெப்படியென்னில்.

### விடை

பெண்சாதியானவள் ஒருதாய் தகப்பனுக்கு மகளாயிருப்பதினாலும் நீ ஒரு தாய் தகப்பனுக்கு மகனாயிருப்பதினாலும் அவளெந்தவூர் நீ எந்தவூர் இப்படி

புறம்பாயிருக்க அவளென் பெண்சாதி யென் றுனக்குச் சுத்தியபுத்திவரலாகுமா - உன்னை விட்டு அவள் பிரிந்துபோய் விடுகிறாள் அவளைவிட்டு நீ பிரிந்து போய் விடுகிறாயா ஆகையாலுனக்கவள் சொந்தமல்ல அவளை என்னதென்பது கூடாது - பின்னும் பிள்ளையை என்னதென்கிறாயே அந்தப்பிள்ளையை நீயா வுண்டாக்கினையா அல்லது உன்பெண்சாதியா லுண்டாக்கப் பட்டதா அல்லது அன்னியர்களா னுண்டானதா இப்படி யுங்க ளொருவரால முண்டாக்கப்படாதிருக்க வீணாமயங்குவது பிராந்தியே மேலும் சொப்பனத்தில் மலடிபிள்ளை பெற்றது போலும் இந்திரசாலவித்தையாவல்லவன் வித்தை காட்டுவதுபோலும் பிர்ம கிருஷ்டியினா லிருவருக்கு நடுவே ஓர் பிள்ளையெனத் தோற்றியது இதை எப்படி என்பிள்ளை யென்றெவன் சொல்லுவது தெருவிற் கண்டபிள்ளையை என்பிள்ளை யென்றெவன் சொல்லுவான் அது போலப் பிரமசிருஷ்டியால்வந்த பிள்ளை பிரமன் பிள்ளையல்லாம் லுன்பிள்ளையல்ல ஆதலால்பிள்ளை என்ன தென்பது கூடாது - அப்படியே இந்தவீடுவாசல்பூமிதன தானியாதி சம்பத்துகளெல்லாம் உன் தகப்பனாலார் சிக்கப்பட்ட படியினாலும் அறிவைநோக்கி விசாரிக்குமிடத்து நீயவனுக்குப்பிள்ளையாகாமற் போகிறபடியினாலும் நீ இதுகளையும் என்னதென்பது கூடாது.

## வினா

அப்படிக்கல்ல நானே கஷ்டப்பட்டுத் திரவியங்களைச்சம்பாதித்து அதனால் வீடுவாசல் பூமியாதிகளைச் சேகரித்தேனே யெனில்,

## விடை

அப்படியானாலுமந்தத்திரவியங்களுமுன்ன தல்ல

## வினா

அது எப்படியென்னில்,

## விடை

திரவியங்களெல்லாம்ராஜாக்களுக்குச் சொந்தமானதால் இந்தத்திரவியங் களையு மென்னதென்பதுகூடாது,

## வினா

ஆனால் பெண்டுபிள்ளை திரவியமென்கிற ஈஷணாத் திரவியங்க ளென்ன தல்லவென்று போனாலும் இந்தத்தேகமானநான் இருக் கிறேனேயென்னில்,

## விடை

தேகமுமுன்னதல்ல நீ ஒருவரிடத்தி லிரவல்வாங்கினது

### வினா

அதெப்படியென்னில்,

### விடை

நெடுங்காலமாய்ப் பிறப்பிறப்புகளாகிய துக்கங்களிற்பட்டு திரியக்காதி தாவரங்களாய்ப் பிறந்தலுத்து பிரயாசையையெல்லா ங்கிஞ்சித்து விவேகத்தினாலறிந்து - நீ ஈஸ்வரனை நோக்கி இந்தச்சென்மசாபல்லியமாய்க் கரையேறும்படி எனக்கோர்மானிட சரீரங் கொடுத்தருளுமென்று பிறவிகள் தோறும் வேண்டினபடியால் ஈஸ்வரன் கிருபை கூர்ந்து நீ இந்தமானிட சரீரத்தைப் பெற்று நம்மை வேண்டி நிஷ்காமிய தவஞ்செய்து நமது திருவடி சுதத்தைப் பெறுவாயென்றிரவலாகக் கொடுத்தருளினார்.

### வினா

அப்படியானால் அந்தக்காரணத்தை ஒருவருமே னறியவில்லையென்னில்,

### விடை

கருப்பாயசத்திற்கட்டுண்டிருந்ததினாலும் பிறவிநோக்குங்கால்பிர சூதவாய்வு முரித்துத் தள்ளுவதினாலும் யோனித்து வாரநெருக்கமுதலிய யாதனைகளாலும் முன்னுள்ள நினைவுகளெல்லாம் இந்தச்சீவன் மறந்துவிட்டுப் பஞ்சபூதபௌதிக மாகிய இரவலான இச்சரீரத்தையுந் தானென்று சத்திய புத்தி பண்ணிக்கொண்டபடி யால் ஒருவருக்குங்காரணந் தோற்றவில்லை

### வினா

ஆனாலிரவலென்பதற்கு உவமான மெப்படியென்னில்

### விடை

ஒருபுருஷன் ஒருதொழில் செய்யக்கருதி அடுத்தவீட்டுக்காரனிடத்தில் ஒரு கத்தியை யிரவலாகவாங்கிவந்து உடனே அந்தக் கத்தியின்மேல்வைத்த பிரிய மோதங்களினா லிரவலென்பது மறந்து சொந்தம்போலவைத்துக்கொண்டு அதனால் தானினைத்த கருமத்தை நிறைவேற்றிக் கொள்ளாமலிருந்து விட்டான் அப்படி யிருக்கச் சிலநாளைக்குப்பிறகு கத்திகொடுத்தவன் சடுதியில்வந்து என் கத்தியைக் கொடுவென்றுகேட்க இவன் அவன் அவனுடையகத்தி யென்பதுந் தானிரவல் வாங்கிவந்தது மறந்து வழக்குப்பேசுமளவில் அவன் கோபங்கொண்டு இவனையடித்து வருத்திக் கத்தியைப்பிடுங்கிக்கொண்டு போவானேயல்லாமல் கத்தியை விட்டுப்போக மாட்டான் - அதுபோல நீயும் ஈஸ்வரனிடத்தில் அனந்த ஜென்மங்கடோறும் வருந்திக்கேட்டு இரவலாகவாங்கிவந்த இந்தச்சரீரத்தை இப்போதுபட்ட பிறவி மூர்ச்சையினால் மறந்து யானெனதென்று சுத்திய புத்தி பண்ணிக் கொண்டிருக்கிறாய் இனி நியமப்படி இரவல் கொடுத்தவர் வந்து பறித்துக் கொண்டு போய் விடுவார் அப்போது முன்போலத்திரியக்காதி தாவரங்களாய்ப் பிறந்தலுத்து ஐயையோ நாம்முன்சரீர மிருக்கும்போதே நல்ல தவத்தைப் பண்ணி

மோட்ச மடையாமற் போனோமே யென்று புலம்பிநிற்க வேண்டுமல்லாமல் வேறில்லை.

## வினா

ஆனால் முன்போலவே யிரவல்வாங்கிவந்து மறவாமல் தவஞ் செய்து மோட்சத்தைப் பெறுவேனென்னில்.

## விடை

திரும்பவும் இந்தமானிடசரீரம் பெறுவதரிது.

## வினா

அதேனென்னில்.

முன்கத்தியை யிரவல் வாங்கி வந்து தான் நினைத்தகருமமு முடிக்காமல் கத்தி கொடுத்தவன் வந்து கேட்டவிடத்தில் தன் சொந்தமென்று வழக்கிட்டதை மறந்து பின்னுமவனிடத்திற்போய் கேட்டால் புரளிக்காரனென்றடித்துத் தள்ளி விடுவானேயன்றி ஒருபோதுங்கத்தியிரவல் கொடுக்க மாட்டான் அதுபோல ஈஸ்வர னிரவலாகக் கொடுத்த தேகத்தை நீயானெனதென் றபிமரனித்து அறியாமையினால் பொய் கொலைகளவு கட்காமமாகிய பஞ்சமாபாதங்களையே மூயன்று வழக்கிட்டு நின்ற தாலினி ஒருக்காலுமிந்தச் சரீரங்கிடைக்கமாட்டாது - ஆதலாலிந்தச்சரீரமும் விவேகமுமிருக்குப்பொழுதே யிரவலுடமையென்றறிந்து தேசாதிப்பிரபஞ் சங்க ளிலுள்ள வபிமானமெல்லாம் விட்டு நிஷ்காமிய தவம்பண்ணிமோட்சத்தைப் பெறவேண்டு மென்றறிவாயாக.

## வினா

ஆனால் யானெனதென்னு மபிமானமில்லாவிட்டால் விவகாரங்களெல்லாம் தூங்கினவன் கைப்பொருள் நழுவினாற்போல நழுவிவிடுமேயன்றித் திடமாய் நடக்கமாட்டாது ஆகையாலபிமான மிருக்கட்டுமே அதனாலரணியே தென்னில்

## விடை

ஓர் கிரகஸ்தனான பிராமணன் தன்கிரஹணியோடு கங்காயாத்திரை போகக் கருதி மறுவளவிற்குடியிருந்த ஒரேழைப்பிராமணனையழைத்து நாங்கள் காசி யாத்திரை போய் வருமளவும் நீர் குடிக்கூலியின்றிக் குடும்பத்துடன் எங்கள் வீட்டில் குடியிருந்துக்கொண்டு எங்கள் வீடுவாசல் மாடுமனை முதலான சகலபண்ட பதார்த் தங்களையும் பதனமாகக்காப்பாற்றி நாங்கள் வந்தவுடன் எங்களிடத்தில் ஒப்பு வித்தால் மாதம் ஒன்றுக்கு ஒருவராகன் சம்பளந்தருவேனென்று சொல்லி அந்த எழைப் பிராமணனைக் குடிவைத்துவிட்டு யாத்திரை போய்க் காசி முதல் கன்னியாகுமரி வரையிலுள்ள மூர்த்தி தலம் தீர்த்தங்களை முறையே தரிசித்துக் கொண்டு சிலநாட் கழித்தபின் தன் வீட்டுக்குத் தன்கிரஹணியோடு வந்துசேர்ந்தான். அந்தப்பிராமணனைப்பார்த்து குடியிருந்த ஏழைப் பிராமணன் நீங்களாரென்று கேட்க

நாங்களுன்னை இந்தவீட்டிற் குடிவைத்துவிட்டுக் காசி யாத்திரை போனவர்களல்லவா இப்போது நாங்கள் சீவந்தராய் வந்து சேர்ந்தோமாதலால் எங்கள் வீடுவாசல் முதலிய வெல்லாம் ஒப்பித்துப்போட்டு உன் சம்பளத்தை வாங்கிக் கொண்டு போவென்று சொல்ல அந்தவசனத்தைக் கேட்டு கோபங்கொண்டு வீடாவதேது வாசலாவதேது குடிக்கூலிக்கு வைத்துப்போவதாவதேது உனக்கேதாவது பயித்தியம் பிடித்ததோவென்று கூவி நீ முன்பு தானே இந்த வீடு வாசல்களை விற்பனை செய்து விட்டுப் போயினையே அதற்கு விக்கிரையசாதன மிருக்கிறதென்று அபிமானித்து வழக்குப்பேச அது கேட்ட காசிவாசியும் நியாயஸ் தலத்திற்போய் கூகூவென்று முறையிட அம்முறையிடு தலைக்கேட்ட நியாயாதிபதிகள் வஞ்சகனான ஏழைப்பிராமணனைப்பிடித்து வரச் சொல்லி விசாரிக்க அவன் அந்தநியாயாதிபதிகளைப்பார்த்து இவர்கள் யாத்திரை போகிறபோது விற்றுவிட்டுப் போனார்களன்றி என்னைக்குடி வைத்துப்போக வில்லையென்று பொய்ச்சாதனமொன்றெடுத்துக்காட்ட அதுகண்ட நியாயாதிபதிகள் இதைச்சாட்சி மூகாவளியா லறியவேண்டுமென்று அடுத்த வீட்டிலுள்ளவர்களை யழைப்பித்து நீங்க ளிந்தச்சேதி யறிவீர்களா வென்று கேட்க அவர்கள் நியாயாதிபதி களைப்பார்த்து இவனைக்குடிவைத்துப்போனதேயல்லாமல் வீடு வாசல்களை விற்றுப் போக வில்லையென்று சொன்னார்கள் - அதுகேட்டநியாயாதிபதிகள் அந்தக் கபடப்பிராமண்னைப்பித்துக்காவல்பண்ணி நிரேதுக்கமாய் ஒருவன் சொத்துகளை யபகரிக்கும்மடி பொய்ச்சாதனமேபடுத்தினபடியால் உனக்கு மிகுந்த அபராதம் விதிக்கப்பட்டது - இந்த அபராதம் விதித்தமுதற் பொருள் சேருமளவும் நீகாராகிரமாகிய காவலிலிருந்துழியஞ் செய்யவேண்டும் நீ அவன் சொத்துகளெல்லா மபகரித்துக்கொண்டபடியால் உன் சொத்துக ளெல்லாம் ஏவம்போடுவித்து வட்டிக்காகச் சேர்க்கப்படுமென்று நியாயந் தீர்த்தார்கள் அதுபோலத் தேகாதி பிரபஞ்ச விவகாரத்தில் ஒருநுவக்கு யானென தென்னு மபிமான மேலிடுமாகில் முதலாகிய மோட்சபலமுங்கெட்டு வட்டியாகிய நித்திய சுபானுபவமும் போய் சதாதுக்கத்திலே யே முழ்கிக்கிடப்பன்.

## வினா

ஆனால் அபிமான நீங்கும் வழியேதென்னில்.

## விடை

சரீரமுதலாயுள்ள வகப்பற்றையும் ஈஷணாத்திரயங்களான புறப்பற்றையு மன்னியமென்றறிந்து அதுகளில் நானெனதென்று வரும்பிமானங்களை விட்டு இது களை நமக்கும் கூட்டிவைத்த வினையானது நியமப்படி பிரித்துவிடு மென்பதிற் சந்தேகமில்லை இதுவெல்லாங் கனவிற்கண்ட பொருள்போலாகுமென்று கருதி அவற்றில் ஆகாமிய மெழவொட்டாமல் பிரமத்தியானத்தி லனுதினமும்பழகுவதே அபிமானநீங்கும்வழி.

## வினா

அபிமானமற் றனுபவிப்ப தெப்படியென்னில்.

## விடை

புனியம் பழத்தினோடுபோலுந் தாமரையிலையிற் றண்ணீர்போலும் சேற்றிற் பின்ளை பூச்சிபோலும் யானெனதென்னும்பற்றுகளிற்பற்றியும் பற்றாதிருந்து சற்குரு சாஸ்திர முன்னிலையில் சிரவணாதிகளைய வசியம்பண்ண வேண்டியது சித்தம்.

## வயிராக்கியப்பிரகரண - முற்றிற்று.

## முமூட்சுப்பிரகரணம்.

முற்பிரகரணத்தால் பிரபஞ்சவயிராகந்தோன்றி தேகாதிப்பிரபஞ்சங்கள் னித்தியமென்றும், தேகியொருவனே நித்தியமென்றும் ஒருவாற்றானுணர்ந்த சீஷனுக்கு மோட்சதாகமுண்டாகும்படி மேல் முமூட்சுப்பிரகரணங் கூறுகின்றார்.

### கவி

சற்குருசாத்திரத்தாற்சவணமாகிகளுண்டாக
நற்றுணைசகாயமான வனுபந்தநான்குமுண்டாய்
முற்படுசாதனத்தின் மோட்சதாகத்திலே
சிற்பாகுருவைத்தேடித் திகைத்திடுவோன்முன்கண்டான் (1)

கண்டனனாசான்பாதங்கருத்துறவணங்கியெந்தாய்
பண்டைமாயையினான் மூடும்பஞ்சகோசத்தை நீக்கித்
தொண்டனேற்குபதேசந்தான் சொல்லுமென்றவனைவைத்தங்
குண்டெனுந்தீக்கை தீசெய்தங்கொருப்படுஞ்சுத்தஞ்செய்தான்

இதன்பொருள்

### வினா

சற்குரு சாஸ்திரமுன்னிலையிற் சிரவணாதிகளுண்டா வதற்கு முன்பு செய்காரியமே தென்னில்

### விடை

அனுபந்தசதுஷ்டயங்களையனுசரிக்கவேண்டும்.

### வினா

அனுபந்தசதுஷ்டயமாவதேதெனில்.

### விடை

அதிகாரி விஷயம் .பந்தம் பிரயோசன மென்னுமிந்த நான்கும் சாஸ்திரா ரம்பத்திற்குப் பலம் ஆதலாலிந்த நான்கும் வேண்டும்,

### வினா

அதெப்படியென்னில்

### விடை

சாஸ்திராரம்பஞ்செய்கிற புருஷனுக்குப் பலலக்ஷணமா யிருப்பதே பிரயோசனம் அப்படி பிரயோசனமில்லாவிட்டால் மூடனுக்குக்கூடவொன்றிலும் பிரவிர்த்திவரமாட்டாது.

### வினா

இந்தச்சாஸ்திரத்திற்கதிகாரியென்னவென்னில்.

### விடை

சாதனசதுஷ்டய சம்பத்தியுடையவனும் யுத்தி சாமர்த்தியனும் வித்துவானும் மேதாவியுமாயிருக்கிற புருஷனே யதிகாரி.

### வினா

விஷயமாவதேதென்னில்,

### விடை

சீவப்பிரமாயிக்கமாயிருக்கிற சைதன்னியமேவிஷயம்- இன்னம் எந்த சொரூபத்தில் சகலவே தவுபநிஷ தார்த்தங்களுங் கூடியிருக்குமோ அதுவே விஷயமொன்றுஞ் சொல்லப்படும்.

### வினா

சம்பந்தமாவதேதென்னில்.

### விடை

இப்போது சொன்னசீவப்பிரமாயிருக்க மானவஸ்துவுக்கும் அந்த வஸ்துவைப் பிரமாணமாகச் சொல்லுஞ் சாஸ்திரத்திற்கும் போதபோத்தியலக்ஷண மாயிருப்பதேசம்பந்தம்.

### வினா

பிரயோசனமாவதேதெனில்,

### விடை

பிரத்தியேகான்மாவும் பிரமமும் அயிக்கியானுபவம் பெறுவதேயானந்தம் அவ்வானந்தானுபவத்தினாற் சகலசங்காரபந்தங்களு மொழிந்து நிற்பதே பிரயோசனம், எவனொருவனுக்குச் சாதன சதுடஷ்யம் பொருந்தியிருக்கின்றதோ அவனுக்கே இந்தப்பிரயோசனமுஞ்சித்தி, நான்குசாதனத்தி லொன்று குறைந்தாலும் சித்திக்காது இந்நான்கு சாதனமுமுடையவனே வேதாந்த விசாரத்திற் கதிகாரியாவன்.

### வினா

இந்தச்சாதன சதுஷ்டயமெப்போது சம்பாதிக்க வேண்டு மென்னில்

### விடை

சிரவணத்திற்கு முன்போகம்பாதித்துக்கொண்டுபிறகு சிரவணத்தி லிறங்க வேண்டும் இல்லாவிட்டால் ஞானமுண்டாக மாட்டாது

### வினா

சாதனசதுஷ்டயமாவதேதெனில்

### விடை

நித்தியானித் தியவஸ்துவிவேகம் - இகமுத்திரார்த்த பரபோகவிராகம் சமாதி கட்க சம்பத்தி முமூட்சுத்துவம் இந்நான்குமாம்

### வினா

இந்த நான்கு சாதனங்களில் நித்தியா நித்தியவஷ்துவவேகம் ஒன்றிருந்தாற் போதாதா நான்கு சாதனமுஞ் சம்பாதிக்கவேண்டு மென்பதேனெனில்.

### விடை

ஒன்று போதாது இந்தலோகத்திற் சாஸ்திரக்கியாளுக்கு நித்தியா நித்தியவஸ்து விவேகமுண்டாயிருந்தும் அவர்கள் விஷயாசத்தியுடையவர்களாய் காமியகன்மங்களைத்தானே செய்துவருகிறார்கள் ஆகையினா லவர்களுக்கு மதிகாரத்துவங்காணோம் ஆதலாலி ரண்டாஞ் சாதனமும் வேண்டும்.

### வினா

ஆனாலதிகாரிக்கிவ்விரண்டும் போதுமேயென்னில்.

### விடை

போதாது சிலரிஷி யீஸ்வரர்களுக்கு இவ்விரண்டு சாதனங்களு முண்டாயிருந்தும் அவர்களுக்குங் கோபதாப மேலிட்டுப் பிறரைச்சபிக்கம் படுகின்ற மையால் அவர்கட்கு மதிகாரத்துவங் காணோம் ஆதலால் மூன்றாசாதனமும் வேண்டும்.

### வினா

அதிகாரிக்கு இம்மூன்றும்போதுமேயென்னில்.

### விடை

போதாதுசிலபேர் சடைமுடிமுடி முடித்துக் கிருஷ்ணாசலங்கக்கத்தி லிடுக்கிக் கொண்டு யோகீஸ்வராளென்னும் பெயரையுடையவர்களாய்ச் சமுசாரத்தினின்றும் புறப்பட்டு விரத்தர்களாய் உபசாந்தர்களாயிருக்கும் பெரியோர்களுக்கு இம்மூன்று சாதனங்களு முண்டாயிருந்தும் சிரவணமென்றால் எழுந்து போய்விடுகிறபடியால் அவர்கட்கு மதிகாரத்துவங்காணோம் ஆதலால் நான்காஞ்சாதனமும் வேண்டும்

இந்நான்கு சாதனமு முடையவனே யதிகாரி அவனுக்கே முத்தி அதிலொன்று குறைவாயிருந்தாலு முத்தியுண்டாகாது.

**வினா**

நித்தியாநித்தியவஸ்து விவேகலட்சணமாவதேதெனில்,

**விடை**

பிரமமே நித்தியம் தேகாதிப் பிரபஞ்சமெல்லா மனித்தியமென்று சுருதியுத்தி அனுபவப்பிரமாணங்களாற் கண்டறிவது.

**வினா**

அனித்தியமென்பதில் சுருதிப்பிரமாணமேதென்னில்,

**விடை**

பிரளயகாலத்தில் தேகாதிப்பிரபஞ்சமான சசுலமும் பிகுதி வியிலொடுங்கி அந்தப் பிருதிவியும் அதற்குப்பத்துகொண்ட அப்புவிலொடுங்கி அப்புவும் பத்து கொண்ட தேயுவிலொடுங்கித் தேயவும் பத்துகொண்ட வாயுவிலொடுங்கி வாயுவும் பத்துகொண்ட ஆகாயத்திலொடுங்கி ஆகாசமும் அஞ்ஞானத்திலொடுங்கி அஞ் ஞானமும் பிரமத்திலொடுங்கு மென்பதைக் கண்டறிவதே சுருதிப்பிரமாணம்.

**வினா**

யுத்திப்பிரமாணமேதென்னில்

**விடை**

பஞ்சபூதங்களே தடித்துப் பௌதிகமாய் நாள்தோரும் நசிக்கிறதென்று கருத்திற்கண்டறிவதே யுத்திப்பிரமாணம்

**வினா**

அனுபவப்பிரமாணமெப்படியென்னில்

**விடை**

சாக்கிரத்திருந்த பாகியமான நாமரூபப்பிரபஞ்சங்கள் சொப்பனமான அந்தர் மனோ சங்கற்பத்திலில்லை - சொப்பனத்திருந்த அந்தர் மனோசங்கற்பங்கள் சுழுத்தியான அவித்தையில்லை - சுழுத்தியிலிருந்த அறியாமையும் ஆனந்தமுஞ் சாக்கிரசொப்பனத்திலில்லையென்று கண்டறிவதே யனுபவப்பிரமாணம்.

**வினா**

இனிபிரமம் நித்தியமென்பதிற்சுருதிப் பிரமாணமேதென்னில்,

### விடை

பிரளயத்தில் பஞ்சபூதமும் அதன்காரணமான அஞ்ஞானமும் பிரமத்தி லொடுங்கிப் பிரமமாத்திரம் மிச்சமாய்ச் சேடித்திருக்குகுமென்றறிவதே சுருதிப் பிரமாணம்

### வினா

யுத்திப்பிரமாணமேதென்னில்.

### விடை

இந்தப்பூதபௌதிகங்களெல்லாம் நாள்தோறு நசித்துமீண்டும் உற்பத்தியாகிற தற்குக் காரணமான பிரமமொன் றிருக்குமென்றறிவதே யுத்திப்பிரமாணம்,

### வினா

அனுபவப்பிரமாணமேதென்னில்

### விடை

நித்தியத்துவமான பிரமமேபூதபௌதிகங்களாகத் தோற்றுதென்று கண்டறிவதே யனுபவப்பிரமாணம் இதுவே முதற்சாதனம்.

### வினா

இகமுத்திரார்த்தபலபோகவிராகலட்சணமாவதேதென்னில்,

### விடை

இகத்திலுண்டான தாரபுத்திர தனதானியாதிகளிலும் ராஜ போகத்திலும் பரத்திலுண்டான யக்ஷஸ்திரீகளிடத்தும் அமிர்தாதிசொர்க்க போகத்தினிடத்தும் மலமூத்திரவாந்தியசனங்களிலெப்படி ஒருவருக்கு மாசைபிறவாதோ அப்படியே நீராசைபிறந்திருக்கவேண்டுமென்று கருதியுத்தியனுபவப் பிரமாணங்களாற் கண்ட றிவது,

### வினா

இகலோகபோகங்கள் அசுத்தமென்பதற்குச் சுருதிப்பிரமாணமேதென்னில்,

### விடை

தார புத்திராதிகளுடைய சரீரங்களெல்லாம் எச்சில் தீட்டுரத் தமாங்கிஷ மல மூத்திரங்கள் கூடி ஒருவடிவமாக நிருமிக்கப்பட்டிருக்கிறதென்று கண்டறிவதே சுருதிப்பிரமாணம்,

**வினா**

யுத்திப்பிரமாணமேதென்னில்.

**விடை**

அத்திக்கனிபார்க்கிற கண்களுக்குச் சுத்தமாகவும் அதைப் பிட்டுப்பார்த்தால் அசுத்தமானகிருமிகணிறைந்து அசங்கிதமாக வுமிருப்பது போல தாரபுத்திராதிகளும் பார்க்கிற கண்களுக்குச்சுத்தமானரூபலாவண்ணியமாகவும் உள்ளே மலமூத்திராதி துர்க்கந்தங்கணிறைந்திருக்கிறதென்று விசாரிக்குமளவில் அசுத்தமாகவுமிருப்பதி னால் இவர்களைத் தொட்டாலு முடனே சுத்திசெய்துக்கொள்ளவேண்டு மென்று கண்டறிவதே யுத்திப்பிரமாணம்.

**வினா**

அனுபவப்பிரமாணமேதென்னில்.

**விடை.**

அவர்களுக்குவியாதி பீடைகணேரிட்டவிடத்தும் எச்சில் தீட்டுமலம்சீழ் இரத்தமாங்கிஷங்கள் காணப்பட்டவிடத்தும் அவர்களைத்தொட அசங்கிதமாயிருப்ப தினாலும் அவர்களிறந்துபோனவிடத்தும் அரைநாழிகையாவது வீட்டில் வைக்காமல் சூதகமென்றுடனே யெடுத்துக்கொண்டுபோய் மயானத்திற் போட்டுவருதலினாலும் அசுத்தமென்று கண்டறிவது அனுபவப்பிரமாணம்.

**வினா**

திரவிய மசுத்தமென்பதற்குச் சுருதிப்பிரமாணமேதென்னில்.

**விடை.**

திரவியந்தேடுங்காலத்தில் சுத்தமின்றி அசுத்தமான தொழில்களிலு முயலும் படி மனமுண்டாகுமென்பதைக் கண்டறிவதே சுருதிப்பிரமாணம்.

**வினா.**

யுத்திப்பிரமாணமாவதேதென்னில்.

**விடை.**

திரவியங்கிடைத்தகாலத்தும் மனைவி மக்கள் கிரகபூமிகளைத் தேடுகின்ற பாசபந்தத்திற்கட்டுண்டழுந்திரிற்கு மென்பதைக்கண்டறிவதே யுத்திப்பிரமாணம்.

**வினா.**

அனுபவப்பிரமாணமாவதேதென்னில்

**விடை.**

திரவியமதிகரித்தவிடத்து ஆசைகுரோதலோப மதங்களால் மூடப்பட்டு முன்பின் தோற்றாது அஞ்ஞானாந் தகா ரகூபத்தில் விழுந்து பலவிகாரங்களை யடையுமென்று கண்டறிவதே யனுபவப்பிரமாணம்.

**வினா.**

பரலோகபோகங்கள் அசுத்தமென்பதற்குச்சுருதிப்பிரமாணமேதென்னில்,

**விடை.**

மானிடசரீரத்திற்பொருந்துந் தாபத்திரயங்களுந்தேவசரீரங்களுக்கு முண்டென் றறிகிறதே சுருதிப்பிரமாணம்

**வினா.**

யுத்திப்பிரமாணமேதென்னில்,

**விடை.**

தேவபோகத்திலும் மனுஷபோகத்தைப் போலவே துக்கமென்பதைக் கண்டறிவதே யுத்திப்பிரமாணம்.

**வினா.**

அனுபவப்பிரமாணமேதென்னில்

**விடை.**

தேவர்களும்புண்ணிய முடிந்தவிடத்தில் அதோமுகப் பட்டு தலை கீழாய்ப்பூமியில் விழுகிறபடியால் அசுத்தமென்று கண்டறிவதே யனுபவப்பிரமாணம் இதுவேயிரண்டாஞ்சாதனம்.

**வினா.**

சமய திஷ்ட்க சம்பத்திலட்சணமாவதேதென்னில்.

**விடை.**

சமம் தமம் உபாதிதி தீட்சை சமாதானம் சிரத்தை யென்றறுவகைகளாம்.

**வினா.**

சமமாவதேதென்னில்.

**விடை.**

இறந்தகாலத்திற் கழிந்தபொருளையும் வருகாலத்தில் வரும் பொருளையுங் குறித்துச் சிந்திப்பது மனம் அம்மனத்தை நோக்கி அவற்றைச் சிந்திக்க வொட்டாது நிறுத்தினால் நிகழ்காலத்திலுள்ள பொருள்களின் மமதை கொள்ளும் இப்படிய பகரித்த பொருளுக்கொருவிக்கின நேரிட்டால் உடனே துக்கம் வரும் ஆதலால் அதுகளிலொன்றையு நினைக்க வொட்டாமல் மனோநிக்கிரகம் பண்ணுவதே சமம்.

**வினா.**

தமமாவதேதென்னில்

**விடை..**

ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை விஷயங்களிற்சொல்லவொட்டாமற் றடுப்பதே தமம்.

**வினா.**

உபாதியாவதேதென்னில்.

**விடை.**

செய்யப்பட்ட சகலகன்மங்களிலும் பலனை நாடிச் செய்தால் மீண்டும் பிறந்து அக்கன்ம பலன்களை யனுபவிக்கவேண்டிவருமாதலால் அதுசுமையென்று தள்ளிவிட்டு தான் செய்யுஞ் சகலகன் மங்களிலும் பலனை நாடாது ஈசுரார்ப் பணமாகச் செய்வதேயுபாதி.

**வினா.**

திதீட்சையாவதேதென்னில்,

**விடை.**

சுகதுக்கங்கள் வந்தபோது அதுகள் தேகேந்திரியாதியந்தக் கரணங்களுக்குச் சுபாவமென்று சமனாகக்கண்டு தன்னையொருவர்வாதித்தவிடத்தில் அவர்களைத் தண்டிக்கும் திதாரவல்லபந் தனக்குண்டாயிருந்தும் பொறுத்திருக்கின்றதே திதீட்சை,

**வினா.**

சமாதானமாவதேதென்னில்,

**விடை.**

பெரியோர்களிடத்திலிருந்து சிரவணம் பண்ணுங்காலத்தில் இந்திரியாதியந்தக் கரணங்களை அந்தர்பாகிய விஷயங்களிற்போய் விழவொட்டாமற்றடுத்துச் சிரவணத்தினிறுத்துவதே சமாதானம் இந்தச் சமாதானமில்லாவிட்டா லுபயப் பிரஷ்டனாவன்.

**வினா.**

சிரத்தையாவதேதென்னில்

**விடை.**

குருவினிடத்தும் வேதாந்தசாஸ்திரத்தினிடத்தும் ஈஸ்வரனிடத்தும் நியம்மாய்பயபக்தி விசுவாசமுற்றுச் சித்தசுத்தியுண்டாகி யிருப்பதேசிரத்தை - இதுவே மூன்றாஞ்சாதனம்.

**வினா.**

முமூட்சுத்துவவிலக்கணமாவதே தென்னில்

**விடை.**

இந்தசெனன மரண ரூபமானசங்காரப் பிரவாகத்திலடிபட்டு ஆதியாத்மீக ஆதிபௌதீக ஆதிதெய்வீக மென்னுந் தாபந்திரயங்களால் வருந்தி இந்தச் சங்காரதுக்கத்திலொரு நிமிஷமாகிலுமிருக்கப்படாதென்று மகாபயங்கொண்டு இந்தப் பிரமையை எந்தப்பெரியோர்கள் போக்குவார்களோ சற்குருவாயிருக்கிற மகாத்மாக்க ளெங்கேயிருப்பார்களோவென்று சுட்டசட்டிகைவிட்டதுபோல சகலபோதங்களையுங் கைவிட்டுத் துறந்து புறப்பட்டு மகா தீவிரதா பக்குவத்துடன் பகலெல்லாம் ஆசிரியரெங் குளரோவென்று தேடியும் இராமுழுதும் நித்திரைவராமல் துக்க மேலிட்டு வேந்தன்முதலிய எண்குணங்களுடன் தேசாந்தரங்களிலும் வனாந்தரங்களிலும் பர்வதாந்தரங்களிலுந் தேடியலைந்து திரிகின்றதே முமூட்சுத்துவர் இதுவே நான்காஞ்சாதனம்.

**வினா.**

இப்படியுள்ள முமூட்சுவுக்குக் குருதரிசனமெப்படி கிடைக்குமென்னில்.

**விடை.**

இவன் அனேக ஜென்மங்களிற்செய்துள்ள நிஷ்காமியபுண்ணிய பலத்தினால் அவாங்கமனாகோசரமா யிருக்கப்பட்ட பிரமந் தானே கிருபைகூர்ந்து ஆலியாலாங் கட்டியாய்த் தடித்ததுபோல மானிடச்சட்டை சாத்திபாற்கடல் பெருகி வந்ததுபோல இவன் தாகந் தணிக்கும்பொருட்டு ஒரு குருமுகுர்த்தமா யெழுந்தருளி வரும்.

**வினா.**

அங்ஙனம்வந்த குருவைக் கண்டிவன்செய் காரியமேதெனில்.

**விடை.**

அங்ஙனமானவுடன் சரீரமுழுதும் நெருப்பு பற்றிக்கொண்டு சலந் தேடுகிறவனுக்கு முன் கங்காநதி யெதிர்ப் பட்டதுபோலும் ஓர் மகாதரித்திரனுக்கு முன் உலவாக்கிழி எதிர்ப்பட்டதுபோலு மகா சந்தோஷ கரமாய்க்கண்டு சற்பாவசங்கொண்டு அடியற்றமரம்போல் அவரது பாதக மலங்களில் விழுந்து

திரிகரணசுத்தியாய் ஏகாங்க துவிதாங்க திரியாங்க பஞ்சாங்க அஷ்டாங்க நமஸ்காரங்கள் செய்து இரண்டு கைகளாலும் பாதத்தைப் பற்றிக்கொண்டு சுவாமீ அடியேன் நெடுங்காலமாய் ஜெனன மரணமென்னும் பாலைவனத்திற்புக்கி மாயாமோகமென்னு மிருளினான் மறைப்புண்டு பஞ்சகோசங்களென்னும் பாசவலையிற் சிக்கிக்கொண்டு தாபத்திரயாக்கினியினால் தகிக்கப்பட்டு நிற்கிறேன் ஆதலாற் கிருபாமூர்த்தியாகிய தேவரீர் அவைகளெல்லாம சூரியனைக் கண்டபனிபோல் நீங்கும்படி கிருபாகடாட்சம் வைத்து என்மனவெப்பநீங்கிக் குளிர்ச்சியாகும் பொருட்டு அனுக்கிரகஞ் செய்தருளுமென்று விண்ணப்பஞ்செய்வது.

## வினா.

அங்கனஞ் செய்தகாலையி லாசிரியர்செய் காரியமேதெனில்.

## விடை.

அப்படி சரணாகதியடைந்த சீஷனைச் சமீபத்திலிருக்கவைத்து தமது பரிபூரண திருஷ்டியினாற்பார்த்து அவனைப் பயப்படாதேயென் றபயாஸ் தங்கொடுத்து அவனை ஒருபோதும் அகங்கார மதயானைவந் தடராமலும் மாயா மோகம் பற்றாமலும் சித்தமென்னு நாய்ப்பரிசம் படாமலும் நிதானந்தாறுபூதி யுண்டாகும்படி வேதாந்த விசாரமென்னும் சிம்மாசனத்தில் தாமெழுந்தருளியிருந்து முற்சொல்லிய அகங்காராதி மிருகங்கள் அந்தத்தொனியினா லடங்கும்படி செய்து பிறகு நிச்சயாத மகமான சூட்சும புத்தியுள்ளசீஷன் மஸ்தகத்தில் அஸ்தத்தை வைத்துப் பிரமோபதேசமான ஞான தீக்ஷை செய்தருளுவார்.

## வினா.

தீக்ஷையென்பதற் கருத்தமே தென்னில்,

## விடை.

தீயென்றும் தீக்ஷையென்று மிருவகை அவற்றுள் தீஎன்பது அகக்கரணமான மனகங்காரஞ் சித்தரிற்கப்புத்தியே அவயவத்தேகாவதான என நிச்சயம்பண்ணுவது அஃதெப்படி யென்றால், பாம்\பானது ரூபதேஜசானகண்களால் மந்திரநிகளாகிய சத்தத்தைக் கிரகிக்கப் போகாதென்றறியாமல் அந்தமந்திரங்களாகிய சத்தத்தத்தைக் கிரகித்து அதன்வசத்திற் கட்டுப்பட்டதுபோல் புத்தியும் தான் ஞானதேஜ சென்றறியாமல் அவயவத்தே காவதான நிச்சய புத்திபண்ணுமென்று போதிப்பது, தீக்ஷையென்பது சகலகன் மங்களு நசிப்பித்து ஆகாசம்போலே நிர்மலமாக்குவது இந்தப்படி நிலைத்ததே பிரமோபதேசமான ஞான தீக்ஷையென் றறியவேண்டியது சித்தம். வேர்த்தன் முதலிய வெண்குணங்களென்றதற்குப் பிரமாணம்.

## ஒழிவிலொடுக்கம்.

வேற்க்குங் கண்ணீர்ததும்புங் கம்பிக்கி மெய்நடுங்கும்
வார்த்தை தழுவு மனம்பத றுங் - கார்க்கமதாய்க்
காந்து முரோமாஞ் சலியா குங் காதலித்தார்க்
கேய்ந்த குணங்கா ணிவையெட்டும்.

ஏகாங்கமதுவிதாங்க நமஸ்காரமென்பதற்குப் பிரமாணம்.

## சிவபுண்ணியத்தெளிவு.

கிரமே மகாங்கம் வலக்கரத்தைச் சிரத்திற்குவித்தல் துவிதாங்கஞ்
சிரமேல்வாம கரத்தினையுஞ் சேர்த்தல் திரியாங்கமதாகுஞ்
சிரநீள் கரஞ்சானுக் கணிலந் தீண்டிற் பஞ்சாங்கமதாகுஞ்
சிரமோவாய் காதுகைசானு செகத்திற்படித லட்டாங்கம்,

## முமூட்சுப்பிரகண முற்றிற்று.

## உற்பத்திப் பிரகரணம்.

### அவதாரிகை.

முற்பிரகரணங்க ளிரண்டினாலு மோட்சதாகம்பிறந்து சற்குருலாபமுண்டாகிச் சிரவணாதிகம்பெற்ற சீஷனுக்குமேல் அபரோட்சாத்மானுபவ சமாதி ஞான முண்டாகும் பொருட்டு உற்பத்திப் பிரகரணங்கூறுகின்றார்.

### கவி.

சுத்தமாம்பிரமந்தன்னிற் றோற்றுமாயையின்குணத்தாற்
பற்றுறாவீசன்சீவன் பஞ்சபூதங்களுண்டாய்
மற்றுமாம்பூதந்தானே மருவிச்சூக்குமங்களாகி
நீத்தலுந்தூலபஞ்சீகரணமாய் நிகழுங்காணே. (1)

### இதன்பொருள்.

### வினா.

அகண்டபரிபூரண சொரூபவியாகத்தில் ஜெகஜீவபரந்தோற்றிய தெப்படி யென்னில்,

### விடை.

சுத்தப்பிரமமாகிய சர்வசாட்சியினிடத்து அக்கினியிற் சூடு போல பின்னமாக வொரு சிற்சத்தியுண்டு அச்சத்தி அதீதப்பிரம்த்திலடங்கி நிற்கும்போது அவ்வகண்டசொரூபவியாபகத்திற்குச் சுத்தப்பிரமமென்று பெயர் அப்படிய பின்னமான சிற்சத்திபின்னமா விசிரிம்பித்துச் சுத்தப்பிரமத்தை வியாபிக்கும்போது பராசத்தியென்று பெயராயிற்று அப்பராசத்தியாகிய மகாகாரண சரீரத்துடன்கூடி அகண்டாதீதஸ்தானமாகிய துரியாவஸ்தைக் கபிமானியாயிருந்து தற்பிரகாசமாய் விளங்குகையால் பரைவியாபகத்திற்குள்ளான சுத்தப்பிரமத்திற்குப் பரப்பிரம மென்றுங் குருவென் றுஞ் சிவமென்றும் பெயர் வந்தது இது சாமவேத மகாவாக்கிய மான தத்தொம சிவாக்கியத்திற் சொல்லும் இது அசிபதார்த்தமான சிவ துரியம் இப்படி அவயவரகிதமாயிருக்கின்ற பராசத்தியினிடத்தில் பிரமசந்நிதான விவேஷத்தால் சத்துவரஜசு தமசென்னும் அவிகிர்ததிரிகுணங்களுண்டாயின,

### வினா.

அக்குணங்களுக்கு நாமமேதென்னில்

### விடை.

சத்துவத்திற்கு ஆனந்தரூடசத்தியென்றும் ரஜசுக்குச் சித்ரூபசத்தியென்றும் தமசுக்குக் சத்ரூபசத்தியென்றும் பெயராயின.

### வினா.

அந்தப்பரப்பிரமம் (சத்துவத்திற்) பிரதிபலித்தபோது நாமமேதென்னில்,

### விடை.

ஆனந்தரூபசத்தியாகிய காரணசரீரத்துடன் கூடி உபசாந்தஸ்தானமாகிய சர்வானந்த சுழுத்தியவஸ்தைக் கபிமானியாயிருந்து சர்வமுந்தனாய் விளங்குறோ மென்பது மறந்து உபசமனமா யதீதப்பட்டு நிற்பதால் அப்பரம்பிரமத்திற்குப் பரமானந்தரென்றும் பெயராயின இதுவே அசிபதார்த்தமானசிவசுழுத்தி,

### வினா.

பரமானந்தர் (ரஜசிற்) பிரதி பலித்தபோது நாமமேதெனில்,

### விடை.

சித்ரூபசத்தியாகிய சூட்சும சரீரத்துடன் கூடி விஸ்வக்கிராச ஸ்தானமாகிய சர்வப்பிரகாச சொப்பனாவஸ்தைக் கபிமானயாயிருந்து சகலபுவன சராசரப் பிரபஞ்சங்களையும் விழுங்கித்தானே ஜெகசொரூபமாகப் பிரகாசித்து நிற்பதால் அப்பரமானந்தருக்குத் தேஜோன் மயரென்றும் பிரஜாபத்தியரென்றும் பெயராயின இதுவே அசிபதார்த்தமான சிவசொப்பனம்,

### வினா.

தேஜோமயர் (தமசிற்) பிரதி பலித்தபோது நாமமேதெனில்,

### விடை.

சத்ரூபசத்தியாகிய ஸ்தூலசரீரத்துடன்கூடிச் சம்பூரணஸ்தானமாகிய சர்வவியாக பகஜாக்கிராவஸ்தைக் கபிமானியாயிருந்து சர்வ சராசரப் பிரபஞ்சங்களுள்ளுந் தானே தானாய் விளங்கிநிற்பதால் அந்தத் தேஜோமயருக்குப் பரிபூரணரென்றும் சிற்சொலிதையென்றும் பெயராயின இதுவே அசிபதார்த்தமான சிவசாக்கிரம்.

## அரிசிபதமுற்றும் இனிதற்பதம்.

### வினா.

அந்தப் பரிபூரணப் பிரமசந்நிதானத்திற் சேஷ்டித்ததென்னையெனில்,

### விடை.

சுத்தியில் ரசிதப்பிராந்தி தோன்றியதுபோல மூலப்பிரகிருதியென்றொருசத்தி விவர்த்தமாகச் சேஷ்டித்தது அந்தச்சத்தியைப் பரிபூரணர் வியாபித்திருந்தபடியால் அந்தமூலப் பிரகிருதியில் பிரமசந்நிதான விஷேஷத்தால் (சத்துவரஜசுதமசென்னும்) விகிர்த்திரிகுணங்க ளுண்டாயின,

## வினா.

அவைகளினாமமேதென்னில்,

## விடை,

மாயையென்றும் அவித்தையென்றும் பிரகிருதியென்றுஞ் சொல்லப்படும் அவற்றுள் மாயையினிடத்து நிருமல மான கண்ணாடியிற் சூரியன் பிரதிபலித்ததுபோலப் பரிபூரணப்பிரமம் லட்சணமாகப் பிரதிபலிக்கும் அந்தப்பிரதி விம்பசை தன்னியத்திற்கு ஈஸ்வரனென்று பெயர் அந்தமாயையாகிய மகாகாரண சரீரத்துடன்கூடிப் பிரமாண்டஸ்தானமாகிய துரியாவஸ்தைக் கபிமானி யாயிருந்து சகலசராசரப் பிரபஞ்சத்தினுங்கலந்து நிற்பதால் அப்பரிபூரணப் பிரமத்திற்கு ஈஸ்வர சாட்சியாகிய பிரமமென்றுஞ் சர்வஞ்ஞரென்றும் பெயராயின இதற்கு ஞானாசத்தி, சகுணஐசுவரியசம்பன்னத்துவபோகம் ஓங்கார அட்சரத்திற் சகலமுமடங்கி யிருக்கையா லிதை யதிஷ்டித்திருந்த பிரம சைதன்னியத்திற்கு மகாத்துமாவென்று மொருபெயராயின இதுவே தற்பதார்த்தமான பாதுரியம்,

## வினா.

ஆனால் மும்மூர்த்திகளான தெப்படியென்னில்,

## விடை.

சத்துவகுண மாயையில் சத்துவம் ரஜசதம சென்னு முக்குணங்களுண்டாயின அவற்றுள் தாமக்குணப்புரதானமாய் அவ்வியாகிருதமாகிய காரணசரீரத்துடன்கூடி அக்கினிஸ்தானமான கழுத்தியவஸ்தைக்கபிமானியாயிருந்து சகலபிரபஞ்சங்க ளையும் சங்காரம்பண்ணிநிற்பதால் அந்த அபிமானிக்கு அவ்வியாகிருதெரன்றும் பெயராயின இதற்குத்திரேதாயிசத்தி, சர்வசங்காரபோகம் மகார அட்சரம் இவ்வட்சரத்திலித்தனையூ மடங்கி யிருக்கிறபடியால் இதை யதிஷ்டித்திருந்த ஈஸ்வரனுக்குச் சுத்தமாவென்று மொருபெயர்வந்தது இதுவே தற்பதார்த்தமான பரசுழுத்தி சத்துவகுணப் பிரதானமாக இரணிய கருப்பமாகிய சூட்சும சரீரத்துடன் கூடிச் சந்திரஸ்தானமான சொப்பனா வஸ்தைக் கபிமானியாயிருந்து சகல பிரபஞ்சங்களையு மிரட்சித்து நிற்கையால் அவ்வபிமானிக்கு இரணியகருப்ப ரென்றும் விஷ்ணுவென்றும் பெயர் இதற்கு இச்சாசத்தி, சர்வபாவகர்த்துருத்வ போகம் உகார அட்சரம் இவ்வட்சரத்திலித்தனையு மடங்கியிருக்கிறபடியால் இதையதிஷ்டித் திருந்த ஈஸ்வரனுக்குச் சூத்திராத்மாவென்று மொருபெயர் வந்தது இதுவே தற்பதார்த்தமான பரசொப்பனம் இராசதகுணப் பிரதானமாக விராட்டாகிய ஸ்தூல சரீரத்துடன்கூடிச் சூரியஸ்தானமான ஜாக்கிராறஸ்தைக் கபிமானி யாயிருந்து சகலச ராசாப் பிரபஞ்சங்களையும் சிருஷ்டிபண்ணி நிற்பதால் அவ்வபிமானிக்கு விராட்டென்றும் பிரமாவென்றும் பெயர் இதற்கு கிரியாசத்தி, சர்வகர்த்துருத்வபோகம் அகாரவட்சரம் இவ்வட்சரத்திலித்தனையு மடங்கி யிருக்கிறபடியால் இதையதிஷ்டித்திருந்த வீஸ்வரனுக்குச் சர்வபூதாத்மாவென்று மொருயெயர்வந்தது இதுவே தற்பதார்த்தமானபரசாக்கிரம்.

## தற்பதம் முற்றும் - இனிதொம்பதம்.

### வினா.

இராசதகுண அவித்தையின் காரியமெப்படியென்னில்,

### விடை.

அவித்தையினிடத்து மலினசலத்திற் சூரியன் பிரதிபலித்தது போலப்பிரம சைதன்னியம் பிரதிபலிக்கும் அந்தப்பிரதி பலனத்திற்குச் சீவனென்று பெயர் அவ்வவித்தையாகிய மகாகாரண சரீரத்துடன் கூடிலலாடஸ்தானமாகிய துரியா வஸ்தைக் கபிமானியாயிருந்து அவஸ்தாத்திரய விலட்சணஞான சொரூபியா யிருக்கிறபடியால் அப்பிரமசைதன்னியத்திற்குச் சீவசாட்சியாகிய கூடஸ்தரென்றும் பிரத்தியேகாத்மாவென்றும் பெயராயின, இதற்கு ஞானாசத்தி, ஆனந்தபரவசபோகம் ஓங்கார அட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையு மடங்கி நிற்கையால் அவ்வாத்மாவுக்கு நின்மலாத்மாவென்று மொருபெயர்வந்தது இதுவே தொம்பதார்த்தமான சீவதுரியம்.

### வினா.

ஆனால் மூவகையான்மாக்களுண்டான தெப்படி யென்னில்,

### விடை.

இராசதகுண அவித்தையில் (சத்வரஜசுதமசென்னு) முக்குணங்களுண்டாயின அவற்றுள் தாமதகுணப் பிரதானமாக ஆனந்தமயகோசமாகிய காரண சரீரத்துடன் கூடி இருதயஸ்தானமான சுழுத்தியவஸ்தைக் கபிமானியாயிருந்து சுழுத்தி சுகத்தை யனுபவித்திருத்தலால் அவ்வபிமானிக்குப் பிராஞ்ஞனென்றும் பாரமார்த்திக னென்றும் அபரிச்சின்னனென்றும் பெயராயின இதற்குத் திரோதாயிசத்தி ஆனந்தபோகம் மகார அட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையு மடங்கி யிருக்கிறபடியால் இதை யதிஷ்டித்திருந்த ஆத்மாவுக்குப் பரமாத்மாவென்று மொருபெயர் வந்தது இதுவே தொம்பதார்த்தமான சீவசுழுத்தி.

சத்துவகுணப் பிரதானமாகப் பிராணாதிகோசத் திரயங்களாகிய சூட்சும சரீரத்துடன்கூடிக்கண்ட ஸ்தானமான சொப்பனாவஸ்தைக் கபிமானியாயிருந்து சொப்பன பிரபஞ்சங்களிற் கூடியுங் கூடாதிருத்தலால் அவ்வபிமானிக்குத் தைசதெனென்றும் பிரதிபாகனென்றும் சொப்பனகற்பிதனென்றும் பெயராயின இதற்கு இச்சாசத்தி, அயுத்தபோகம் ஏனென்றால் பேதாபேதமின்றி யனுபவிப்பன் உகார அட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையுமடங்கி யிருக்கிறபடியால் இதை யதிஷ்டித்திருந்த ஆத்மாவுக்கு அந்தாரத்மாவென்று மொரு பெயர்வந்தது இதுவேதொம்பதார்த்தமான சீவசொப்பனம்.

இராசதகுணப் பிரதானமாக அன்னமயகோசமாகிய ஸ்தூல சரீரத்துடன் கூடி நேத்திரஸ்தமான ஜாக்கிராவஸ்தைக் கபிமானியாயிருந்து பிரபஞ்சவிவகாரங்களில் முயன்று நிற்பதால் அவ்வபிமானிக்கு விஸ்வனென்றும் விவகாரிகளென்றும்

கிஞ்களுனென்றும் சிதாபாசனென்றும் பெயராயின இதற்குக்கிரியாசத்தி, லோகாபி மானத்தினால் நல்லது பொல்லாதென்றறிந்தனுபவிப்பது பற்றியுக்தபோகம் அகாரவட்சரம் இவ்வட்சரத்தி லித்தனையு மடங்கி யிருக்கிறபடியால் இதைய திஷ்டித்திருந்த ஆத்மாவுக்குச் சீவாத்மாவென்று மொருபெயர்வந்தது இதுவேதொம் பதார்த்தமான சீவசாக்கிரம்.

## தொம்பத - முற்றிற்று.

### வினா.

தாமதகுணப்பிரகிருதியின் காரியமெப்படி யென்னில்,

### விடை.

பிரகிருதியினிடத்தி ஆவரணவிட்சேபமென் றிரண்டு சத்திகளுண்டு அதில் ஆவரணமானது தத்துவஞானிகளையு மீஸ்வரனையுந் தவிர மற்றைச் சீவர்களுக்கெல்லாம் சரீரத்திரயம் சீவன் சாட்சி சைதன்னியம் இதுகளின்பேதந் தெரியவொட்டாமல் மறைத்து நிற்கும் இவ்வாவரணநீங்குவதே முத்தி, தமோகுணப் பிரதானமான விக்ஷேபசத்தியே மகாகா ரணப் பிரபஞ்சமாய் நின்றது விட்சோபசத்தியும் சத்வரஜசுதமசென்னு முக்குணசமமாகி நிற்கும் அவற்றுள் தமசு பிரதானமாகும் போது காரணப்பிரபஞ்சமும் சத்வம் பிரதானமாகும் போது சூட்சுமப்பிரபஞ்சமும் ரஜசுபிரதானமாகும் போது ஸ்தூலப் பிரபஞ்சங்களு முண்டாயின.

### வினா

அதற்குவிவர மெப்படி யென்னில்,

### விடை.

சத்துவகுணமாயையிற் பிரதிபிம்பித்த ஈஸ்வரன் நிருமல சலத்திற் பிரதிபிம்பித்த சூரியன்போல் ஏகராகியும் சர்வஞ்ஞராகியுமிருப்பர் இராசதகுணவ வித்தையிற் பிரதிபிம்பித்த சீவர்கள் அவித்தையு மனேகமாகையால் மலினகடசலத் திற் பிரதிபிம்பித்த அனேகஞ் சூரியர்போல் அனேகராகியுங் கிஞ்சிக்கியராகியு மிருப்பர்கள் அங்஦னமவித்தையரப் பிரதிபிம்பரான சீவர்களிக்குச் சர்வக்கியரான ஈஸ்வரன் கிருபைகூர்ந்து சரீரத்திரயங்கள் கொடுத்து முத்தியடைவிக்கும்படி கருதி தமோகுணமான பிரகிருதியை இரண்டு பங்காக்கி முதல்பங்கில் ஆவரண சத்தியை யும் இரண்டாம் பங்கில் விட்சேபசத்தியையு முண்டாக்கினார் அப்பிரகிருதி யின்றிவே மகாகாரணசரீரம் அதிற் பிரதிபிம்பித்த சீவனே பிராஞ்ஞன் அதினறியாமையே ஆனந்தமயகோசமான காரணசரீரம் இப்படிப்பட்ட வாவரணசத்தியானது சீவ துரியந்திருத்த கூடத்தாரரையும் ஈஸ்வரனையுந் தவிர மற்றச் சீவர்களுக்கெல்லாம் ஸ்தூலசூட்சு மகாரண சரீரபேதங்களையு மவற்றி னபிமானிகளையுஞ் காட்சி சைதன்னியங்களையு மொன்றுக்கொன்று பேதந்தெரியவொட்டாமல் மறைக்கும் அதனால் மறைபட்ட சீவர்களிந்த

விருபத்தொன்பது தத்துவங்களையும் தானென்றபிமானிப்பார்கள் அவ்வபிமானத்தை அகங்காரக்கிரந்தியென்றுஞ் சங்காரபந்தமென்றுஞ் சொல்லுவார்கள்.

### வினா.

ஆனால் முத்திகூடுவ தெப்படியென்னில்,

### விடை.

சற்குரு கடாட்சத்தினாலாவரண நீங்கி இருபத்தொன்பது தத்துவங்களிலு மொன்றுக்கொன்றுள்ள பேதங்களைக் கண்டறிவதே முத்திகூடு முபாயம்.

### வினா.

ஆனால் விட்சேபசத்தியின் காரியமேதென்னில்.

### விடை.

விட்சேபசத்தியும் சத்வரஜசுதமசென்னும் திரிகுணசகிதமா யிருக்கும் அந்தச்சத்தியில் சத்ததன் மாத்திரையானவாகாசமும் ஆகாசத்தில் பரிசதன் மாத்திரையான வாயுவும்வாயுவில் ரூபதன்மாத்தியானதேயுவும் தேரிவில்ரசதன் மாத்திரையான அப்பும் அப்புவில் கந்ததன் மாத்திரையானபிருதிவியும் உண்டாயின இந்தப்பஞ்சதன் மாத்திரைகளுக்கு அபஞ்சீகிருதபஞ்சபூதங்களென் றுஞ்சூட்சும் பூதங்களென்றுஞ் சொல்லப்படும் இந்தச்சூட்சும பூதங்களினின்று சூட்சும சரீரங்களும் ஸ்தூலசரீரங்களு முண்டாயின.

### வினா

எப்படியென்னில்

### விடை

இந்த ஆகாசமுதலான சூட்சுமபூதங்களில் முக்குணமுந் தொடர்ந்து நிற்கும் அதிற்சத்துவாமிசத்தில்பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்துச்சமஷ்டியா யொன்றாகக் கூட்டினது அந்தக்கரணங்களாம்.

### வினா.

அந்தக்கரணத்திலாகாசங்கூடின தற்கடையாளமேதென்னில்.

### விடை.

அந்தக்கரணமுமாகாசம்போல் சகலசத்தத்திற்குமிடங்கொடுத்துத்தரிப்பதே யடையாளம் அப்படி தரிக்கின்ற விருத்திக்கு தேஜசான அறிவென்றுபெயர்,

**வினா.**

வாயுவின்மிசங்கூடின தற்கடையாளமேதென்னில்.

**விடை.**

வாயுவைப்போலலைகின்றதே யடையாளம் இப்படியலைகின்ற விருத்திக்கு மனமென்றுபெயர்.

**வினா.**

தேயுவினமிசங்கூடின தற்கடையாளமேதென்னில்.

**விடை**

தேயுவைப்போல விடங்களை இன்ன தின்னதென்று விளக்கி வைக்கின்றதே யடையாளம் இப்படி விளக்கிவைக்கின்ற விருத்திக்குப்புத்தி யென்றுபெயர்.

**வினா**

அப்புவினமிசங்கூடின தற் கடையாளமேதென்னில்.

**விடை**

அப்புவைப்போல் சகலவிடயங்களிலும் பற்றிநிற்கிறதே யடையாளம் இப்படிப்பற்றிநிற்கும் விருத்திக்குச் சித்தமென்று பெயர்,

**வினா**

பிருதிவியினமிசங் கூடின தற்கடையாளமே தென்னில்.

**விடை**

பிருதிவியைப்போலச் சகலவிஷயங்களிலும் கடினமாயபிமானித்திருப்பதே யடையாளம் இப்படியபி மானித்திருக்கும் விருத்திக்கு அகங்காரமென்றுபெயர் இப்படியே யந்த சூட்சும் பூதங்களின் சத்துவாமிசத்திற் பூதத்திற்கொவ்வொரு மாத்திரையெடுத்து வியஷ்டியாய்த் தனித்தனியே வைத்து ஞானேந்திரியங்களாம்.

**வினா.**

ஞானேந்திரியங்களின் குணமேதென்னில்.

**விடை**

சுரோத்திரமாசத்தி னமிசமாகையால் ஆகாசகுண மானசத்தமாத்திரமறியும் தொக்குவாயுவி னமிசமாகையால் வாயுவின்குணமானபரிசமாத்திரமறியும் சட்சுதேயுவினமிசமாகையால் தேயுவின்குணமானரூபமாத்திரமறியும் சிங்குவை அப்புவினமிசமாகையா லப்புவின் குணமான ரசமாத்திரமறியும் கிராணம் பிருதிவியின் மிசமாகையாற் பிருதிவியின் குணமானகந்த மாத்திரமறியும்

இவ்வைந்திந்திரியங்களு மொன்றோடொன்று கூடாதபடியினால் இதர பூதங்களைக் கிரகித்தரியமாட்டாது அந்தக்கரணத்தில் ஐந்துமாத்திரையுமொன்றாய்க் கூடினது கொண்டு ஐந்திந்திரியத்தினாலும் ஐந்து விடையங்களையு மறிகின்றது இந்தச் சத்துவாமிச்சமஸ்டியினாலுண்டான அந்தக்கரணம் ஐந்துவியஷ்டியினா லுண்டான ஞானேந்திரியம் ஐந்து ஆகபத்துஞ் ஞானசாதன மாகையால் அறிகருவிகளாம் இப்படியே அந்தச்சூட்சுமபூதங்களின் இராசதாமிசத்திற் பூதத்திற் கொவ்வொரு மாத்திரையெடுத்துச் சமஷ்டியாயொன்றாகக்கூட்டினது விராணாதி பஞ்சவாய்வுக் களாம்.

### வினா

பிராணாதிபஞ்சவாய்வுக்களின் குணமேதென்னில்.

### விடை

வியானவாய்வு ஆகாசத்தினமிசையாகையால் ஆகாசம்போற் சர்வசரீரமும் வியாபித்திருக்கும்பிராணவாய்வு வாயுவினமிசமாகையால் வாயுவைப்போலிருதய ஸ்தானத்திலிருந்து நாசிகாபரியந்தமலைந்து நிற்கும் அபானவாய்வு அக்கினியின் மிசமாகையால் அக்கினியைப்போல ஜாடராக்கினியாக ஜொலித்து குரஸ்தானத் தினின்று அன்னபானாதிகளைச் சீரணிப்பிக்கும் சமானவாய்வு அப்புவினமிசமாகையா லப்புவைப்போல் சரீரநடுவான நாபிஸ் தானத்தினின்று அன்னப்பனாதிகளைச் சகலநாடிகளிலு நிரப்பி நிற்கும் உதானவாய்வு பிருதிவியின மிசமாகையால் பிருதிவியைப்போல் கடினமாகக் கண்டத்தினிற்கும்.

### வினா.

இந்தப் பஞ்சவாய்வுகளல்லாமல் வேறு வாய்வுகளுண்டோ வென்னில்.

### விடை

வாந்திபண்ணுகிறது நாகனென்றும் இமைத்துவிழிக்கின்றது கூர்மனென்றும் தும்முகிறது கிரிகரனென்றும் கொட்டாவிகொள்ளுகிறது தேவதத்தனென்றும் வீங்குகிறது தனஞ்செயனென்று மைந்துவாய்வுகளுண்டென்று சிலர் சொல்லுவார்கள் இவ்வைந்தும் பிராணவாயுவின்றொழிலே யன்றி வேறல்ல அந்தச்சூட்சும்பூதங்களினி ராசதாமிசத்தில் பூதத்திற்கொவ்வொருமாத்திரையெடுத்து வியஷ்டியாய்த் தனித்தனியே வைத்தது கன்மேந்திரியங்களாம்.

### வினா.

கன்மேந்திரியங்களின் குணமேதென்னில்.

### விடை.

வாக்கு ஆகாசத்தினமிசமாகையால் ஆகாசத்தினிடமாய் நின்றுவசனிக்கும், பாணிவாயுவினமிசமாகையால்வாயுவினிடமாய் நின்று ஏற்றலிடுதல்செய்யும் பாதம் அக்கினிமிசமாகையால் அக்கினியினிடமாய்நின்று நடக்கும், உபஸ்தம் அப்புவின

மிசமாகையால் அப்புவினிடமாய்நின்று ஆனந்திக்கும், பாயுருபிருதிவியின மிசமாகையாற்பிகுதிவியினிடமாய்நின்று மலவிசர்க்கம்பண்ணும், இவ்வைந்து மொன்றோடொன்று கூடாதபடியினால் வேறுதொழில் செய்யமாட்டாது வாயுவில் ஐந்து மாத்திரையுமொன்றாய் கூடினது கொண்டு கன்மேந்திரி யமைந்தினாலு மைந்துதொழில் செய்கின்றது இராசத சமஷ்டியிலுண்டான வாய்வுகளைந்தும் இராட்சத வியஷ்டியிலுண்டான கன்மேந்திரிமைந்தும் ஆகபத்தும் ஞானசாதன மாகையால் தொழில்கருவிகளாம் இவ்விருபது தத்துவங்களே சூட்சுமசரீரம் இதைமாயப் பிரதிபிம்பரான ஈஸ்வான் அவித்தையாப்பிரதி பிம்பரானசீவர்களுக்குச் சிருஷ்டிக்கொவ்வொரு சூட்சும சரீரங் கொடுத்துவருவர் இப்படி சூட்சுமசரீரம் பெற்றுக் கொள்ளாத சீவர்களுக்கு மறுசிருஷ்டியிற் கொடுத்தருளுவார் இந்தச் சூட்சம சரீரவபிமான சீவனுக்குத்தைசதெனென்றுபேர் இப்படியே பஞ்சபூதங்களின் சத்துவாமிசமும் இராசதாமிசமுங் கழிந்து தாமமிசமாத்திர மிஞ்சிநின்றது இதுவே சூட்சும சரீரவுற்பத்தி.

## வினா.

ஸ்தூலசரீரவுற்பத்தியாவதேதென்னில்.

## விடை.

மிஞ்சிகின்றதா மதாமிசத்திலுள்ள ஐந்துபூதத்தையுமொன்றி ரண்டாய்ப்பகுத்து முதற் பாதியைந்தையுமொன்று நான்காக்கி இரண்டாம் பாதியைந் தான தன்னமிசத்துடன் கூட்டாமல் மற்ற நான்கு பூதத்துடனும் பூதத்திற் கரைக்காலரைக்கால் மாத்திரையாகக் கொடுப்பதே பஞ்சீகரணம்.

## வினா.

இப்படி பஞ்சீகரணப் படுத்தியதற்குப் பிரயோசனமேதென்னில்.

## விடை.

பஞ்சீகரித்தஸ்தூலபூதங்களில் ஆகாசத்திற்பரிசரூபரச சந்தங்களாகிய நாற்குணமும் வியாப்பிய மாகையால் அதிரிசயமாய்ப் போகநிச குணமாசத்தம் திரிசயமாகும் வாயுவில் ரூபரசகந்தங்களாகிய முக்குணமும் வியாப்பியமாகையால் அதிரிசயமாய்ப்போக காரணகுணமானசத்தமும் நிசகுணமானபரிசமும் திரிசயமாகும் தேயுவில் ரசகந்தங்களாகிய இருகுணமும் வியாப்பியமாகையால் அதிரிசயமாய்ப் போககாரணகுணமான சத்தபரிசங்களும் நிச குணமான ரூபமும் திரிசயமாகும் அப்புவில் கந்தகுணம்வியாப்பிய மாகையால் அதிரிசயமாய்ப் போககாரண குணமான சத்தபரிசரூபங்களும் நிசகுணமான ரசமும் திரிசயமாகும் பிருதிவியில் சத்த பரிசரூபரசகந்தங்களும் நிசகுணமாகையால் திரிசயமாகும் இது வே ஸ்தூலபஞ்சபூதங்களாம்.

**வினா.**

இந்தஸ்தூலபூதங்களிலுண்டாகிய தென்னையெனில்,

**விடை.**

ஆறு தத்துவமாய் நால்வகையோனியாய் எழுவகை பிறவிகளாயுள்ள ஸ்தூலசரீரங்களுண்டாயின.

**வினா**

ஆறு தத்துவமேதென்னில்,

**விடை.**

சர்மம் உதிரம் மாமிசம் சனாயு அஸ்தி மச்சை, இவைகளாம்,

**வினா**

நால்வகையோனியாவதேதென்னில்.

**விடை**

அண்டசம் உற்பீசம் சுவே தசம் சராயுசம், இவைகளாம்

**வினா**

எழுவகைப்பிறவிகளாவதே தென்னில்.

**விடை**

தேவர், மக்கள், புள், விலங்கு, நிலத்திலூர்வன, ஜலத்திலூர்வன, ஸ்தாவரம், இவை எண்பத்துநான்குலட்ச பேதங்களாயிருக்கும் ஈஸ்வரன் சீவர்களுக்கிந்த ஸ்தூலசரீரத்தையுண்டுபண்ணினா இந்த வியஷ்டிஸ்தூலசரீரத்தை யபிமானித்த சீவனுக்கு விசுவனென்றும் சமஷ்டி ஸ்தூலவிராட்டை யபிமானித்த ஈஸ்வரனுக்கு பிரமெனென்றும் பெயர் வியஷ்டிசூட்சும சரீரத்தையபிமானித்த சீவனுக்கு தைசதெனென்றும் சமஷ்டிசூட்சும விரணியகர்ப்பசரீரத்தையபிமானித்த ஈஸவரனுக்கு விஷ்ணுவென்றும் பெயர் வியஷ்டிகாரணசரீரத்தை யபிமானித்த சீவனுக்கும் பிராஞ்ஞ ஈஸ்வரனுக்கு ருத்திரனென்றும் பெயர் இதுகளே சீவேசுர சரீரத்திரயங்க ளுண்டாயின மார்க்கமென்று சொல்லப்படும் இனி விசாரஞானத் தினால் சரீரத்திரயங்களையும் லயப்படுத்தி சாட்சியாகிய தன்னையுள்ளபடி யறிய வேண்டியது

**வினா**

சற்குருசாஸ்திரமுன்னிலையில் சீவாதிசரீரத்திரயங்களை விசாரிக்கிற புருஷனாதென்னில்.

### விடை

இந்த விசுவதைசத பிராஞ்ஞனென்று மிவர்களால் விசாரிப்பதென்றால் அந்தந்த அவஸ்தைகளுடன் அந்தந்த அபிமானிகளுமழிந்துபோவதா லவர்களால் விசாரிக்கப்படுகிற ஞானத்திற்கு நித்தியம்வரும் ஆதலால் சீவதுரியத்திருக்கின்ற கூடஸ்தரேவிசாரிக்கிறபுருஷன்,

### வினா

அவ்விசாரணையின் வகையெப்படியென்னில்.

### விடை

சீவனுக்கு வாச்சியலட்சியார்த்தமான அசுத்தசுத்தங்களையும் ஈஸ்வரனுக்கு வாச்சியலட்சியார்த்தமான அசுத்தசுத்தங்களையும் பகுத்தறியவேண்டியது.

### வினா.

சீவனுக்குவாச்சியார்த்தமானவசுத்தமேதென்னில்.

### விடை.

தூலசரீரத்தில் ஞானேந்திரியபஞ்சகம் ஒன்று கன்மேந்திரிய பஞ்சகம் ஒன்று இவற்றைப்பகுத்தறிகிற அந்தக்கரணங்கள் நாலு இவைக்கெல்லாஞ் சேர்க்கை கொடுப்பதான பிராணாதிபஞ்சகம் ஒன்று இவ்வேழுமேகாரியவுபாதி இவ்வேழு பாதிகளையுந் தானென்று சீவனபிமானித்ததே தொம்பதவசுத்தம்,

### வினா.

சீவனுக்கு லட்சியார்த்தமான சுத்தமேதென்னில்.

### விடை.

இவ்வேழுபாதியுந்தானல்லவென்று கழித்து அவைகளுக்குச் சாட்சியா யிருப்பதே தொம்பதசுத்தம்,

### வினா.

ஈஸ்வரனுக்குவாச்சியார்த்தமான வசுத்தமேதென்னில்.

### விடை.

சர்வஞ்ஞன் சர்வகாரணன் சர்வேந்திரியாமிசர்வேசுரன் சர்வசிருஷ்டி சர்வ ஸ்திதிசர்வசங்காரன் என்னுமிவ்வேழுங்காரணவு பாதி இவ்வேழுபாதிகளை யுந்தானென்று ஈஸ்வரனபிமானித்ததே தற்பதவசுத்தம்.

**வினா.**

சர்வஞ்ஞனென்பதேதென்னில்

**விடை.**

சகலபிரபஞ்சங்களிலும் வியாபகமான செயல்களெல்லாம் அறிந்து நிற்பது.

**வினா.**

சர்வகாரணனென்பதேதென்னில்.

**விடை.**

சர்வசகங்களு மழிந்தவிடத்துந் தானழிவற்று சித்தியனா யிருப்பது.

**வினா.**

சர்வேந்திரியாமியென்பதேதென்னில்.

**விடை**

சர்வஜக விசாலமாகிய தேகேந்திரியா திகளுக்கு முள்ளீடாய் நிறைந்து னிற்பது.

**வினா**

சர்வேசுரனென்பதேதென்னில்.

**விடை**

சகலபிரசஞ்சங்களுக்குங் கார்த்தவாய்விளங்கினிற்பது.

**வினா**

சர்வசிருஷ்டியென்பதேதென்னில்

**விடை.**

சர்வசராசரப் பிரபஞ்சங்களையுஞ் சிருஷ்டித்துநிற்பது.

**வினா.**

சர்வஸ்திதியென்பதேதென்னில்.

**விடை.**

சர்வஜகங்களையும்பரிபாலனம் பண்ணினிற்பது

**வினா.**

சர்வசங்காரனென்பதேதென்னில்.

**விடை**

சர்வசகவிலாசங்களையுந்தனக்குள்ளோடுக்கினிற்பது.

**வினா**

ஈஸ்வரனுச்குலட்சியார்த்த மான்சுத்தமேதென்னில்.

**விடை.**

இவ்வேழுபாதியுந் தானல்லவென்று கழித்து அவைகளுக்குச் சாட்சி சைதன்னியமாயிருப்பதே தற்பதசுத்தம்.

**வினா**

தீர்ந்தனிலையாவதேதென்னில்.

**விடை.**

தொம்பதசுத்தமான சீவ துரியமும் தற்பதசுத்தமானபர துரியமுமை யிக்கியமான சிவதுரியத்தையறிந்து னிற்பதே தீர்ந்தனிலை - மேலும் தற்பததொம் பதவசுத்தத்தை முக்கியப் பொருளென்றும் தம்பததொம்பதசுத்தத்தை இலக்கியம் பொருளென்றுஞ் சிலநூல்களிற்சொல்லப்படும்.

**வினா.**

இதற்குலட்சணாவாக்கியமெப்படியென்னில்.

**விடை.**

விட்டலட்சணைக்குச் சங்கர்க்கவாக்கியமென்றும் விடாதவட்சணைக்கு விசிஸ்ட வாக்கியமென்றும் விட்டுவிடாத லட்சணைக்கு அகண்டவாக்கியமென்றும் வாக்கியத்திரயங்களுண்டு இவ்வாக்கியார்த்தப்படி சிந்தித்து அதினாலுண்டாகும் மனுபவத்தைச் சொல்லுவாயாக வென்றனுக்கிரகஞ்செய்து ஆசிரியர் மவுனானந்த மாயிருந்தவளவில் சீஷன் அகமுகப்பட்டு சொரூபசமாதிகூடி அபரேக்ஷ ஆத்மானந்த வனுபூதியைப் பெற்று அடங்காமகிழ்ச்சியுடன் எழுந்துனின்று அவ்வாசிறியருக்குப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து அஞ்சலியஸ் தனாய்னிற்க அவ்வாசிறியரும் தமது பரிபூரண திருஷ்டியினால் நற்சீடனைப்பார்த்து, ஆதரணைபண்ணி அவனை யருகி லழைத்து சுவானுபவம் வினாவுகின்றனர் அஃதெவ்வாறெனில்.

**வினா.**

அப்பா உனது சுவானுபவமென்னதென்னில்.

**விடை.**

சுவாமீ சீவோபாதியான காரியவுபாதி யேழுடன்கூடி னின்ற ஸ்தூலதேகத்தை யபிமானித்தவன் விசுவனென்றும் இதுவேசீ வசாக்கிரமென்றுங் கண்டேன் இந்தவேழுபாதியி லிதுவரையுந்திரியமான விரண்டுபாதிநீங்கிகரணம்நாலும் பிராணாதியொன்றுமான ஐந்துபாதி யோடுகூடின சூட்சிமதேத்தை யபிமானித்தவன் தைசதெனென்றும் இதுவே சீவசொப்பன மென்றுங் கண்டேன் - இவ்வைந்துபாதியில் கரணம் நாலுநீங்கி பிராணாதியாகிய ஒருபாதியுடனின்ற காரண சரீரத்தை யபிமானித்தவன் பிராஞ்ஞனென்றும் இதுவேசீவசுழுத்தி யென்றுங்கண்டேன் - இவ்வேழு பாதிகளு மிறந்து சீவசாட்சி மாத்திரமாய்ச் சேடித்துனின்ற சீவதுரியமுங் கண்டேன் - துரியமாகிய போதமுமிறந்து விஸ்வரூபமான சர்வ சாட்சியா யிருக்கும் பரசாக்கிரமுங் கண்டேன் - சங்கிலித் தொடர்பாகி சசல பிரபஞ்சங்களையும் வேறாகக்கண்ட வறிவுமாத்திரமே தானாயிருக்கும் பரசொப்பனமுங் கண்டேன் காண்பானுங்காட்சியும் விடுபட்டு சர்வமுதோன்றாமலிருக்கும் பரசுழுத்தியுங் கண்டேன் அந்தச்சுழுத்தியை பறித்த வறிவாகிய பரதுரியமுங்கண்டேன் கூடஸ்தரும் பிரமமு மொன் றென் றுணர்ந்த சீவசாக்கிரமுங் கண்டேன் அனாதியாய் சகல செகத்துந் தானா யிருத்ததும் இருந்தோ மென்னும் வாசனையும் விடுபட்டிருந்த சாட்சியேதானென் றுணர்ந் தசிவசொப்பனமுங்கண்டேன் காணப்பட்டஜெகமெல்லா மறிவிரூபமென்றறிந்து அவ்வறிவும் விடுபட்டு மனோலய மாகுமிடமாகிய சிவகழுத்தியுங்கண்டேன் இந்தச்சுழுத்தியையறிந்தவறிவாகிய சர்வ சாட்சியே தானாகக்கண்டனுபவிக்கும் சிவ துரியமுங் கண்டேன் இந்தற் துரியமே சச்சிதானந்தமும் விடுபட்டபரையாகிய மகாகாரணசரீரமென்றும் இந்தத் துரியமு மிறந்தவிடம் அதீதமாகியசுத்தப் பிரமமென்றுங் கண்டேன் என்று விண்ணப்பஞ் செய்தசீஷனை அவ்வாசிரியர் ஆதரணை பண்ணி அப்பரசகலவேதவுபநிடதார்த் தங்களிற்கூறப்படும் பொருளும் நம்முடையவனுபவமு மிதுவேயாதலால் இதிற் சந்தேக விபரீதம்வராமல் தேகபதனபரியந்தமும் அனுசந்தானம்பண்ணி முடிவில் விதேக கைவல்யத்தைப் பெறுவாயாக வென்றருளினார்.

**உற்பத்திப்பிரகரண - முற்றிற்று.**

# திதிப் பிரகரணம்.

## அவதாரிகை.

முற்பிரகரணங்கள் மூன்றினாலும் சமாதியில் அபரோட்சவாத்மானந்த வனுபவம் பெற்று தேகாதிப் பிரபஞ்சங்க ளனைத்துஞ் சொப்பனத்திற்கண்ட பொருள் போலாகிச் சுவானுபூதிமாத்திரமாய் விளங்குஞ் சீஷனுக்குமேல் சகல விவகாரங்களுஞ் சுழுத்தி போலாகிச் சத்தாமாத்திரமான பிரமானந்தானுபவ சாட்சாத்காரமுதயமாகும் பொருட்டுத் திதிப்பிரகணங் கூறுகின்றார்.

## கவி,

நிகழுஞ்சாத் திகமாய் நின்றே யிராசத்த மத்தை நீக்கித்
திகழுஞ்சாத்திகத்தாற்செய்யு மிகத்தொழில் செய்திட்டாலும்
புகழுமாசு சுணந்தான் சட்டை போக்கல்போலாசாபாசத்
துகளறநழுவிமேலாங் குணங்களைத் தொடர்ந்துநிற்பார். (1)

தொடர்வறாச்சாமாதிதன்னைத் தொடர்பவரிருவராகும்
படர்வுறு நாமரூப பவபந்தத்துறவை விட்டுத்
திடமுறச் சதா சமாதி செய்பவனொருவனந்த
மடமையோடிருந்து முள்ளின் மதித்திடாச்சமாதிசெய்வான்.

(இதன் பொருள்.)

## வினா.

சொரூபசமாதியினின்று சச்சிதானந்த சுவானுபூதி மாத்திரமாக வெளிப்பட்ட சீவன் முத்தர்கள் திரும்பவும் விவகாரம் பண்ணுவார்களோ வென்னில்,

## விடை.

பண்ணுவார்கள் அதனாலானியில்லை

## வினா.

எப்படி யென்னில்,

## விடை.

சீவன்முத்தர்கள் புனர் சென்மத்துக்கே துவாயிருக்கின்ற ரசோதமகுணங்களை விடுத்து முத்திக்கேதுவாகிய சத்துவகுணமாத்திரமாயிருந்து வர்த்தமான காலத்தில் நேரிடுமனேகந் தொழில்களைச் செய்தாலும் அதனால் வரும் விசாரங்களொன்று மவர்களை தகிக்க மாட்டாது.

**வினா.**

அதெப்படி யென்னில்..

**விடை.**

சூரியஸ்தமானமாகி அந்தகாரமான ராத்திரி வந்தபோதிலும் பொற்றாமரை யானது சற்றாகிலும் வாய்குவியாது மற்றைத் தாமரைகளெல்லாம் வாய் குவிந்துவிடும் அதுபோல அறிஞர்களும் மாயாகாரியமான நாமரூபப் பிரபஞ்ச விவகாரங்களிற் கூடியுங் கூடாது சுகதுக்க விலட்சணராகி எந்தவிடத்திலும் அகண்ட வியாபக சின்மாத்திரமாய் நிறைந்து இதமகிதங்களில் சமதிருஷ்டி யுடையவர்களா யிருப்பார்கள் அவர்களையே நல்வழி நடப்பவர்களென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்,

**வினா.**

ஆனாலவர்களொருவரோடுங் கூடாரோவென்னில்,

**விடை.**

சாந்தி, விசாரம், சந்தோஷம், சாதுசங்கமென்னுஞ் சற்புருஷர்களுடனே கூடி அவற்றினையே யாபரணமாகக் கொண்டிருப்பார்கள்.

**வினா.**

அவர்கள் தமக்குக் கிடையாத போகங்களி லிச்சை கொள்ளாரோவென்னில்,

**விடை.**

சமுத்திரமானது தனக்குள்ள கரையைக் கடவாமலுமே லொன்றை நாடாமலுமிருப்பது போலச் சீவன்முத்தர்களுந் தனக்குள்ள போகத்தைப் பொசிப்பதன்றி வேறுபோகங்களை யிச்சித்துநாடமாட்டார்கள்,

**வினா.**

ஆதித்தன் போல இச்சாயெத்தினமின்றி நிகழ்காலத்துவரும் தொழில்களைப் பற்றியும் பற்றாத மனத்தோடிருந்து நடத்திவருங்காலத்து அந்தச் சீவன்முத்தர் களிருக்குக் தன்மையேதென்னில்,

**விடை.**

விடப்படாமை விடப்படல்விசாரம் தெளிவுவருந்தல் திருந்தல் திருத்தங்கூடு தல் யோசித்தல் தீர்த்தல் பார்த்தல் நிச்சயிக்க லாகிய தன்மைகளுடனே யிருப்பார்கள்.

**வினா.**

விடப்படாமை யேதென்னில்,

**விடை.**

துயரமற்ற சுகநிலையிலிருக்கிற பெரியோர்களுடைய சற்சங்கம்.

**வினா.**

விடப்பம லேதென்னில்,

**விடை.**

ரஜோதமோ குணங்களைப் பொருந்திய துஷ்டர்களுடைய துச்சங்கம்.

**வினா,** விசாரமேதென்னில்,
**விடை,** யானாருலக மாரென்றுபகுத்தறிவது,
**வினா,** தெளிவாவதேதென்னில்,,
**விடை,** குருசாஸ்திரங்களினாலும் அறிவினாலுந் தீர்ந்தநிலை,
**வினா,** வருந்தலாவதேதென்னில்,
**விடை,** தன்னையறியும்வழியில் வருந்துவது,
**வினா,** திருந்தலாவதேதென்னில்,
**விடை,** சகலகன்மங்களிலும்யானெனதென்றழுந்தா மற்செய்வது,
**வினா,** திருத்தங்கூடுதலேதென்னில்,
விடை, தல்லோர்களாகிய மெய்ஞ்ஞானவான்களோடு கூடுவது,
**வினா,** யோசித்தலேதென்னில்,
**விடை,** சர்வமுந்தானெனக்கருதுனது,
**வினா,** தீர்த்தலேதென்னில்,
**விடை,** சரீரத்தில்வருஞ் சோபதாபங்கள்,
**வினா,** பார்த்தலேதென்னில்,

**விடை.**

சர்வசராசரப் பிரபஞ்சங்களிலு முள்ளீடாய்நிறைந்து வியாபகப்பட்டிருக்குந் தனது சொரூபத்தையேகண்டு நிற்பது,

**வினா.**

நிச்சயித்தலே தென்னில்,

**விடை.**

பிரமாதிஸ்தம்ப பரியந்தமு நிறைந்துள்ளது சித்தென்றும் அதுகளெல்லாந்தான் வியாபகமேயென்றும் நிச்சயிப்பது இப்படிப்பட்ட தன்மைகளோடு சீவன்முத்தர்களிருப்பார்கள்.

**வினா.**

சத்துவப்பிறவி எதினால் வருமென்னில்,

**விடை.**

முற்பிறவிகளிற் செய்த தபோபல முயற்சியினால்வந்து பொருந்துமேயன்றி வேறொருகருமத்தினாலும் வரமாட்டாது ஆகையால் சத்துவகுணமே மோக்ஷத்தைக் கொடுக்கும் மற்றயிரண்டு குணமு மாயாகாரியமான சனன மரண சங்கார துக்கத்தைக் கொடுக்கும்.

**வினா.**

இந்தச்சத்துவ குணத்தை எவர்களடைந்திருப்பார்க ளென்னில்,

**விடை,**

இனிப்பிறவாத முடிந்த பிறப்பையுடையவர்க ளடைந்திருப்பார்கள்,

**வினா.**

ரசோதமகுணங்களை எவர்கள் கொண்டிருப்பார்க ளென்னில்,

**விடை.**

மண்டபத்தைத் தூண்கள் தாங்குவதுபோல் சகல சீவர்களும் அவ்விருகுண மயப்பட்டுத்தாங்கி நிற்பார்கள் ஆகையால் சத்துவத்தைக் கைப்பற்றி ராசத தாமங்களைக் கைவிட்டவர்கள் சனனமரணப் பிரவகத்தினின்று கரையேறினவர்கள்.

**வினா.**

எப்படி கைவிடுவார்க ளென்னில்,

**விடை.**

சத்துவத்தைப் பூண்டுகொண்டு ராசததாம் தங்களையு மன்னால்வரும் பாயபந்தங்களையும் பாம்பானது தோலுரித்தது போல நழுகவிடுவார்கள்.

**வினா.**

அதெப்படியென்னில்,

### விடை.

சர்வமுந் தானாய் விளங்குகிறபடியால் தான் வேறு உலகம் வேறென்னுந் துவிதமயக்கமொழிந்து பிரமமாகிய சித்தினிடத்துண்டான நாமரூப கற்பனைக ளெல்லாம் சமுத்திரசலமே அலையாதிகளாகக் காணப்படுதல் போல் மித்தையே யல்லாமற் சத்தியமல்ல சோகமோகங்களும் பிறப்பிறப்புகளும் பிறப்பிறப்பிற் றபிக்கிறவர்களுமில்லை வந்ததும் போனதும் நினைத்ததுமாகிய வொன்றுமில்லை ஏகமாகியு மனேகமாகியும் என்றைக்குமுள்ள பொருளே எந்தவிடத்திலும் சர்வவியாபகமாய் வியாபித்துச் சத்தாமாத்திரமாய் விளங்குவதென்று சஞ்சலரகிதமான யூகபுத்தினா லறிந்து சகல துக்கங்களும் விடுபட்டு சத்துவ மாத்திரமாய் மிஞ்சியிருப்பார்கள்.

### வினா.

இன்னு மெப்படி யிருப்பார்களென்னில்,

### விடை.

சொரூப வியாபகத்தில் நின்று பூரணச்சந்திரப் பிரகாசம் போற் சாந்தியடைந்து மவுனானந்தமாய் மணிப் பிரபைபோற் றெளிந்து னிருமலமாய் நிகழ்காலத்துவரும் விவகாரங்களைச் சமதிருஷ்டியாய்க் கண்டு பற்றியும் பற்று தலின்றிச்செய்து இதுநமக்கு ஆமென்னும் விருப்பும் ஆகாதென்னும் வெறுப்புமற்று உதாசீன மாத்திரமா யிருப்பார்கள்,

### வினா.

சத்துவகுணத்தின் மாத்திரம் ஞானமெளிதிலுண்டா மென்பதெப்படியென்னில்,

### விடை.

உத்தமமானமூங்கிலில் விழுந்தபனிச்சுடரானது முத்துகளானது போலச் சத்துவகுணத்திற் சென்மித்தவர்களே மேலோர் நல்லோர் மித்திரர் தெளிந்தோர் அநித்தியங்களைத் துறந்த நித்தியமுத்தர் ஞானிகளென்னும் விசிஷ்டநாமங்களைப் பெறுவார்கள் அவர்களுக்கே ஞானமுமெளிதில் வரும்.

### வினா.

அவர்கள் பற்றியும் பற்றாது தொழில்செய்வ தெப்படியென்னில்,

### விடை.

சூரியன் இச்சையின்றிக் கிரணங்களாற் பிரகாசித்திருக்க அந்தச்சன்னிதான பலத்தினால் கணம், நாழிகை, சாமம், நாள், நட்சத்திரம், வாரம், பட்சம், மாசம், ருது, அயனம், வருஷமுதலான துகளும் தோன்றுவது போல் சீவன் முத்தர்களும் செல்காலம் வருகாலங்களிலுள்ள பொருள்களைச் சிந்தியாமல் நிகழ்காலத்து வருங் கருமமாத்திரம் தமது சுவானுபூதியாகக்கண்டு விவகரிப்பார்கள்,

**வினா.**

இப்படி விசாரஞானபலத்தினால் துவிதபுத்தி நீங்கி அத்துவிதானந்த சொரூபமாத்திரமான ஞானிகளைக் காமாதிகள் தொடர்ந்து வருத்தாதோவென்னில்,

**விடை.**

இருப்புச்சட்டைதரித்த புருஷனை ஆயுதங்கள் வருத்தாது போல் சின்மாத்திரமாய் விளங்கும் ஞானியையும் காமாதிகள் தொடர்ந்து வருத்தா தென்பதே துணிவு,

**வினா.**

மோகமாகியவற்ச நாபிக்கொடி முளைப்பதற்கு மூலமாகியும் சோகமாகிய சர்ப்பமிருந் தரசாளுமிடமாகியு முள்ளதேகத்தை நானென்னுஞ் சத்திய புத்தி பண்ணுவிக்கு மஞ்சானமூலமானது ஏகமாகியும் நித்தியமாகியுமிருக்கிற சொரூப சுபாவந்தோன்றின மாத்திரத்தில் வேரோடே நாசமாமென்று கூறிய சுருதி யுத்திப் பிரமாணங்களிருக்கச் சீவன் முத்தர்கள் நான்போனேன் வந்தேன் தூங்கினேன் விழித்தேனென்று சொல்லலாமோவெனில்,

**விடை.**

அவர்களப்படி சொன்னாலும் கமல பத்திரோதகம்போற் பற்றற்றே யிருப்பார்கள் அவர்கள் சித்தஞ்சென்ற விடமெல்லாஞ் சீதானந்தமாய் ரமித்திருக்கும் அதனால் வாதையில்லை அப்படியின்றி நாமரூபங்களிற் சித்தமானது பறந்துபோய் விழுமானால் மனமுங்கெடாது பந்தமும் போகாது ஆதலால் காணும் பொருளே யில்லை யென்று சர்வமுஞ் சித்தாய்க்கண்டால் மனமென்பது போய்விடும் அதுவே மோட்சமாகும்,

**வினா.**

ஆனால் பிரபஞ்ச விவகாரத்தை ஞானிகளெப்படி கண்டிருப்பார்களென்னில்,

**விடை.**

நானுமில்லை ஈதென்னும் விடயமுமில்லை யென்றும் உருவமில்லாத வெளிபோல் தான் பரிபூரண சொரூபமென்றும் தனது சொரூப வியாபகத்தில் காணப்பட்ட நாமரூபங்கள் விளங்குகிற தென்றும் தனது சச்சிதானந்த சொரூபத்தையன்றி நாமரூபத்திற் காதாரமில்லையென்றும் சச்சிதானந்தமூன்றும் சொரூப சம்மந்தம் நாமரூபமிரண்டு மாயாசம் பந்தமென்றுங்கண்டு மாயா சம்பந்தத்தை விட்டுச் சர்வமும் சத்தாமாத்திரமான சொரூபமேயென்று திடமாய்ப் பார்த்திருப்பார்கள் அங்ஙனமான பெரியோர்கள் ஆசையாகிய கட்டெல்லாம் அசங்கற்பமாகியவாளாலறுத்து நானென்னுந்தேகபாவனையை நானென்னாக ஈட்டியினாற் குத்தி எல்லா மிறந்த சொரூபசுவாபமே தானென்று பாவித்த பாவனையினால் செனன மரணமில்லாத முத்திசொரூபமாவார்கள்,

**வினா.**

இந்வச் சீவன் முத்தர்களுக்கு ஏகதேசமாய் இன்பமான சுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் அந்தச் சுகத்தில் ரமித்துங் துக்கத்தில் வருந்தியுமிரார்களோ வென்னில்,

**விடை.**

அப்படியிரார்கள் சுகம், பயம், கோபம், துக்கம், பொறாமை முதலிய விவைகள் வந்தவிடத்து மிதுகளை ஒருபொருளாய்க் காணாது சத்தா மாத்திரமாய்க்கண்டு சுழுத்திபோல் விஸ்ரரந்தியடைந்து சொரூபபாவனை நீங்காதிருப்பார்கள் இதுவே சிவசாக்கிரம் இந்தச்சாக்கிரத்தினின்று ஒரு நிமிஷமாகிலும் பிரியாதவர்களே சீவன்முத்தர்கள்,

**வினா.**

சகலவாதனைகளுஞ் சுழுத்திபோலாகி விஸ்ராந்தியாய்த் தெளிந்தபூரண திருஷ்டியிமைக்கால் சீவன்முத்தியடைந்த பெரியோர்கள் திரும்பவும் இந்தவுலகத்தில் வசிப்பார்களோவென்னில்,

**விடை,** சகலகன்மங்களிலும்யானெனதென் றழுந்தா மற்செய்வது,
**வினா,** திருத்தங்கூடு தலே தென்னில்,
**விடை,** தல்லோர்களாகிய மெய்ஞ்ஞானவான்களோடு கூடுவது,
**வினா,** யோசித்தலேதென்னில்,
**விடை**, சர்வமுந்தானெனக்கருதுனது,
**வினா,** தீர்த்தலேதென்னில்,
**விடை,** சரீரத்தில்வருஞ் சோபதாபங்கள்,
**வினா,** பார்த்தலேதென்னில்,

**விடை.**

சர்வசராசரப் பிரபஞ்சங்களிலு முள்ளீடாய்நிறைந்து வியாபகப்பட்டிருக்குந் தனது சொரூபத்தையேகண்டு நிற்பது,

**வினா.**

நிச்சயித்தலே தென்னில்,

**விடை.**

பிரமாதிஸ்தம்ப பரியந்தமு நிறைந்துள்ளது சித்தென்றும் அதுகளெல்லாந் தான் வியாபகமேயென்றும் நிச்சயிப்பது இப்படிப்பட்ட தன்மைகளோடு சீவன்முத்தர் களிருப்பார்கள்.

**வினா.**

சத்துவப்பிறவி எதினால் வருமென்னில்,

**விடை.,**

முற்பிறவிகளில் செய்த தபோபல முயற்சியினால்வந்து பொருந்துமேயன்றி வேறொருகருமத்தினாலும் வரமாட்டாது ஆகையால் சத்துவகுணமே மோக்ஷத்தைக் கொடுக்கும் மற்றயிரண்டு குணமு மாயாகாரியமான சனனமரண சங்கார துக்கத்தைக் கொடுக்கும்.

**வினா.**

இந்தச்சத்துவ குணத்தை எவர்களடைந்திருப்பார்க ளென்னில்,

**விடை,**

இனிப்பிறவாத முடிந்த பிறப்பையுடையவர்களடை ந்திருப்பார்கள்,

**வினா.**

ரசோதமகுணங்களை எவர்கள் கொண்டிருப்பார்க ளென்னில்,

**விடை.**

மண்டபத்தைத் தூண்கள் தாங்குவதுபோல் சகல சீவர்களும் அவ்விருகுண மயப்பட்டுத் தாங்கி நிற்பார்கள் ஆகையால் சத்துவத்தைக் கைப்பற்றி ராசத தாமங்களைக் கைவிட்டவர்கள் சனனமரணப் பிரவகத்தினின்று கரையேறினவர்கள்.

**வினா.**

எப்படி கைவிடுவார்க ளென்னில்,

**விடை.**

சத்துவத்தைப் பூண்டுகொண்டு ராசததாம் தங்களையுமன்னால்வரும் பாயபந்தங்களையும் பாம்பானது தோலுரித்தது போல நழுகவிடுவார்கள்.

**வினா.**

அதெப்படியென்னில்,

**விடை.**

சர்வமுந் தானாய் விளங்குகிறபடியால் தான் வேறு உலகம் வேறென்னுந் துவிதமயக்கமொழிந்து பிரமமாகிய சித்தினிடத் துண்டான நாமரூப கற்பனைக ளெல்லாம் சமுத்திரசலமே அலையாதிகளாகக் காணப்படுதல் போல் மித்தையே யல்லாமற் சத்தியமல்ல சோகமோகங்களும் பிறப்பிறப்புகளும் பிறப்பிறப்பிற் றபிக்கிறவர்களுமில்லை வந்ததும் போனதும் நினைத்ததுமாகிய வொன்றுமில்லை

ஏகமாகியு மனேகமாகியும் என்றைக்குமுள்ள பொருளே எந்தவிடத்திலும் சர்வ வியாபகமாய் வியாபித்துச் சத்தாமாத்திரமாய் விளங்குவதென்று சஞ்சலாகிதமான யூக புத்தினா லறிந்து சகல துக்கங்களும் விடுபட்டு சத்துவமாத்திரமாய் மிஞ்சி யிருப்பார்கள்.

### வினா.

இன்னு மெப்படி யிருப்பார்களென்னில்,

### விடை.

சொரூப வியாபகத்தில் நின்று பூரணச்சந்திரப் பிரகாசம் போற் சாந்தியடைந்து மவுனானந்தமாய் மணிப் பிரபைபோற் றெளிந்து னிருமலமாய் நிகழ்காலத்துவரும் விவகாரங்களைச் சம திருஷ்டியாய்க் கண்டு பற்றியும் பற்று தலின்றிச்செய்து இது நமக்கு ஆமென்னும் விருப்பும் ஆகாதென்னும் வெறுப்புமற்று உதாசீன மாத்திரமா யிருப்பார்கள்,

### வினா.

சத்துவகுணத்தின் மாத்திரம் ஞானமெளிதிலுண்டா மென்பதெப்படியென்னில்,

### விடை.

உத்தமமானமூங்கிலில் விழுந்தபனிச்சுடரானது முத்துகளானது போலச் சத்துவகுணத்திற் சென்மித்தவர்களே மேலோர் நல்லோர் மித்திரர் தெளிந்தோர் அநித்தியங்களைத் துறந்த நித்தியமுத்தர் ஞானிகளென்னும் விசிஷ்டநாமங்களைப் பெறுவார்கள் அவர்களுக்கே ஞானமுமெளிதில் வரும்.

### வினா.

அவர்கள் பற்றியும் பற்றாது தொழில் செய்வ தெப்படியென்னில்,

### விடை.

சூரியன் இச்சையின்றிக் கிரணங்களாற் பிரகாசித்திருக்க அந்தச்சன்னிதான பலத்தினால் கணம், நாழிகை, சாமம், நாள், நட்சத்திரம், வாரம், பட்சம், மாசம், ருது, அயனம், வருஷமுதலானதுகளும் தோன்றுவது போல் சீவன் முத்தர்களும் செல்காலம் வருகாலங்களிலுள்ள பொருள்களைச் சிந்தியாமல் நிகழ்காலத்து வருங் கருமமாத்திரம் தமது சுவானுபூதியாகக்கண்டு விவகரிப்பார்கள்,

### வினா.

இப்படி விசாரஞானபலத்தினால் துவிதபுத்தி நீங்கி அத்துவிதானந்த சொரூபமாத்திரமான ஞானிகளைக் காமாதிகள் தொடர்ந்து வருத்தாதோவென்னில்,

### விடை.

இருப்புச்சட்டைதரித்த புருஷனை ஆயுதங்கள் வருத்தாது போல் சின்மாத்திர மாய் விளங்கும் ஞானியையும் காமாதிகள் தொடர்ந்து வருத்தாதென்பதே துணிவு,

### வினா.

மோகமாகியவற்ச நாபிக்கொடி முளைப்பதற்கு மூலமாகியும் சோகமாகிய சர்ப்பமிருந் தரசாளுமிடமாகியு முள்ளதேகத்தை நானென்னுஞ் சத்தியபுத்தி பண்ணுவிக்கு மஞ்சானமூலமானது ஏகமாகியும் நித்தியமாகியுமிருக்கிற சொரூப சுபாவந்தோன்றின மாத்திரத்தில் வேரோடே நாசமாமென்று கூறிய சுருதி யுத்திப் பிரமாணங்களிருக்கச் சீவன்முத்தர்கள் நான்போனேன் வந்தேன் தூங்கினேன் விழித்தேனென்று சொல்லலாமோவெனில்,

### விடை.

அவர்களப்படி சொன்னாலும் கமல பத்திரோதகம் போற் பற்றற்றே யிருப்பார்கள் அவர்கள் சித்தஞ்சென்ற விடமெல்லாஞ் சீதானந்தமாய் ரமித்திருக்கும் அதனால் வாதையில்லை அப்படியின்றி நாமரூபங்களிற் சித்தமானது பறந்துபோய் விழுமானால் மனமுங்கெடாது பந்தமும் போகாது ஆதலால் காணும் பொருளே யில்லை யென்று சர்வமுஞ் சித்தாய்க்கண்டால் மனமென்பதுபோய்விடும் அதுவேமோட்சமாகும்,

### வினா.

ஆனால் பிரபஞ்ச விவகாரத்தை ஞானிகளெப்படி கண்டிருப்பார்களென்னில்,

### விடை.

நானுமில்லை ஈதென்னும் விடயமுமில்லை யென்றும் உருவமில்லாத வெளிபோல் தான் பரிபூரண சொரூபமென்றும் தனது சொரூப வியாபகத்தில் காணப்பட்ட நாமரூபங்கள் விளங்குகிற தென்றும் தனது சச்சிதானந்த சொரூபத்தை யன்றி நாமரூபத்திற் காதாரமில்யென்றும் சச்சிதானந்தமூன்றும் சொரூப சம்மந்தம் நாமரூபமிரண்டு மாயாசம் பந்தமென்றுங்கண்டு மாயாசம்பந்தத்தை விட்டுச் சர்வமும் சத்தா மாத்திரமான சொரூபமேயென்று திடமாய்ப் பார்த்திருப்பார்கள் அங்கனமான பெரியோர்கள் ஆசையாகிய கட்டெல்லாம் அசங்கற்பமாகிய வாளாலறுத்து நானென்னுந்தேகபாவனையை நானென்னாக ஈட்டியினாற்குத்தி எல்லா மிறந்த சொரூபசுவாபமே தானென்று பாவித்த பாவனையினால் செனன மரணமில்லாத முத்திசொரூபமாவார்கள்,

### வினா.

இந்வச் சீவன் முத்தர்களுக்கு ஏகதேசமாய் இன்பமான சுகம்வந்தாலும் துக்கம்வந்தாலும் அந்தச்சுகத்தில் ரமித்துங் துக்கத்தில் வருந்தியுமிரார்களோ வென்னில்,

**விடை.**

அப்படியிரார்கள் சுகம், பயம், கோபம், துக்கம், பொறாமை முதலிய விவைகள் வந்தவிடத்து மிதுகளை ஒருபொருளாய்க் காணாது சத்தா மாத்திரமாய்க்கண்டு சுழுத்திபோல் விஸ்ரரந்தியடைந்து சொரூபபாவனை நீங்காதிருப்பார்கள் இதுவே சிவசாக்கிரம் இந்தச்சாக்கிரத்தினின்று ஒரு நிமிஷமாகிலும் பிரியாதவர்களே சீவன்முத்தர்கள்,

**வினா.**

சகலவாதனைகளுஞ் சுழுத்திபோலாகி விஸ்ராந்தியாய்த் தெளிந்தபூரண திருஷ்டியிமைக்கால் சீவன்முத்தியடைந்த பெரியோர்கள் திரும்பவும் இந்தவுலகத்தில் வசிப்பார்களோவென்னில்,

**விடை.**

மாயா மயமான ஆசாபாசங்களற்றுச் சகலவாசனைகளு நீங்கி அகத்திற் சின்மாத்திரமாகியும் புறத்திற் சகல ஆசாரக்கிரியைகள் செய்துமிருப்பார்கள் அன்றியும் புறத்தொழில்கள் ஆரம்பித்துச் செய்கிறவர்கள் போறகாட்டி அகத்திலொரு தொழிலுஞ் செய்யாதவர்களாய் அகங்காராகிதராய் திடசித்தராயிருப்பார்கள் அல்லாமலும் ஆகாசம்போலருவமாய்ஆ வரண நீங்கிச் சகலநா மரூப அடையாளங் களும் விடுபட்டு வேண்டியவண்ணமுலகத்தின்கண்விளையாடுவார்கள்,

**வினா.**

இப்படிச் சத்துவ குணத்தோடிருந்தஞ் சென்மமில்லை, யென்பதெப்படி யென்னில்,

**விடை**

. வறுத்தவிதையானது தீனிக்குதவியாகுமல்லால் முளைப்பதற்குக் காரணமாகாததுபோற் சத்துவகுணமும் சுத்தவாசனைக்குக் காரணமானவுதவியாய் சீவன் முத்தர்களிடத் திருக்கிறபடியால் சென்மமில்லை.

**வினா**.

சுத்தவாசனையாவதே தென்னில்,

**விடை.**

சத்துவத்தை விடாமல் ஒன்றான ஆத்மத் தியான மாத்திரமாயு நிருவிகற்பமாயிருப்பதே சுத்தவாசனை இதுசுகமாத்திரமாயிருப்பதால் இதில் சதா காலமும் சுழுத்திபோல் வயப்பட்டிருப்பவர்களே சதாசமாதியடைந்திருப்பவர்களாம்,

**வினா.**

சொரூப சமாதியடைந்தவர்க ளெத்தனை விதமா யிருப்பார்க ளென்னில்.

**விடை.**

இரண்டு விதமா யிருப்பார்கள்,

**வினா.**

எப்படி பென்னில்,

**விடை.**

நாமரூப விவகாரத்தொழில்களோடுங் கூடிச்சமாதி செய்பவர்களும் அவைகளிற் பயனில்லையென்று துறந்து ஏகாந்தமாய் தனியிடத்திருந்து சமாதி செய்வர்களுமாயிருப்பார்கள் அங்ஙனமானாலும் இருவர்களுக்கு மோட்சபல மொன்றே யாகும்,

**வினா.**

அதெப்படி யென்னில்,

**விடை.**

இரண்டுபேரிருதயங்களுஞ் சீதளமாத்திரமா யிருக்கும் அச்சீதளமே அவர்களனந்த சென்மங்களிற் செய்துள்ள தபோபல மென்று சொல்லுவார்கள் அவ்வனுபூதியிற்சதாகாலமுஞ் சுகித்திருப்பனுடைவயமனமானது ஏககேசகாரியங் களிற்பிரவேசித்துச் சலன மடைந்தாலும் அதனால்வருங் கவலைகளால் அவனுக்கொரு ஆனிவிருத்தியுமில்லை அவன் சமதிஷ்டியாயிருந்து உன்மத்தன் போலும் கூத்தாடிபாசாங் கடிப்பது போலும் ஒருவருத்தமுமின்றிச் சுகசமாதியி லிருப்பன் - ஆதலா லறிஞர்கள் விவாரங்களைச் செய்தாலும் அதினின்று நீங்கிச் சதாரிஷ்டராய சொரூப சமாதியிருந்தாலும் இருவருக்குமோட்சபலஞ் சமனாயிருக்குமன்றி உயர்வுதாள்வு இல்லையென்று சுருதிஸ்மிருதிகளிற் சொல்லப் படுகின்றது.

**வினா.**

விவகாரநீங்கிச்சதா நிஷ்டராயிருப்பவர்கள் எவ்விடத்தில் வசிப்பார்க ளென்னில்,

**விடை.**

அங்கனமானபரமயோகிகள் தூங்கினாலும் விழித்தாலும் விவகாரங்கள் செய்தாலும் செய்யாதிருந்தாலும் சதா அந்தர்முகதிருஷ்டியா யிருப்பதால் வீடு நாடு காடுகளெல்லாஞ் சமமாய்க்கண்டிருப்பதினாற் சீதளமாகவேயிருக்கும் அதனால் ஜெகத்தோற்றரவும் அதிசீதளமான சொரூபமாகவேவிளங்கும் இப்படிப்பட்ட அந்தர்முக நிஷ்டையில்லா தவர்கள் வனங்களிற் குகைகளிலாசனங் கட்டிக்கொண் டிருந்தபோதிலும் மனம்பகிர் முகப்பதினால் அந்தவனங்கள்குகைகளெல்லாம் வீடுநாடுகளாகவேதோற்றிக்கொண்டிருக்கும் - ஆகையினால் ஒரு தொழில்களைச் செய்தாலும் தொழில்களை நீந்துச்சுக சமாதியிலிருந்தாலும் அந்தர்முகதிருஷ்டியை

யுடைய அறிஞர்கள் மனம்விஷ்ராந்தியடைந்து அதிசீதளமாய் சொரூபசமாதி யிற்றானே சுகித்திருக்கும் அவர்களுக்குச்சுருதி மயக்கமுமில்லையென்று சுருதிஸ் மிருதிகளிற் சொல்லப்படுகின்றதுசித்தம்,

**உற்பத்திப்பிரகாண முற்றிற்று.**

## உபசாந்திப்பிரகரணம்.

### அவதாரிகை.

முற்பிரகரணங்கள் நான்கினாலும் சொரூபசமாதி யடைந்து நிஷ்டாபரனான சீஷனுக்குமேல்சென்றவிடமெல்லாஞ் சிதானந்த மாகரமிக்கும் சச்சிதானந்தானுபவ முதயமாகும் பொருட்டு உபசாந்திப் பிரகரணங் கூறுகின்றார்.

### கவி.

வானதாமனுடயோனி வந்திடலரி துவந்து
மான வேதங்கள்கற் பதரித்துவந்துற்றாலு
ஞானசாதங்களெய்தலரித்து நண்ணினாலு
மீனவஞ்ஞானமின்றி யிருத்தலிங்கரிதுதாணே (1)

விபரீதசம்சயங்கள் வினவியே தீர்ந்திட்டாலு
மபரோட்சந்தனிலஞ்ஞான மகன்றிடாதிருக்குமென்னிற்
நவமெனுங்குருவந்தாலுஞ் சாஸ்திரங்களினுநீங்காத்
துவந்துவமுடையோனான்மதுரோகியென்றறையும்வேதம் (2)

இதன்பொருள்.

### வினா.

சகலசந்தேகவிபரீதங்களும் விடுபட்டுப்பிரப்பஞ்ச விவகாரங்களனைத்துஞ் சுழுத்திபோலாகிச் சதாநிஷ்டர்களாய் விஸ்ராந்தி பெற்றிருக்கும் அறிஞர்களது மனத்தில் ஒருவேளை ஏகதேசமாய்க் கன்மவசத்தினால் சதிருஷ்டி நீங்கி அஞ்ஞான மான அசம்பாவந் தோற்றுமானால் அவர்களுக்குத் கதியில்லையோவென்னில்,

### விடை.

அங்ஙனமானம் பெரியோர்களுள்ளத்தில் அசம்பாவனை வரக்கணக்கில்லை - அவர்களுக்குக் கன்மமுமில்லை அப்படியின்றி ஒரு போது ஏகதேசத்திலுண்டாகுமா னாலவர்களுக்குக் கதியுமில்லை,

### வினா.

அதெப்படியென்னில்.

### விடை.

இந்தப்பூமியின்கண் உற்பவிக்குங்காலத்தில் மானிடயோனியுற்பிறப்பதரிது பிறந்தாலும் ஊமை செவிடுகுருடு நீக்கிப்பிறப்பதரிது பிறந்தாலும்பேடு நீக்கி பிறப்பதரிது பிறந்தாலும்வித்தியாப்பியாசம் பண்ணுவதரிது பண்ணினாலும் வேதாத் தியாயம் பண்ணுவதரிது பண்ணினாலும் அவற்றில் நிருமிதமான கன்மங்களைச் செய்வதரிது.

**வினா.**

அந்தக்கருமங்களாவதேதென்னில்.

**விடை.**

நித்தியம் நைமித்தியம் காமியம் நிஷேதம் பிராச்சித்தம் யென ஐந்து வகையாயிருக்கும்.

**வினா.**

நித்தியகன்மமாவதேதென்னில்.

**விடை**

ஸ்நானபான சந்தியாவந்தன செபவோமதேவதர்ப் பணவை வசுதேவபசு வந்தன முதலானதுகளாம்.

**வினா.**

நைமித்தியகன்மமாவதேதென்னில்,

**விடை**

சங்கிராந்திபர்வம் அர்த்தோதயம் மஹாவுதய முதலிய புண்ணிய தினங்களில் நீராடல் முதலான துகளாம்.

**வினா.**

காமியகன்மமாவதேதென்னில்.

**விடை.**

அசுவமேத ராசசூய பவுண்டரீகமுதலான யாகங்கள் செய்தல் சோமவாரவிர தமாதிகள் இதுகளைச்செய்யலாம்.

**வினா.**

நிஷேதகன்மமாவதேதென்னில்.

**விடை.**

பிறனில் விழையாமை கள்ளாமை கொல்லாமை கள்ளுண்ணாமை பொய்யாமை முதலியநியமங்களைக் கொண்டிருத்தலாம்.

**வினா.**

பிராற்சித்தகன்மமாவதேதென்னில்.

### விடை.

சாந்திராயணம்கிரிகரம் சலபக்ஷணம் வாய்வுபக்ஷணம் தீர்த்தாயத்திரை முதலான கருமங்கள் செய்யலாம்.

### வினா.

இந்தக்கன் மங்களினாற் பயனென்னையென்னில்.

### விடை.

தேகமிருக்குமட்டும் நித்தியநைமித்தியகன்மங்களைச் செய்து வந்தால் பிராரத்தம் போகும் காமியகன்மத்தைச் செய்து வந்தால் சொர்க்கபோக முண்டாகும் நிஷேத பிராச்சித்த கன்மங்களைப் பண்ணிவந்தால் சஞ்சிதம்விடுபடும் அதனால் முத்திவருமென்று சிலர்சொல்லுவார்கள் அதுமுத்தியல்ல.

### வினா.

அதெப்படியென்னில்.

### விடை.

காமியகன்மத்தினால் ஞானம் வரமாட்டாது சொர்க்கபலமாத்திரம்வரும் - அதையடைந்தாலுமீண்டும் செனன மரணம் வருமேயல்லாமல் முத்திவராது - நிஷேதகன்மமும் பிராச்சித்தகன்மமும்புருஷனுக்குக் கன்மத்திலதிகாரத்தை யுண்டு பண்ணி பிரத்திய வாயத்தைப் போக்காநிற்கும் - இந்தப்படி மூவிதகன்மமும் ஞான சாதனமன்றாகும், மேல்நித்திய நைமித்தியமான இரண்டுகன்மமு மூவிதப்பட்டி ருக்கும்.

### வினா.

அதெவ்வாரென்னில்.

### விடை

சத்துவகன்மம் ராசதகன்மம் தாமதகன்மமெனமூவகை அவற்றுள் ராசததாமதமான இரண்டுகன்மங்கள் செனன மரண துக்கத்தை விருத்தியாக்கும் அதனாலும் ஞானம்வராது சத்துவகன்மமாத்திரமேசித்தசுத்தி யுண்டாக்குவதினால் ஞானசாதனமாம் - இப்படி கன்மத்தினால் ஏகதேசமாக வுண்டாகுஞ் சித்தசுத்தியைக் குறித்து சிலர் ஞானபரம் பரையென்று சொல்லுவார்கள் ஆனாலும் இந்தச் சத்துவகன்மம் பண்ணும் போதும் ஈஸ்வரார்ப்பணமாகப் பண்ணவேண்டும்,

### இதற்குதாரணம் பிரபோதசந்திரோதயம்.

பறவைவரிச் சிறையிரண்டாற் பனிவிசும்பிற் படுவதுபோற் பயனெண்ணாம் - லிறைவனுக்கர்ப்பிதமாகி யெழுகருவேதாகமங்க ளியம்பாநின்ற - பெறலருநற்கருமமுமே லகண்டசச்சிதானந்த பிரமஞானத் - துறுதியுமா மிரண்டாலு

முயிர்களின்ப வீடுபுகுந்துறைபு மென்றான் - என்று முன்னோர் வாக்கிய மிருப்பதினால் நிஷ்காமியமாகச் செய்யுஞ் சத்துவ கன்மமும் சித்தசுத்திக்குக் காரணமே யன்றி மோட்ச காரணமல்ல,

## இதற்குதாரணம் ஞானசித்தி.

சுவரை மண்ணறைக்கழுவினாருண்டெனில் சுக்கிலவழிதன்னைத - தருவி ஞானம் விட்டருச்சுனை முதலிய தவங்களிற் பிறப்பற்றா - ருவரிசூழ்நிலத் துதித்திடு மாந்தரிலுண்டெனு முரையந்தோ - கவருமையறிவ கத்திடுங்குருபரன் கழலடைந் தவரல்லால் - பென்று கூறியதினால் னிஷ்காமிய கன்மத்தினாற் சித்தசுத்தி யுண்டாய் அதனால் சற்குருலாபமுண்டாய் அதனால் சிரவணாதிக முண்டாய் அதனால் ஞானமுண்டாகும்.

## இதற்குதாரணம் பிரபோத சந்திரோதயம்.

ஆற்றும்பயன் வேண்டாக்கரும மந்தக்கரண சுத்திதரும் - போற்றுஞ் சுத்தி தரும்போதம் போதம்பிரமனானென்னும் - மூற்றந்தருநா னுதித்தலுமேயுயர் வான்மதிநீர் துளக்கமெனத் - தோற்றந் தருமா யைபிற்றன்னைத் துளக்க மின்றிக் காணுவனால் - யென்று கூறப்பட்டிருக்கின்றது.

## வினா

ஈசுரார்ப்பணஞ் செய்வதில் சித்தசுத்திவருமானால் ஞானம் யெதினால் வருமென்னில்,

## விடை

சற்குருசாஸ்திர முன்னிலையாகவே வரவேண்டும்

## இதற்குதாரணம் சிவஞான சித்தியார்.

ஞான நூறனை யோதலோதுவித்த னற்பொருளைக் கேட்கித்தறான் கேட்டனன்றா - மீனமிலாப் பொருளதனைச் சிந்தித்தலைத்து மிறைவனடியடைவிக்கு மெஞ்ஞானபூசை - யூனமிலாக்கன்மங் கபடன் செபத்தியான மொன்றுக்கொன்று யருமிவை யூட்டுவதுபோக - மானமையான் மேலான ஞானத்தாலரனை யருச்சிப்பர் வீடெய்த வறிந்தோரெல்லாம்.

## அபரோட்சாத்மானுபவ தீபிகை,

சித்தியே வேண்டுமென்ற திடமுளோன் விசாரம்பண்ண - லற்றவில் பரிதியிந்தோ டக்கினிப்பிரதாகங்கண் - மற்றைவைவிடப் பதார்த்தஞான மில்லாதுபோல - நத்திய விசாரஞான மவைவிண்டான் ஞானமுண்டோ - யென்றுங் கூறியிருப்பதால் விசாரஞான முண்டாகும் பொருட்டு சகலகன்மங்களையும் ஈசுரார்ப்பணமாகச் செய்யவேண்டும் - அந்தபலத்தினால் சிவமே கிருபை கூர்ந்து சீவகாருண்ணியம் ஈசுரபத்தி பாசவமிராக்கியம் பிரமஞானமென்னு நான்குமே ஒரு

திருமேனியாகக் கொண்டருளிய சற்குரு லாபமுண்டாம், அதனால் சிரவணமுண்டாம், அதனால் னிதித்தியாசன முண்டாம், அதனால் விவேகஞானமுண்டாம், அதனால் தன்னைத்தலைவனைப் பகுத்தறியவரும்,

## இதற்குதாரணம் கைவல்லிய நவநீதம்.

வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிலந்திறந்து - தீரா தசுழகாற்றுற்ற செத்தைபோற் சுற்றி சுற்றிப் - பேராத காலனேமியபிரமிப்பிற்றிரிவன் போத - மாராயுந்தன்னைத்தானென்றறியு மவ்வளவுந்தானே * தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேற் - பின்னை யத்தலைவன் றானாய்ப் பிரம்மாய்ப் பிறப்பு தீர்வ - னுன்னை நீயறிவாயாகி லுனக்கொரு கேடு மில்லை - யென்னை நீ கேட்கையாலே யீதுபதேசித்தேனே.

## சிவபோகசாரம்.

தன்னை பறியார் தலைவன் றனையறியார் - முன்னை வினையின் முடிவறியார் - பின்னைக் - குருக்களென்று பேரிட்டுக் கொள்வார் களையோ தெருக்களிலே னின்று சிலர் - யென்றுங் கூறப்பட்டிருக்கின்றது.

## வினா.

தன்னையறியும் விதமெப்படியென்னில்

## விடை

பிரபஞ்சத்திற் சத்தாதி விடயங்களாகத்தோற்றும் இந்திரிய வறிவெல்லாம் சீவன் தானே யனுபவிப்பதாக அறியாமையினாற் கொள்ளுமிடத்து இந்தப் பொறிவழியாற்காணும் நாமரூபங்களெல்லாம் இந்திரியங்கட்குத் தோற்றுமேயன்றிச் சிதாபாசனான சீவவனுக் கில்லையென்பது அனுபவமாகும் யெப்படியென்றால் நற்சத்தந் துற்சத்தங்களென்றறிவது சுரோத்திரேந்திரிய வறிவல்லாமல் சீவவறி வல்ல.

## வினா

அதெப்படியென்னில்,

## விடை.

செவிடர்களுக்குஞ் சீவினிருக்கிற படியினால் அந்தச் சீவன் சத்தத்தையறிய வேண்டும் அப்படிகாணாமையால் சத்தத்தை யறிகிறவறிவு சுரோத்தி ரேந்திரியமே அதைச்சீவ னறியாமையால் தன்பேரிலாரோபித்துக் கொண்டு நானே சத்தமறிகிறவ னென்றதல்லாமல் சீவனுக்கு இந்தப்பின்னவறிவு காலத்திரயத்திலுமில்லை தொக்கிந்திரியவறிவான பரிசனமுஞ் சீவனே யறிவதனால் திமிர் நோய் கொண்டவர்களிடத்துஞ் சீவனிருகிக்கிறபடியினால் அந்தச் சீவன் சீதோஷ்ண பரிசத்தை யறியவேண்டும் அப்படிகாணாமையால் பரிசத்தையறிகிற தறிவு தொக்கி தொக்கிந்திரியமே அதைச் சீவனறியாமையால் தன்பேரி லாரோபித்துக்கொண்டு

நானே பரிச மறிகிறவனென்றதல்லாமல் சீவனுக்குப் பின்னவறிவு காலத்திரயத்திலு மில்லை, நேத்திரேந்திரியவறிவானரூபமும் சிவனேயறிவதனால் குருடர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் பஞ்சவன்னங்களை யறியவேண்டும் அப்படிகாணாமையால் ரூபத்தையறிகிறவறிவு நேத்திரேந்திரியமே அதைச் சீவனறியாமையால் தன்பேரிலாரோபித்துக்கொண்டு நானேரூபமறிகிறவ னென்ற தல்லாமல் சீவனுக்குப்பின்னறிவு காலத்திரயத்திலுமில்லை சிங்குவேந்திரியவறி வான ரசமும் சீவனேயறிவதானால் தோஷம்பிறந்தவர்களிடத்துஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச்சீவன்ஷட்வகைருசிகளைப் பகுத்தரியவேண்டும் அப்படிகாணாமையால் ரசத்தையறிகிற வறிவு சிங்கு வேந் திரியமே அதைச் சீவனறியாமையால் தன்பேரி லாரோபித்துக்கொண்டு நானே ருசியறிகிறவனென்ற தல்லாமல் சீவனுக்குப் பின்னறிவு காலத்திரயத்திலுமில்லை கிராணேந்திரிய வரிவான கந்தமும் சீவனேயறிவதானால் மூக்கிந்திரிய மில்லாதவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச் சீவன் நற்கந்த துற்கந்தங்களைப் பகுத்தறிய வேண்டும் அப்படி காணாமையால் கந்தத்தையறிகிறவறிவு கிராணேந்திரியமே அதைச்சீவ னறியாமையினால் தன்பேரி லாரோபித்துக்கொண்டு நானேவாசனையறிகிறவ னென்ற தல்லாமல் சீவனுக்குப்பின்னவறிவு காலத்திரயத்திலுமில்லை இப்படியிருக்க யிவ்விந்திரிய வறிவுகளையெல்லாம் தன்னிடத்திலாரோபித்துக் கொண்ட ஆவரண முழுதும் ஞான திருஷ்டியினால் விடுபட்டு இந்தப்பொறி வழிகளா லார்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்கள் தனக்கில்லை யென்று கண்டு னிரிரத்திரியனாய் விர்த்தேகனாயிருக்குங் கூடஸ்த சொரூபமே தானென்பது விசாரித்தறியவேண்டும் இந்தப்படியே வசனாதிவிடயங்களாகத் தோற்றும் கன்மேந்திரிய வறிவெல்லாம் சீவன் தன்னிடத்தி லாதோபித்துக் கொண்டதல்லாமல் சீவனுக்கில்லை.

## வினா.

அதெப்படியென்னில்,

## விடை.

ஊமைகளுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச் சீவன் வசனிக்கவேண்டும் அப்படிகாணாமையால்வசனிப்பது வாக்கிந்திரியமே கையில்லாத முடவனுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச்சீவன் ஏற்றலிடுதல் செய்யவேண்டும் அப்படி காணாமையால் ஏற்றலிடுதல் செய்வது பாணீந்திரியமே - காலில்லாத முடவருக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச் சீவன் நடக்கவேண்டும் அப்படி காணாமையால் நடப்பது பாதேந்திரியமே, லிங்கலேபனமில்லாதவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியால் அந்தச் சீவன் போகிக்கவேண்டும் அப்படி காணாமையால் போகிப்பது உபஸ்தேந்திரியமே - பலங்குறைந்து குதஞ்சுருங்கலானவர்களுக்குஞ் சீவனிருக்கிறபடியினால் அந்தச்சீவன் மலவிசர்க்கஞ் செய்யவேண்டும் அப்படி காணாமையால் மலவிசர்க்கஞ்செய்வது பாயுரிந்திரியமே - இப்படியிருக்க இந்தக் கன்மேந்திரியவறிவுகளை யெல்லாந் தன்னதாகக்கொண்ட ஆவரணம் விடுபட்டு இவைகளா லார்ச்சிக்கப்பட்ட புண்ணியபாவங்க ளெல்லாந் தனக்கில்லையென்று ஞான திருஷ்டியாற்கண்டு அசங்கனாகிய கூடஸ்தசொரூபமேதா னென்பது

விசாரித்தறிய வேண்டும் - இந்தப்படியே பஞ்சகோசங்களையுஞ் சீவன் தானென்று ஆரோபிதமாய்க் கொண்டாலல்லதமல் சீவனுக்கில்லை,

**வினா.**

அதெப்படியென்னில்.

**விடை.**

பருத்தேனிளைத்தேனென்பது ஆறுதத்துவமான அன்னமய கோசதாதாத் மியமன்றிச் சீவனுக்கில்லை உசுவாசித்தேன் நிசுவாசித்தே னென்பது பிராணமய கோசதாத்திய மன்றிச்சீவனுக்கில்லை - சங்கற்பித்தேன் விகற்பித்தேனென்பது மனோமயகோச தாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை நான்கர்த்தா போத்தாவென்பது விஞ்ஞானமய கோசதாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை - நான் அஞ்ஞானிமூட னென்பது ஆனந்தமயகோச தாதாத்மியமன்றிச் சீவனுக்கில்லை,

**வினா.**

அதெப்படியென்னில்

**விடை.**

என்சரீரமென்னும்போது தான் வேறுசரீரம் வேறென்றும் என் இந்திரியமென்னும்போது தான் வேறு இந்திரியம் வேறென்றும் என்பிராணனென்னும்போது தான்வேறு பிராணன் வேறென்றும் என் மன மென்னும்போது தான் வேறு மனம் வேறென்றும், என் புத்தி யென்னும் போது தான்வேறு புத்திவேறென்றும் என் சித்தமென்னும் போது தான் வேறு சித்தம் வேறென்றும் என் அகங்காரமென்னும்போது தான்வேறு அகங்காரம் வேறென்றும் என் அஞ்ஞானமென்னும்போது தான்வேறு அஞ்ஞானம் வேறென்றும் அனுபவத்தினால் தனக்கன்னியமாகக்கண்டு சாட்சியாகிய தன்னிடத்தில் ஆரோபிதமாய் விவகாரதசையில் மாத்திர மிருக்கிறதென்று விசாறித்தறிய வேண்டும்,

**வினா.**

இப்படியறிந்தவர்களுக்கு ஆரோபி தமில்லையோவென்னில்.

**விடை.**

இப்படி சாட்சிமாத்திரமா யிருப்பவர்களுக்குச் சத்தமறிவதாகிய சுரோத்திரமும், பரிசமறிவதாகிய தொக்கும் ரூபமறிவதாகிய சட்சுவும், ரசமறிவதாகிய சிங்குவையும், கந்தமறிவதாகிய கிராணமும், வசனிப்பதாகி யவாக்கும், ஏற்றலிடி தலாகியபாணியும், கமனம்பண்ணுவதாகிய பாதமும், ஆனந்திப்பதாகிய வுபஸ்தமும், மலவிசர்க்கம் பண்ணுவதாகிய பாயுரும், உசுவாசநிசுவாசம் பண்ணுவதாகிய பிராணாதிவாய்களும், சங்கல்பவிகல்பஞ் செய்வதாகியமனமும், நிச்சயிப்பதாகிய புத்தியும், அஞ்ஞான மாகிய அவித்தையும்,

பின்னமின்றியபின்னமான அறிவுசொரூபமாய்க் கண்டிருப்பதால் விசாரித்தவர்களுக் காரோபிதமேயில்லை இப்படி ஒருவிகாரமின்றி நிருவிகாரமாயிருக்க அவாந்தர கற்பனையானமன மயக்கத்தினாற் ஜெனன மரணங்களு முண்டானதுபோற் றோற்றியது,

## வினா.

அப்படியானால் ஜெனன மரண நரகசொர்க்கங்க ளனுபவித்த தாரென்னில்.

## விடை.

கன்மகாண்டத்தில் விதியாகசொன்ன புண்ணியகன்மங்களைத் தேகேந்திரி யங்களாற் செய்து அதற்குத்தக்க தேவபோகங்களையும் தேகேந்திரியங்களே யநுபவித்தது - நிஷேதமாகச்சொன்ன பாவகன்மங்களைத் தேகேந்திரியங்களாற் செய்து அதற்குத்தக்கதிரியக்காதிஸ்தாவரசரீரங்களெடுத்து துக்கரூபமான நரகங்களையுந் தேகேந்திரியாதிகளே யனுபவித்தது - இந்த தேகேந்திரியாதிகளையே தானென்றும் இதுகளா லார்ச்சிக்கப்படு புண்ணியபாவ கன்மங்களைத் தன்ன தென்றும் அத்திராசமாகிக்கொண்ட வபிமானதோஷத்தினால் அளவிறந்தஜனன மரணங்களுண்டாயிற்று தீர்க்கமாய்விசாறித்தறியுமிடத்தில் சகலதும் இந்தத் தேகேந்திரியா திகளுக்கே யல்லாமல் ஏகமாய் நித்தியமா யிருக்கப்பட்ட தானாகிய கூடஸ்தருக்கில்லையென்ரறிவதே வேதாந்தசித்தாந்தம், இதற்குக் காரண வாசிட்டம்.

தெரித்தறியும் பொருணோக்குச் சீவனறிவதுவாகச் செப்பலாகும், விரித்தபுலனனுபவித்து மனுபவியா மனமதுவாய் விளம்பலாகும், புரித்தவுணர்வொளி நெஞ்ச முலகிவற்றி னறிவது வாய்ப்புகலலாகும், பரித்ததொழில் செய்வினுங்கற் போலிருக்கு நிலையதுவாய்ப் பகரலாகும் என்றும் * முடிவகன வஞ்ஞானமில்லா நீடுயில துவாமும்மையாகி - யடர்தரு ஞாதுருஞானஞேய மெழுந் தொடுங்குமிட மதுவேயாகுந் - திடவிசும்பன்றாயிருந்தும் விசும்பானநிலைய துவாஞ் சித்தம்புந்தி - படர் மனம்போய்த் தாபரவுள்ளறிவுபெற லொப்பா மப் பரரூபம் - என்றும் உபநிடதம்,

தோற்றுமசத் தறிந்தகலத்தொடர் பகலுமே தெனிலித் தூலதேகமாற்றுதொறுந் தொழிலகலு மிந்திரியச்செயல்கன்றால்வைய நீங்கு - மேற்றுமனோலயத்திலறு மவிடய மவித்தையை நீங்கி லியாவு நீங்கும் - போற்றுமிந்தச் சீவவறிவிழந்த விடம்புகல் பரிபூரணம் தாமே * மெய்மொழி * ஓசைகேட்டுச் செவியறுசுவை யுமுண்ண நாவுடல்மூற்றிக - வாசமூக்குயிர்ப்பவுருவுகண்காண மற்றுமெக்கரும முஞ்செய்க - வாசுடைப் புலன்களனுபவித்திடினுமப்பின் மூழ்கிடினுமம்புயத்தின் பாசடை நீரிற் பற்றிலாதது போற் பற்றிலார் பரமயோகிகளே * பூரணப்பிரகாசம் * உடம்புடனிருந்தே யுடம்பிலாவுண்மை வுணர்ந்தவனுளத் தொருகாலும் - விடம்படுகாமம் வெகுளிமேவாது விடப்படும் பொருளெல்லாம் விளைக்குமிடம்படு மிதயாகாசிமற்றி துவே யிறப்பொடு பிறம்பிலாதென்றும் - திடம்படும் பிரமமாவது மான்மாவாவதுந் தேகட்கெல்லாம் * சிவஞானசித்தியார் * சாக்கிரத்தில தீகத்தைப்

பொருந்திடின் மற்றவரே சகலசங்கமுடனிருந்துஞ் சங்கமிலாவர்தம் - பாக்கியத்தை யின்னதெனப்பகர்வது வென்னுயிரின் பற்றறுத்திட்டிம்மையிலே பற்றற்றிங்கிருப்பா - ராக்கிமுடிகவித்துக்கொண் டரிவையர்களுடனே யனுபவித்தங்கிருந்திடினு மகப் பற்றற்றிருப்பர், நோக்கியிது புரியாதோர் புறப்பற்றாலுண்ணுழைவர் பிறப்பினில் வினைகணுங்கிடாவே * என்றும் - மன்னன்றன் மகன் வேடரிடத்தே தங்கிவளர்ந்தவனை யறியா துமயங்கிற்ப - பின்னவனு மென் மகனீயென்றவரிற் பிரித்துப் பெருமையொடுதானாக்கிப்பேணுமாபோற் - றுன்னுயுவைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந் தொல்லுயிரை - மன்னுமருட்குருவாகி வந்தவரினீக்கி மலமகற்றித்தானாக்கி மலரடிக்கீழ்வைப்பான் - என்றும் - சொரூபசாரம் - நனவிற்றசேந்திரிய நாட்டியங்கள் பார்ப்போங் - கனவின் மனக்கூத்தைக்காண்போ நனவிற் - சுழுத்தியில்லாத சூனியகூத்தாடி - விழுப்பொருளாய் நாமிருப்போமே - என்றும் தத்துவராயர் - ஞானவினோதன் - கலம்பகம் - அலராயின செய்யுமைம்புலன்காளெம் மறுபகையாங் - கலகாள் பலகுணங்காண் மலங்காள் கரணங்களென்னும் - பலகாளருட்சொரூபானந்தனார் பவளத்திருவாய் - பலராதளவு மன்றோவுங்களோ டெங்கள் வாழ்வுகளே - என்றும்- போதரத்னாகரம் - கற்பிதம்பொருள் கடலமைக்கடவுளாய்க்கருதித்தொல்லை - யுற்பவந்தன்னினின்றேயுறைத் தனனெண்ணில்காறந் தற்பரம்பொருளாய்வந்த தம்பிரான்றாடொழாதே - புற்பதக்கனவிற்பொன்னா பூண்செயக்கருதினேனே - என்றும் - அவிரோதவுந்தியார் - அசுணாதிக்கோரென்றாலைம்புலனாலு - மிசையுமேற்கேடெமக்குந்தீபற - வெங்ஙனமென்றுந்தீபற - என்றும், தத்துவராயர் அமிர்தசாரம் - சிந்தாகுலமனிதர்ச்சீசெவிமுதலா - மைந்தாலுமீடழியவல்லாரோ வைந்திலொருவேட்கை யசுணமிபம்விட்டின் மூன்வண்டிவைகள் - கேட்கை முதலோரொன்றின்கேடு- என்றும் திருவாய்மொழி - ஆவிதிகைக்கவைவர் குமைக்குஞ் சிற்றின்பப் - பாவியேனைப்பலநீ காட்டிப்படுப்பாயோ - தாவியவையங் கொண்ட தடந்தாமரைகட்கே - கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதே - என்றும் திருவாசகம் * அடற்கரிபோ லைம்புலன்களுக்கஞ்சியழிந்தவென்னை * விடற்கரியாய் விட்டிடுதிகண்டாய்விழுத்தொண்டர்க் கல்லாற் * றொடற்கரியாய் சுடர்மா மணியேசுடுதீச்சுழலக் * கடற்கரி யெழு நஞ்சமுதாக்குங் கறைக்கண்டேன் - என்றும் * கந்தரனுபூதி - கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற் - றுய்வாய்மனனே யொழிவாயொழிவாய் - மெய்வாய்விழி நாசியொடுஞ்செவியா - மைவாய்வழி செல்லுமவாவினையே, என்றும் நாலடியார் - மெய்வாய்கண்மூக்குச் செவியெனப் பேர்பெற்ற - வைவாயவேட்கையவாவினைக் - கைவாய், கலங்காமற் காத்துய்க்கு மாற்றலுடையார் - விலங்காதுவீடுபெறும், என்றும் சிவஞானசித்தியார் - ஒருபுலனுகரும்போதங் கொன்றிலே யொன்றின்பாலும் - வருபயன்மாறிமாறி வருந்திடுமெல்லாமாயு - மொருபொழுதுணரிலுண்டா மில்லதிவ் வல்லல்வாழ்க்கை - மருள்கன வதுவும்போல. மாயும்பின் மாயமென்றே- என்றும் தேவாரம் - வென்றிலேன்புலன்களைந்தும் வென்றவர் விளாகந்தன்னுட் - சென்றிலேனாதலாலே செந்நெறியதற்குஞ்செய்யே - னின்றுளே துளும்புகின்றே னீசனேனீசனேயோ - வின்றுளேனாளையில்லே னென்செய்வான் றோன்றினேனே - என்றும் படுகுழிபவ்வத்தன்ன பண்டியைப்பெய்தவாற்றாற்கெடுவதிம்மாயவாழ்க்கை காண்டொறுங்கேதுகின்றேன் - முடுகுவரிதனுளைவர் மூர்க்கரேயவர்களோடு -

மடியனேன் வாழமாட்டேனாரூர் மூலட்டனாரே - என்றும் - புள்ளுவரைவர்கள்வர் புனத்திடை மறந்துநின்று - துள்ளுவர் சூறைகொள்வர் தூநெறிவிளையவொட்டார் - முள்ளுடையிவர் கடம்மை முக்கணான்பாதநீழ - லுள்ளிடை மறைந்துரின்றங் குணர்வினா லெய்தலாமே - என்றும் - பொய்யனைத்தையும் விட்டவர் புந்தியுள் - மெய்யெனச்சடர் வெண்மழிவேந்திய கையனைக்கச்சியே கம்பமேவிய - வையனைத் தொழுவார்க்கில்லை யல்லலே - என்றும் மூக்கு, வாய், செவி, கண்ணுடலாகிவந் - தாக்குமைவர் தம் மார்ப்பையவிழதர - நோக்குவானமை நோய்வினைவாராமேயகாக்குநாதன் கச்சி யேகம்பனே - என்றும் - திருவாசகம் - மாறுபட்டஞ் சென்னை வஞ்சிப்பயானு மணிமலர்த்தாள் - வேறுபட்டேனை விடுதிகண்டாய்வினை யேன்மனத்தே - யூறுபட்டே மன்னு முத்தரகோசமங் கைக்கரசே - நீறுபட்டே யொளி காட்டும் பொன்மேனி நெடுந்தகையே - என்றும் இந்திரியவயமயங்கி யிறப்பதற்கே காரணமா யந்தரமேதிரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச் - சிந்தனையைத் தெளிவித்துச் சிவமாக்கியெனை யாண்ட வந்தமிலாவானந்த மணிகொடில்லைகண்டேனே - என்றும் - பரிகூரணப்பிரகாசம் பந்தப்புறங்க ளொருமூன்றும் பரமனிடையே யிருப்பதெனிற் - றொந்தப்புருஷ னொருக்காலு நசியானாதனாற்றுஞ்சா - னந்தப்பரமனே யவன்றா னறியாமையினா லப்பரணைப் - பந்தப்படு மோர் சீவனெனப் பார்ப்பானபவத்தே பதைக்கின்றான் - என்றும் - சொரூபசாரம் - கண்ணலாற்கண்ட துண்டோ காதலாற்கேட்டதுண்டோ - விண்ணலாலேதும் விளைந்ததுண்டோ - வெண்ணுங்காற் - கானலாலோடிவரக் கண்டதுபோற் றோற்றுகினுந்தானலாதுண்டோ சகம் - என்றும் - போகம்புவனம் பொருந்துமிடமெங்குந் - தேகங்கரணந் திரிபுமேயாகிலது - தன்னை நீயென்று தயங்காதேநெஞ்சமே- நின்னை நீகண்டறிந்து நில் - என்றும் - திருமந்திரம் சீவனென்றுஞ் சிவனென்றும் வேறில்லை - சீவனார்சிவனாரையறிகிலார் - சீவனார் சிவனாரையறிந்தபின் - சீவனார்சிவனாகியிருப்பரே- என்றும் - கடையவொழிந் திட்டிருந்தகனன் மரமடையவிழுங்கியது வானவாறுபோ - லுடலிலொழிந்திட்டிருந்த சிவமுயிரடைய விழுங்கியது வானவாறே - என்றும் தன்னையறியத் தனக்கொரு கேடில்லை - தன்னையறியாமற் றானே கெடுகின்றார் - தன்னையறியுமறிவை யறிந்தபின் - னென்னைவிட்டென்னை யினிதுணர்த்தேனே - என்றும் எல்லாமறிவதறிவு தனைவிட்டே - யெல்லாமறிந்து மிலாபமொன்றிங்கில்லை - யெல்லாமறிந்தவறிவினையானென்னி - லெல்லாமறிந்த விறையென்னலாமே என்றும் - பொன்வண்ணத்தந்தாதி - ஒழித்தேன் பிறப்பினை யூர்ந்தேனறுவசை யோங்கிற்றுள்ள - மிழித்தேனுடம்பினை யேலேன்பிறரிடையிம்மனையும் - பழித்தேன் பழியே விளைக்கும்பஞ்சேந்தியக் குஞ்சரமுந் தெழித்தேன் சிவனடி சேர்ந்தே னினிமிகத் தெள்ளியனே - என்றும் திருவம்மானை - மெய்யான தொன்றுமே மெய்ம்மைகாணம்மானை - மெய்யன்றி மற்றெல்லா மித்தைகாணம் மானை - என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

## வினா.

இன்னுமெப்படியென்னில்,

### விடை.

சச்சிதானந்த சொரூபமாகியும் அகண்டத்துவமாகியும் அபரிச்சின்னத்துவமாகியும் சர்வவியாபகமாகியும் காலபரிச்சேததே சபரிச்சேத வஸ்துபரிச்சேத ரகிதமாயும் நிராமயமாகியு மிருப்பதே ஆத்மசொரூபமென்று சுருதிஸ்மிருதிகளும் உபநிஷத்துமகா வாக்கியங்களும் குருவாக்கியமுங் கூறப்படுகின்றது.

### வினா.

சத்தென்பதெப்படியென்னில்,

### விடை.

முற்பிரவிகளிற்செய்த நல்வினை தீவினைகளின்படி இந்தச் சரீரம் வந்ததென்று சொல்லுகையாலும் இப்போது செய்கின்ற வினைகளுக்கினிமேற் பிறவி வருமென்பது சர்வானுபவமாய்க் கண்டிருப்பதினாலும் இப்படி திக்காலங்களுமுண்டான சரீரமாத்திர மழிந்துதான் நித்தியமா யறிவற்றிருப்பதினாலும் சத்தென்பதாயிற்று,

### வினா.

சித்தென்பதெப்படியென்னில்,

### விடை.

பாலியாவஸ்தைமுதல் நடந்துவரும் விவகாரங்களிற்சிறிது மறந்திருந்தாலும் மற்றவிருத்தாந்தமெல்லாம் அமாவாசையிருளும், மேகாந்தகாரமும் மழைநிசியுங் கூடியகாலத்திலும் மூலைவீட்டில் முக்காடிட்டுக் கண்களை மூடிக்கவிழ்த்து படுத்திருக்கிற புருஷனுக்கும் சூரியசந்திராக்கினி மின்மினி நட்சத்திர நேத்திரசாதனங்க ளொன்றுமின்றியிருந்தும் இன்னதின்னதென்று பகுத்தறியப் படுகிறதினால் சித்தென்பதாயிற்று,

### வினா.

ஆனந்தமென்பதெப்படியென்னில்,

### விடை.

தனதானியதார புத்திரர்களால்வருஞ்சுகங்களை நெடுநாளாய் ஒருக்கால்போலப் பலகாலுமனுபவித்து அதுகளால்வருஞ் சுகமெல்லாந் துக்கமாய்க் கைவிட்டுச் சழுத்திசுகத்தையே சதாநாடுகிறபடியால் ஆனந்தமென்பதாயிற்று,

இதற்குக்காரணம் - கைவல்ய நவநீதம் - சென்மாந்திரஞ்செய்த வினைகளுடறருமெனிற் செல்காலமிவனுண்டலோ - கன்மானுபவநரகசொர்க்கமெனில் வருகின்ற காலத்துமிவனுண்டலோ வுன்மா தயாதனாவுடல் கடவுளுடன்மனுட வுடன்மாறிமாறியழியுந் - தன்மாயவுடல்கெடினு மிவனிருப்பது கொண்டு சத்தென்பதொக்கும் கனே - என்றும் - இருளாகமூடுஞ்

சுழுத்தியிலிராத்திரியி லிரவிசுடரற்றபொழுது - மருளா மலிருளயும் பொருளையும் தெரிகின்ற வகை கொண்டுசித்தாகுமே - பெருவாழ்வுமிக்கதானே தன்னிடத்திற் பெயராதபிரியமதனா - லருகாதபிரியஞ் சுகத்தில்வருமாதலா லானந்தமாமைந்தனே - என்றும் - சத்தேசித்தாகுமய லெனிலசத்தாமத்தாம சத்தாணாற்சாட்சியெங்கே - கித்தேசத்தாகும்ப லெனிற்சடமாஞ்சடங்களுக்குத் திதியுமில்லை - யொத்தே தோன்றிய சத்துஞ்சித்து நல்ல சுகமாகுமூகத்துக்கோர் - வித்தேயன்னியமாகிற் சடமசத்தா ஞ்சுகானுபவம் விளைந்திடாதே - என்றும் - வீயாதசத்துமூனம் விளங்குவதுதன்னாலோ - வேறொன்றாலோவாயால் வேறெனிலதுவும்சத்தோ சத்தோவசத்தேல் மலடிமைந்தன் - பேயாகாரியஞ் செயுமோவசத்தெனவிப் படியதையும் பிரித்துச்சொன்னாலோயாதவவத்தை யாங்குதர்க்க விகற்பங்களை விட்டொழிந்திடாயே - என்றுங் கூறப்பட்டிருக்கின்றது ஓர்கிரகம் ஓர் சரீரங்களைக்குறித்து அதற்குள்ளிருப்பவன்போற் கண்டமாகியும் பரிச்சின்னமாகியும் ஓர் தேக வியாபகமாத்திரமாகியு மிருப்பதால் இனி அகண்டமாகியும் அபரிச் சின்னமாகியும் சர்வத்தினுள்ளும் புறமும் வியாபித்திருக்கும் சர்வவியாபகமாகியு மிருக்கின்ற தலைவனாகிய பிரமசொரூபத்தையு மிந்தப்படியே விசாரித்தறிய வேண்டியது,

## வினா.

அதெப்படியென்னில்,

## விடை.

அகண்ட பரிபூரண வியாபகமாகியும் அபரிச்சின்னமாகியும் காலதேசவஸ்து பரிச்சேதரகிதமாகியு மிருப்பதே பிரம சொரூப மென்று சுருதிஸ்மிருதிகளிற் சொல்லுகின்றது,

## வினா.

ஆகாசத்திற்கும் இந்தக்குணங்க ளிருக்கிறபடியால் அதுவே பிரமமென்று சொல்லாமேயென்னில்,

## விடை.

ஆகாசமானது நான்குபூதங்களினும் னிறைந்து சர்வ வியாபகமாய் னிரவயமாயிருந்தாலும் சிருட்டிகாலத்துண்டாகிப் பிரளயகாலத்தி லழிந்துபோவ தினால் காலபரிச்சேதம்வரும்,

## வினா.

காலமே பிரமமென்று சொல்லலாமோவென்னில்,

**விடை.**

காலமான துஏகவியாபகமாய் நிரவயவமாய் எந்ததேசத்திலும் வியாபித்திருத்தாலும் தேசாசாரங்களால் காலக்கிரியைகளும் அதனாலுண்டாகும் பொருள்கனிமாறி யளிவுவருகிறபடியால் காலத்திற்குந் தேசபரிச்சேதம்வரும்,

**வினா.**

தேசமேபிரமமென்று சொல்லலாமோவென்னில்,

**விடை.**

தேசமானது எங்கும் வியாபித்திருந்தாலும் ஒருதேசத்திலுள்ளவஸ்து ஒரு தேசத்தி லில்லாமையினால் தேசத்திற்கு வஸ்து பரிச் சேதம்வரும்,

**வினா.**

வஸ்துவேபிரமமென்று சொல்லலாமோயெனில்,

**விடை.**

வஸ்துவானது வியாபரமின்றிக் கண்டமாய்பரிச் சின்னமாய் அனுத்தியமா யிருப்பதினால் வஸ்துபரிச் செகமும்வரும் ஆகையால் காலத்தினால் ஆகாசத்திற்கும் தேசத்தினாற் காலத்திற்கும் வஸ்துவினால் தேசத்திற்கும் அழிவுவருகிறபடியால் இதுகள் பிரம சொரூபமாக மாட்டாது,

**வினா.**

ஆனால் பிரமசொரூப மெவ்வகைப்பட்டதென்னில்,

**விடை.**

தேகேந்திகரணங்களும் அவற்றின் றொழில்களுமின்றிக் காலதேசவஸ்து பரிச்சேதரகிதமாய் அகண்டபரிபூரணமாப் அபரிச் சின்னமாய் சின்மாத்திரமா யிருக்கின்ற அறிவுவியாபகமே பிரம சொரூபம்,

**வினா.**

பிரமத்திற்குத்திரிலிதபரிச்சேதமுமில்லையென்பதேதெனில்,

**விடை.**

எந்தக்காலத்திலும் எந்தத்தேசத்திலும் எந்தவஸ்துவிலும் உள்ளும்புறனும் எள்ளிடவிடமின்றிச் சர்வவியாபகமாய் அறிவறியாமையற்று செகசித்திரபடம் போலும் பர்வதம்போலு மசைவற்று நிஸ்மரணமா இருக்கிறபடியால் திரிவிதபரிச் சேதமுமில்லை என்பதே துணிவு - இதற்குதாரணம் - மெய்ம்மொழி பொன்னைத் தான் கண்டபேர்கள் பணியெனப்புகலார்போல - மன்னித்தானுடன் மயக்கு மாயதத்துவங்களாய்ந்தே- யுன்னைத்தானறியவின்பவுருவு சைதன்யமாகுந் -

தன்னைத்தான் கண்டவர்க்குத் தானெனவேறு முண்டோ - என்றும் - மூலசித்தி - யென்று மெக்கால மெங்குமியாருளுமிறைவ நீயே - யின்றி மற்றொன்றுமின்றி யிருந்தவாறிருக்கவிங்கன் - பின்றைமற்றுளவாய்ப் பேணியி தமிகப் பேய்த்தேரேரிச் - சென்றிடச் செய்ததேயவ் விச்சையென்செப்பிடாயே - என்றும் - மகா வாக்கியம் - இக்குணங்களுடைய பரப்பிரமமே நாமனோமெவ்வாறென்னி - னெக்கக்கனாதியெனச் சனிப்புமரிப் பின்மையினா னித்யமானோர் தொக்குடம்புபோல மலத்தின்றுவக்க தின்மையினாற் சுத்தமானோ - முட்கரணம் போனசிக்கு மறிவுபெறாமையிற் புத்த மூடைத்துநாமே - என்றும் - அகங்கா ரவிருத்தியெனப்பந்த உலாமையின் முத்தமானேமிர்தச் சகம்போல விளைக்கு மிந்திரசால மிலாதிருக்கையினாற் சத்யமானோஞ் - சுகங்காணிற் றன்னையலாற் சுகமிலையென்றே பரமானந்தமானோ - மிகுங்காலதேசவஸ்துவெனப்பிரியாவானந்தவேடநாமே என்றும் தத்துவம் பிரகாசம் - முன்னைநாற் சுருதியோதி முடிவுறற்கரியதாக - வின்னமத் தேவர்முவ செய்துதற் கிடரேபேவத்- தன்னையிப்படியேசாணத் தானளித்தெனக்கோர் வார்த்தை சொன்ன நற்சொரூபானந்தசோதியைத்தொழுதல் செய்வோம் - என்றுங்கூறப் பட்டிருப்பதால் இதுவேபிரமான சித்தம்,

## வினா.

ஆத்மாவிகாரமின்றி நிர்விகாரியாயிருக்கத் தேகேந்திரியாதிகள் தொழிற்படு தானால் அதுகளுமோர்வஸ் துவென்று துவிதவாதிகள் சங்கிப்பார்களேயென்னில்,

## விடை.

காந்தக்கல்லானது அசைவத்திருக்க அச்சன்னிதான பலத்தினால் சடமானவூதிசேஷ்டித்து அக்காந்தந்தத்தைப் பார்த்து பிடிப்பதுபோலும் சூரியனிச்சையின்றியிருக்க அச்சன்னிதான பலத்தினால் சடமான சூரியகாந்தகல்லி லக்கினி செனித்து அதனால் பாகாதிகிரியைகள் நடப்பது போலும் ஆத்மப் பிரகாசத்தினாற் பிரதி பலித்தசாயையானது விருத்திரூபமாய் சாக்கிரசொப்பனங்க ளிலுள்ள விடங்களை இந்திரியாதிவழிகளாலறிந்து விவகரிக்கின்றது சுழுத்தி மூர்ச்சைசமாதிகளில் விருத்தியின்மையால் ஒரு அறிதலும் விவகாரங்களுமில்லை ஆத்மசன்னிதாதபலத்தாற் றொழிற் பட்டதன்றி யிந்திரியாதிகள் நடமேயாம்,

இதற்குதாரணம் - சசிவன்னபோதம் - கடக்குஞ்சரம் பண்ணி யுண்ணின் றொருத் தன்கைபாதகன்னங் கண்மெய் போலியக்குங் - கிடக்கும் நடத்தாவிடத்திவ் விடம்புங்கிடக்கும் மொருத்தன் நடத்தாவிடத்தே * என்றும் - நிழற்பாவை கண்ணாடியிற் பாவைகையா - னிமிர்க்கும் முடக்கும்மிவன் செய்யுமெல்லாந் - தொருற்பால தாமிந்தவுடலஞ் செய்தொழிலுஞ் - சுடர்ஞான வடிவானவன் செய்த தொழிலெ * என்றும் - கைவல்யநவ நீதய் - செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்குங் காந்தச்சிலைமலைமுன் னிரும்புகள் சேட்டிக்கு மாபோற் - செய்கையுஞ்செய்விக்கையு மற்றிருக்கு மென்முன் செடமானவுலகமெல்லாஞ் சேட்டை செய்யு - மெய்கலந்த விந்திரிய விகாரரூப விவகாரவிர்த்திக்கும் விருத்திதானாய் - மேய்கலந்து சமாதிக்குஞ் சாட்சியேநான் வெயில்போ

வென்றுறைத்தவனே விபுமகர்த்தன் * என்றுங் கூறியிருப்பதினால் இதுவே பிரமாண சித்தம்,

## வினா.

இந்திரியாதிகள் தொழிற்படாது சடமாயிருந்தாலுந் துவிதமேயன்றி அத்துவிதம்மலவென்று சொல்லுவார்களென்னில்,

## விடை.

தொண்ணூத்தாறு தத்துவமென்பதுசகலமதத்துக்கும் பொதுமென்றும் சைவர்களுக்கு (36) வேதாந்திக்கும் (28) மாயாவாதிக்கு (25) வயிணவலுக்கு (24) தத்துவங்க ளென்றும் பின்னும் பதினேழு தத்துவமென்றும் பத்தொன்பதுத் துவமென்றுஞ் சொல்வதெல்லாம் சோன்மாத்திரமேயன்றிப் பஞ்சதன் மாத்திரையை த் தவிரக் காலத்திரயத்திலுமில்லை - எப்படியென்றால் சத்தமென்றறிகிறபோது சத்தமும் சத்தமென்றறிந்த வறிவுமாத்திரமேயயன்றிச் சமானவாய்வு சுரோத்தி ரேந்திரியம் வக்கிந்திரியம் வசனாதிவிடயங்களு மில்லை - பறிசமென்றறிகிறபோது பரிசமும்பரிசமென்றறிந்த வறிவுதாத்திரமண்றி மனம்வியான வாய்வுதொக் கிந்திரியம் பாணீந்திரியம் தானாதிவிடயங்களுமில்லை - ரூபமென்ற்றிகிறபோது ரூபமும் ரூபமென்றறிந்த லறிவுமாத்திரமன்றி புத்திஉதானவாய்வு நேத்திரேந்திரியம் பாதேந்திரியம் கமனாதிவிடயங்களுமில்லை- ரசமென்றறிகிறபோது ரசமும் சரமென்றறிந்த வறிவுமாத்திரமன்றிச் சித்தம் அபானவாய்வுசிங்குவேந்திரியம் உபஸ்தேந்திரியம் ஆனந்தவிடயங்களுமில்லை - கந்தமென்றறிகிறபோது கந்தமும் கந்தமென்றறிந்த வறிவுமாத்திரமன்றி அகங்காரம்பிராணவாயுவு கிராணேந்திரியம் குதேந்திரியம் மலவிசர்க்காதி விடயங்களுமில்லை- இந்தப்படி தன்மாத்திரைகளைத் தவிரவேறே தத்துவங்களில்லாமையாலும் தன்மாத்திரைகளைப் பிரத்தியேகம் பிரத்தியேமாய்ப் பிரித்துப்பார்க்க அதுகளுந் தனியே ஒன்றைவிட்டொன்றி ல்லாமையினாலும் ஐந்துமொன்றாகவே இருப்பதினாலும் இதுகளுக்குக்காரணமான விட்சேபசத்தியும் விவேகித்தவிடத்தி லில்லாதிருப்பதினாலும் அந்தவாவரணமும் ஒன்றுந்தெரியவில்லை யென்றறிந்த வறிவுமாத்திரமாகி அறியேனென்ற அஞ்ஞனம் நசித்துவிட்டது பின்னுந் தனக்குள்ளே சகல தத்துவங்களுந்தோன்றி வளர்ந்து ஒடுங்குவதென்று கண்டவறிவேமகாகாரணமான மூலப்பிரகிருதி அதுவுஞ்சொன் மாத்திரமேயன்றி ஒரு பொருளல்ல.

## வினா.

அதெப்படியென்னில்.

## விடை.

தன்னிடத்தொன்று உண்டானாலல்லவோ யிறுக்கவேண்டும் இருந்தா வல்லவோ லயிக்க வேண்டும் அப்படி வுண்டாகவுமில்லை வளரவுமில்லை லபிக்கவுமில்லை யென்றறிந்த வறிவுமாத்திரமாயிருப்பதே மூலப் பிரகிருதிரகி தமான பிர்மசொரூபம்.

இதற்குதாரணம் - தத்துவரத்திலைகரம் - தத்துவம்பல வெனச்சாற்றுவார்சிலர் - பித்தர்களெனு மிடம் பேசவேண்டுமோ - வத்துவின் வடிவலதன்றி நின்றபின் - னெத்தளைத்துவ மின்னமின்னமே * என்றும் - இந்தியடுருபதோ டீரிரண்டெனத் - தந்திரமோதுவர்சார்ந்தமேலவர் - இந்திரியம்பலவென விசைத்தபேரெலாம் - வந்தது மலினமா மனோவிகாரமே என்றும் - வேறு - கோடிதத்துவமென்னிலுங்கோதிலா - நீடுதற்பர நின்றதுமற்றவை - யோடசித்து சித்தாகிடுமுண்மையிற் - பீடுதப்பலபேசல் பிதறதலே * என்றும் போதாமிர்தம் - பண்ணுவர் பலபல தத்துவங்களை மன்னிய பரமுணராதமாந்தர்க - டன்னிலை தலையுணர்கின்றபோதினி - லன்னிய மிதுவெனவறையலாவதே * என்றும் - கோலுமாத்திரை நுரைகுமிழிகொள்ளை நீர் - வேலையிற்பிறிதென விளம்பலாவதோ - சாலுதத்துவம் பலபலசாற்றுமாயிறு - மூலநற்சிவமே முடிவினுள்ளதே * என்றும் - சிவப்பிரகாச தரிசனம் - ஒன்ற தென்றிடலாவது மொன்றற - நின்றதத்துவனின் மலபோதமே - பின்றை யொன்றுள தென்றல் பெரும்பிழை - என்று - வேத மியம்பிய்தல்லவோ * என்றும் - முதுமொழி - தத்துவத்தையுணருந்தலைவரை - யொத்ததம்மிலொருவனென்றுள்குவார் - நித்தனிற்குணனின் மலனென்றுளா - ரத்தனாகுமவர் நரகெய்துவார் * என்றும் - சமயசூடாமணி - வடம்பட்க் கோத்தமணி நுழை நூல் போன் மன்னு பிராக்கைகட் கெல்ல - மிடம்படக்கோத்து நின்றதங்கொன்றே யெனுமிடமேழைகாள் பாரிற் - கடம்பம்பலபேதப்பட்டமாத்திரமே கடத்தினுளாகாசம்போலு - முடம்பினி லொளியைப் பார்த்தபோதெல்லா மொருவனேயன்றி வேறுளதோ * என்றும் - சொரூபசாரம் - பூதாதியைந்தும் பொறிபுலன்களெல்லாஞ்சித் - தேதாதியந்தமவை யெல்லாஞ்சித் - தோதரிய - கற்பனையுஞ் சித்தனைத்துங்காண் பானுங் காட்கியுஞ்சித் - தற்பமும் வேறில்லாமையால் * என்றும் - மார்த்ததிசையெல்லாம் பரிபூரணசொரூபம் - தீர்த்தமெல்லா மானந்தசிற் சொரூபங்கீர்த்திக்குந் தோத்திரங்க ளெல்லாஞ் சுகசொரூப நம்மையலால் - வேற்றுருவமேதாகுமே * சிற் சொரூபந்தானே செக சொரூபமானவெலாங் - தற்சொரூபசார மாய்சாற்றவே - பொற்சொரூப - மச்சுறுவம்போலவ துவதுவாய்த்தோற்றுமொரு - சொச்சொரூபந்தானே துனை * என்றும் - வாசிட்டம் - உவரிநீர்போலுலகெல்லா மொன்றானவுணர்வு மாத்திரமது தானுற்ற புந்தி - கவர்வுறுதலாலசைபு நிறையுநீர் தான் கல்லோ லத்தாலசையுங்கணக்கேபோலச் - சிவமுணர்வு மாத்திரமேபிரமமாதி திகழ் பெயராய்ப் புகல்பொருளைச் செகமென்றெண்ணித் - தவமறுபேதையாகாண்ப ரறிவுதானேசற்றசைந்தமாத்திரத்திற் சருக்கமுண்டாம் * என்றும்- பெரும் பெரிய வடிவான பிரமமேயாதலாற் பிறிதொன்றில்லை - வரும்பொருளெல்லாம் பிறிவின் கனதையா யிருத்தலி லிவ்வைய மெல்லாங் - கரும்புயலேயறிவேயாங் கற்பனை வேறில்லையாற் காணப்பட்ட - வரும்பொருள் கடமிறில வுண்டாதலினாலறி பொருளா மனைத்துமில்லை * என்றும் அவதூத கீதை - சுலோமம் * சர்மம்சூன்யம் மனஸ்சூன்யம் சத்தாசத்ய வித்யதே - சோபாவாபாவிதம் புரோக்தம்சாஸ்த்ரசம்மதி பூர்வகம் - என்றுங்கூறப்படுகையா ளிதுகளே பிரமாணசித்தம்.

## வினா.

இப்படி துவிதவஸ்து வின்றித்தானே தானாயிருக்கிற தன்னிடத்தில் துவிதபாவனைகளான விபரீதங்களெப்படி யுள்ளதாகத்தோற்றியதென்னில்,

### விடை.

இல்லாதவன் அஞ்ஞானத்தோற்றமான புலன் வழிகளாம் காலத்திரயத்திலு மில்லாத சுத்தமித்தையான விபரீதபாவனைகள் இல்லாதகானசம்போ லுள்ளதாவத் தோற்றியது,

### வினா.

உள்ளவஸ்துவிலுள்ளது தோற்றுமேயன்றி இல்லாது தோற்றாதேயென்னில்,

### விடை.

உள்ளயிரும்பில் இது ஆயுதமெனத் தோற்றியது இல்லாத வாயுதந்தோற்று மா உள்ள இரும்பு தானே தோற்றினது உள்ள பொன்னில் இது ஆபரணமெனத் தோற்றியது இல்லா தவாபரணந்தோற்றுமா உள்ளபொன்தானே தோற்றினது - உள்ள மண்ணில் இது கடமெனத்தோற்றியது இல்லாதகடந்தோற்றுமா தோற்றுமா உள்ள மண்தானே தோற்றினது - உள்ள மரத்தில் இதுகரி பரிகளெனத் தோற்றியது இல்லாத கரிபரிகள் தோற்றுமா - உள்ளமரங் தானே தோற்றினது - உள்ள சமுத்திரத்தில் இது அலை நுரை குமிழியெனத் தோற்றியது இல்லாத அலை நுரை குமிழி தோற்றுமா உள்ளசமுத்திரந்தானே தோற்றினது - உள்ள ஆகாசத்தில் இது நீல பீதமெனத் தோற்றியது இல்லாத நீலபீதவர்ணங்கள் தோற்றுமா உள்ள ஆகாசமே தோற்றினது - உள்ளகட்டையில் இதுகள்ளனெனத்தோற்றியது இல்லாத கள்ளன் தோற்றுவானா உள்ளகட்டையே தோற்றினது - உள்ள பழுதையில் இது பாம்பெனத் தோற்றியது இல்லாதபாம்பு தோற்றுமா உள்ள பழுதையே தோற்றினது இந்தத்திஷ்டாந்தங்களைப்போல சச்சிதானந்தசொரூபமான தன்னிடத்தில் இது நாம ரூபமெனத் தோற்றியது உள்ளசச்சிதானந்தமே தோற்றினதன்றிக் காலத்திரயத்திலு நாமரூபந் தோற்றவேயில்லை.

### வினா.

அதெப்படியென்னில்.

### விடை

இருக்கின்றது சத்து அந்தச்சத்து தானே நாமரூபமான கித்தாய்த் தோற்றியது அந்தக்கித்தைவிட நாமரூபமென்பது காலத்திரயத்திலு மில்லாமையாலும் சத்தை விடச் சித்தென்பது வேறே யில்லாமையாலும் இரண்டாம் வஸ்துவில்லை அந்தச்சத்துக்குஞ் சித்துக்கு மிடையேயுள்ள ஆனந்தமானசுகந் தோற்றமாட்டாது.

இதற்குதாரணம் - வாசிட்டம் - ஆதலினாலீதென்றுஞ் செய்ததல்லவடுத்துள விச்சகமில்லை யறிவுமட்டு - மேதகு சங்கற்பமே வேதாவாகு பெய்யாகவறிவன்றி வேறொன்றில்லைச் - சேதனமாத்திரத்துதித்த சிருட்டியந்தச் சேதனமேவடிவென்று செப்பலாகுமோதிய செய்வோன் பொசிப்பொனிரண்டுமல்ல வுறுபவந் தீர்பிரமமேயுள்ள வெல்லாம் * என்றும் - பொருகடலிற்றிரை முதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகி விளங்காமற் புழுதியாமோ - யொருபொருளாம் பிரம

மாத்திரமேயல்லாலுபய மெனுங்கற்பனைப்பே றொன்றுமில்லை - யெரியிடத்திற் சூடுமாத்திரமேயல்லா லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்றுமொன்றாஞ் - சரியைகிரியா யோகபதத்தின் முத்திசாதனங்கணிறைந்தவர்க்கே சாற்றல்வேண்டும் * என்றும் - அத்துவித வுண்மை- தங்கமொன்றே பணிதிகளிற் சாற்றும் விதங்கள் வெவ்வேறு - தங்கவிளக்கணமுமன்று தங்கந் தவிர வேறன்று - தங்கமழியாப் பணியழியிற்சாற்றுமிந்தத் தகைமையோ - லெங்கு நிறை சச்சிதானந்த மிலங்கு மிந்தவுலகமே * யென்றும் - தங்க மொன்றே பணங்களிநிசாற்றும் விதமாய்விளங்குகலி - னங்கமுதலாஞ்சகங்களாயறிவே விளங்குமயலில்லை -- இங்கங்கென்றே பங்கொன்றுமில்லை யகண்டவறிவொன்றே - துங்கவறிவுந் தோன்றளவுந்தோன்ற நானாவிதரூபம் * என்றும் - கைவல்ய நவநீதம் கான்னீர் கிளிஞ்சல் வெள்ளிகந்தர்ப்ப நகர்கனாவூர் - வானமைகயிற்றிற் பாம்புமலடிசேய் முயலின்கோடு - பீனமாந்தறிபுமானிற் பிரபஞ்சமெல்லாம் பொய்யே - ஞானமெய் மகனேயுன்னை நம்மானை மறந்திடாயே * என்றும் - பிரமாணங்களிருப்பதினால் காலத்திரயத்திலும் மாயை தோற்ற மாட்டா தென்பதே துணிவு,

## வினா.

மித்தையான நாமரூபங்கள் காலத்திரயத்திலு மில்லாத அகண்ட சச்சிதானந்த சொரூபமாத்திரமா யிருக்க இந்தச்சனன மரணமுதலான தாபத்திரயங்களும் சீதேசுர பேதங்களும் பந்தமோக்ஷங்களு முள்ளதாகத் தோற்றியதெப்படியெனில்,

## விடை.

ஆத்துமாவே தேகேந்திரியாதிகளென்றும் தேகேந்திரியாதிகளே ஆத்மாவென்றும் விவர்த்தமாகக்கண்டதே யஞ்ஞானம் அவ்வஞ்ஞானத்தினால் ஆத்துமாவாகி தன்னை அசத்தாகிய நாமரூபங்களாய் கண்டபோதே அத்துவிதமறைந்து துவிதபாவந் தோன்றியது.

## வினா.

அதெப்படியெனில்.

## விடை.

மேகமசைவாயோடச் சந்திரனோடுவதுபோலும் சலமசைய நிச்சலமான சந்திரனசைவலுபோலும் ஓடமேறிப் போகிறவனுக் குக்கரையினிடத் தசைவற்றிருக்குமரம் ஓடிவருதல்போலும் பித்தமேறியகட்சுழலினால் சுழலாத வீடு வாசல் சுழல்வது போலும் கொள்ளிக் கட்டை சுழற்றினால் சூரியவடமாய்த் தோற்றுவது போலும் காற்றாடி கயிறா யிருந்தும் சக்கரமாய்த் தோற்றுவது போலும் கானலாறோடச் சலமோடுவது போலும் கண்ணாடியினதுரசாரோபத்தினால் சலமிருக்குமிடஞ் சல மின்மையாகவும் சல முன்றிய விடஞ்சலமுள்ளதாகவுந் தோற்றுகிறது போலும் ரசக்கண்ணாடிக் கெதிரிருந்த வீடுவாசல்கள் பிற்புறந் தோற்றுவது போலும் அஞ்ஞானத்தினால் நாமரூப மானது விதபாவந் தோற்றியது.

## இதற்குதாரணம் - அபரோட்சாத்மானுபவ தீபிகை.

ஆன்மாவைத்தான் றேகமென்று மறிந்தார் பொன்னைப்பணி யென்றார் - மானநிசமுண்டாய்த்தானே மண்ணைக்கடாய் நிச்சயித்தா - ரானதந்தைப் - படப்மன்றேயற நிச்சயித்தாரது போலுமானமுடமதனாலே யாமாத்தேக மெனவறிந்தார் * என்றும் - அறியுமணியை நெருப்பென்று மறிந்தார்போல முகிலோடச் - செறி சந்திரன்றானோடுதல்போற் செலமேயசையச் சந்திரன்றா -- னறிய வசையு மொன்றாற் போறஞ்ஞானத்தா லான் மாவைப் - பிறியா தேகமாயறிந்தார் பின்னமான் வவித்தையினால் * என்றும் - அவித்தையினாலே யான் மாவிடத்தினிற் றேகமென்றும் - நவிற்றியவத்தியாச நாமமுண்டாயிற் றென்றே - யவித்தைபோய் விவேகந்தன்னாலறியவே சீவான்மாவுந் தவித்திடாப் பரமான்மாவுமயிக்கியந்தா வரங்கள் * என்றும் - கூறப்பட்டிருப் பதினாலும் இப்போதும் ஞான திருஷ்டியாய்ப் பார்த்தவிடத்தில் பார்க்கின்றவன் பார்க்கிறது பார்க்கும் பொருளாகிய மூன்றும் பஞ்சப்புலன்களோ டொழிந்து ஆகித்தப் பிரகாசத்தினுள் தீபப்பிரகாசமடங்கினது போலும் சூரியப்பிரகாசத்தினுள் பூதவிருளடங்கினது போலும் அறிவாகிய பெருங்கண்ணை மறைத்த ஆணவப் படலம் நீங்கும் அப்போது நாமரூபாதமகமான சகல தேகாதிப்பிரபஞ்சங்களுந் தனக்குள்ளொடுங்கித்தானே தானாயெதிர்த்து விளங்கும் இதற்குதாரணம் - அபரோட்சாத் மானுபவ தீபிகை - பார்க்கிறவன் பார்க்கிறது பார்க்கப்படுகிறது - மேற்குறிவைமூன்று மெவ்விடத்திலில்லையோ - மார்க்கும் விடத்தேதிட்டிதான் பண்ணுவதீதார்க்குஞ் சமதிட்டியாம், என்றிருப்பதினாலிதுவே பிரமாணம்.

### வினா.

சகலபிராரத்தபோகங்க ளிருக்குமென்றும் ஞானம்வந்தாலும் போசித்துத்தான் றொலைக்க வேண்டு மென்றும் சகலசுருதிஸ்மிருதிகளுஞ் சொல்லுவதன்றி நமக்குமனுபவ மாயிருக்க வஸ்துத்து வயமில்லையென்று சொல்லுவ தெப்படியெனில்.

### விடை.

பிராரத்தபோகம் அஞ்ஞான திருஷ்டியினால் அப்பியாசகாலத்திலுண்டு, தத்துவஞானவுதயத்தி லில்லையென்றும் அப்பியாசிக் கேபிராரத்தமன்றி ஆருடனுக்கில்லையென்றுஞ் சுருதிஸ்மிருதிகள் சொல்லுகின்றது நமது அனுபவமும் அப்படியேயாம்,

### வினா.

அதெப்படியென்னில்

### விடை.

விழித்தவனுக்குச் சொப்பனமசத்தானது போல யதர்த்தஞானத்தில் தேகாதிகள் சத்தாய்ப் போகிறபடியால் ஆரூடனுக்குப்பிராரத்தமில்லை அவனுக்கு அதீதமாகிய

# பிரம்மவித்தை என்னும் வேதாந்த ஜட்ஜிமெண்டு

பிரமப்பிர மகாசமொன்றுமே யேகமாய் விளங்கும் ஆதலாலந்தச் சொரூபமே நீநானாயென்பதிற் சந்தேகவிபரீதங்க்ளின்றி அத்துவித சின்மாத்திரமாயிருப்பாயாக இதற்குகாரணம்.

அபரோக்ஷாத் மானுபவதீபிகை - ஞானம்வந்தாலுந்தானே நவில் பிராரத்துவத்தை - தானதுபொசித்துத் தீரவேண்டுமென்கின்ற சாஸ்திரந் - தானு மப்பியாசிக்கன்றிச் தத்துவஞானிக்கில்லை யானதத்துவக்கியான வுதயத்தேபிராரத்தங்கள் * என்றும் - உதயத்தேபிராரத்தம்மென் றொன்றில்லை தேகந்தானு - மதேயசத்தாகையாலும் அதெப்படி யென்னிற்றான்கே - ளுதயத்தேவிருத்தவர்க்குச் சொப்பன்மசத்தானாற்போ - லுதயத்தே பிராரத்தங்க ளொன்றுமான்மாவுக்கில்லை - என்றும் - இல்லையேற் சென்மகன்மமில்லையோ வென்றாலான்மா - வல்லையேசென்மரகித ராகையாற்சென் மாந்தத்தினந் வல்லமை பிராரத்தத்தால் வருகின்ற சென்மமும் பொய் - யெல்லையிற் றேகஞ்சென்ற மாச்சுதேயென்றாற்றேகம், என்றும் - தேகமு முயற்கொம்பைப்போற் றேர்ந்திடில்லை கண்டா - யேகமாமாத்துமாவி னிடத்திற்சொப்பன தேகங்க - ளாக வெப்படியா ரோகமாச்சுதோ வதுபோற்போமால் - தேகமுமாத்துமாவிற் றேறிலாரோபமாகும் * என்றும் - வாசிட்டம் அந்தமற்றொன்றாய் விகற்பமற்றறிவாவழிவிலாப்பழம் பொருளிருக்கப் - பந்தமுற்றவரார் முத்திபெற்றவரார் பாவனைவிகற்ப மேயனைத்துஞ் - சிந்தனைவிரிவுபந்தமாமதனைத் தீர்ந்திடன்முத்தியாமனத்தின் றொந்தலீலையினாற்றூரமாமணித்துந் தூரமுமண்ணிதாய்த் தோற்று * என்றூம் - இவையெனுமனைத்துஞ் சிற்கனமாகியிறப்பிலாபிரமமே யென்று - நவையனுமனாமங் கற்பனையில்லை நாசமும் பிறவியுமென்னு - மவையெலாப்புவன மூன்றினுமில்லை யறுவகைவிகாரமுமில்லைக் - கவையறுசமமாங் குறிபெறுமறிவு மாத்திரங்கரண நின்றுளதால் * என்றும் - அத்துவிதவுண்மை - இல்லாமாயை தங்கணிலை யாருநிற்கவம்மம்ம - பொல்லாப்பிறப்பிற் பட்டதுமாய்ப் போக்க மிகவுந் தவிர்ந்ததுமாய் - நல்லாரிணக்கஞ் சேர்ந்ததுமாய் ஞானவிசார முதித்ததுமா - யெல்லாமாம் வீட்டைந்ததுமா யார்க்குங்காட்டி மறைந்திடுமே * என்றுங் கூறப்பட்டிருக்கின்றதால் இப்படி தானாய் விளங்கிய நிலையிற்கிஞ்சித்தேனும் சம்பாவனை நேரிடுமானால் அவ்வசம்பாவனையானது குருவினாலுஞ் சாஸ்திரங்களிலுந் தீர மாட்டாது இந்த அசம்பாவனையுள்ளவனை - சுவானுபவத்திற் சந்தேகம் பிறந்து தீர்க்கநிலை கொள்ளாமல் தவறுகையினால் ஆத்மத் துரோகியென்றும் பிரமத்துரோகியென்றும் சொல்லுவதன்றி இதைப்போக்குதற்குமே லனுபவமுஞ் சாத்திரங்களூ மில்லாமை யினால் இந்தத் துராகமொன்றினாலு நீங்கமாட்டாதென்று நான்கு உபநிஷத்துக்கள் சொல்லுகின்றது இதற்கு உபநிஷத்பிரமாணம் * சுலோகம் * சத்தியம் சத்தியம் புனஸ்சத்தியம் சம்சயாசம் சயாகெதினாஸ்தி அதோ அதோ சம்சயோகதீ தேவனித்ரா நாஸ்தி நாஸ்தி பலோற்பவவாக்கியயோசம் சயாகதீ நாஸ்தி நாஸ்தி * என்றுங் கூறப்பட்டிருக்கின்றதால் அசம்பாவனைக்கிடமாகிய இதர சாஸ்திரங்களைப் பார்க்கலாகாது பார்த்தபோதிலும் தனதுயதார்த்தமாகிய சுவானுபாவ திருஷ்டி விடாமலிருந்து பூர்வபட்சமாயெண்ணிச் சாவதானமாய்ப் பார்த்தறியவேண்டியது *

இதற்கு காரணம் - சிவஞானிலயம் - தன்னெஞ்சந்தனக்குச் சான்றகுவாகத் தத்துவநன்குணராதே - வன்னெஞ்சனாகிக் கூடமே புரிவோன் வஞ்சகக்கூற்றினுங் கொடியோன் - பன்னுங்காவலன்றன் றரிசனம் பரிசம் பழுதுறுனிரயவேதுவுமாம் - புன்னெஞ்சாவலனும்போய் நரகெய்திப் பூமியுள்ளளவுமேறானால் * என்றும் - ஞானமாமிலிங்கந்தம்முளத்தின்றி ஞானிகள் வேடமேமருவி - யூனதே வளர்த்தங்குண்டிமைதுனத்தின் பொருட்டினாலிழிதருகின்ற - வினமாஞ்சோர ஞானிகணிரய மெய்துவரெய்தியாங் குழைத்துத் - தீனமந்திரியக்கியோனிடோறுஞ் செனிப்பது மரிப்பதுமாவார் * என்றும் - ஞானசித்திமறைமுதற்கலைகளி யாவையுமுணர்ந்து மாசறவுரைத்துமாசொடுந்தான் - கறையும் விடயக் கருவெனுங்கடவிற் கருத்தறாத்தின் விழுமாகி - லறைதருமவனே கன்மசண்டாள னவறவிருமையுமிழந்து - பொறியிலியவனைப்போலும் பாதகரிப் புவியினிலொரு வருமிலையே * என்றும் - சாதிசண்டாள னகதிபெருந்தருமம் வழுவலிற் கன்ம சண்டாள - னோதியவழிகளொன்றினுங் கதிதா னுற்றிடானென்ப துண்மையதே - நீதியாங்கருமம்விட்டு ஞானத்தே னின்றவர் நிலைபிறந்தவர்போற் - றீதுறவொழுகுஞ் சோரமேயென்றார் றீக்கதியுறுதலோதிடுமே * என்றும் - ஞானாசாரம் வேதவாகமங்கண்மிருதி நூல்புராணமிக்க வெக்கலைகளும் பயின்று போதமே சொல்லிப் போதமங்குணராப்புலையருங்கழுதையனிகரங் - கோதிலாவாரங் - குங்குமம்பளிதங்குலவிய புழுகடைபொதி தானேதமேசுமந்த கழுதை யிங்கிவனினேற்றமாம் வஞ்சமினமையினால் * என்றும் கீழுறுகருமமே வியபதத்தோன் கிளர்தவ வேள்விங்கடையின் வாழியங்குயர்ந்தோனென மறைவழுத்து மற்றவனப்ப தமழியி - னாழியநரக மலதிலையெனு மாலதிவன்னாச் சிரமமுற்றழிந்தோன்- சூழுறும்பதித னுய்விலனவன் பேர் சொல்லினும் பஞ்ச பாதகமே * என்றும் மெய்ம்மொழி - கொலைமுதலைம் பாதகமுங் கோதறவேதமை யுணர்ந்தோர்க் குண்டங்கென்னிற் - சலமறுசேதனடிவைச் சடமாய்ப் பார்க்கலிற் கொலைதன் மயக்கங்கள்ளா - மலைமனமாதிகளென தென்றிடல் கள்ளலவை செய்தேனென்றல் பொய்யாம் - நிலையிலுடலுறவின்பமென வைம்பாதக முணர்ந் தோர் ளித்தர்சுத்தர் * என்றும் - அமிர்தசாரம் - யோகத்தினுண்மை யுணர்வன் றியூன்றியூன் பொருட்டா லேகத்தினின்றோமென வியம்பிமோகம் - மனத்தவலமாற்றாத வல்வேடர் தம்மை - னினைத்த வருங்காணார்நெறி * என்றும் கூறப்பட்டிருப்பதால் அசம்பாவத னைசம்சயபாவனை விபரீதபாவனைகளற்றுத் தானே தானாய் சுயம்பிரகாசமாய் சொற்சொரூபமாய் நின்மலமாய் நித்திய திருப்தி யடைந்து அத்தர்முகமிஷ்டையானசுகசமாதியுடையவர்களே சதாநிஷ்டர்களாய் விலங்குகின்றவர்கள் இதிற்சம்சயமில்லை சித்தம்.

**உபசாந்திப்பிரகரண - முற்றிற்று.**

## நிருவாணப் பிரகரணம்.

### அவதாரிகை.

முற்பிரகரணங்கள் ஐந்தினாலுஞ் சர்வமுந்தானாய்விளங்கு முபசமனம் பெற்றிச்சீவன்முத்தி சாட்சாத்கார துரியானுபவனிலைத்துள்ள சீஷனுக்கு மேல் அசிபதலட்சியார்த்தமான அகண்டானந்த துரியாதீத சுவானுபூதிமாத்திரமாய் ரமித் திருக்கும் விவேக முத்தியனுபவஞ் சித்திக்கும் பொருட்டு னிருவாணப் பிரகரணங் கூறுகின்றார்.

### கவி.

உள்ள றுசைவம்பாசு பதங்களாமுகத்தினோடு
வில்ளுமாவிரதம்வாமம் வயிரமிவையாறாகுந்
தள்ளுமப்புறத்துலோ கா யுதன்ச மண்புத்தனாகு
மள்ளுமீமாமிகன்றான் வயிணவன் மாயாவாதி.

வாதமீராறிலுள்ள மதங்களின்வகுத்தநூலா
லோதுறிற்பிராந்தியல்லா லுளப்பிராந்தியைத்தான்றீர்க்கா
தேதினாற்பிராந்திதானுந் தெளிவிக்கு நூலேதென்னி
லாதியாம்வேதாந்தத்தின் விசாரத்தாலறிவர்தானே.

இதன் பொருள்.

### வினா.

சமய வுண்மையில் நிலைத்துள்ள சமயிகளுக்கு முத்தியின்றோ வென்னில்.

### விடை.

சைவம் பாசுபதம் காளாமுகம் மகாவிரதம் வாமம் வயிரம் இவ்வாறும் அகச்சமய மென்றும் லோகாயுதம் மீமாம்சம் பௌத்தம் சமணம் பாஞ்சராத்திரம் மாயாவாதம் இவ்வாறும் புறச்சமயமென்றுஞ் சொல்லப்படும் அவற்றுள் உட்சமயத் தில் சைவமானது பேரறிவாகிய சிவனறிவிக்கச் சீவனறிவானென்றும் ஆண்டவனு மடிமையுமா யிருக்க வேண்டுமென்றுஞ் சொல்லும் - பாசுபதமானது பரமாணுவுபா தானமாய் நின்று அதன் புணர்ச்சியே காரணமாயுலகம் பண்ணப்பட்ட தென்றும் இதை நிமித்தகாரணமாய் நிற்குமென்றும் உயிர்களெல்லா மலங்களாற் பிணிப்புண்டு கிடக்குமென்றுஞ் சொல்லுவதன்றி ஆகமத்தின் முறையே ஆவாகனம் பண்ணியருச் சித்து பிணிப்பாகிய பாசமறுத்து அணுவாகிய சீவன் சிவனாகியபதியைக் கூடுமென்றுஞ் சொல்லும்களாமுகம் மகாவிரதமாகியவிரண்டும் அத்தியந்தஞ்சடை முதலான அடையாளங் கொண்டு பத்தியோடுஞ் சிவனை வழிபட்டருச்சித்து நியமங்குலையாதிருந்தால் வினையுடல்விடும்போது சிவலோகத்தை யடையலாம் அதுவே மோட்சமென்றுஞ் சொல்லும் - வாமமானது - மதுமாமிசங் கொண்டு சத்தியான ஸ்திரீகளைப்பூசித்து அவர்கள் சேடமுட்கொண்டு அந்தப்

போதையானந்தத்திருப்பதே மோட்சமென்று சொல்லும் - வயிரவமானது - மயானத்திருந்து என்புதரித்து சாம்பற் பூசியுபவாசமாயிருந்து மாவயிரவ மென்னுமோம முண்டாக்கி நரபலிகொடுத்து அந்தநரமாமிசமுமதுவுங்கபாலத்தில் வைத்து ஓமத்திலாகுதி பண்ணி அம்பதுவுமாமிசமு மறுநாள் கொள்வதே பாரண மென்றும் இப்படி செய்து முடிந்ததே நிருவாணவீடென்றுஞ் சொல்லும் - மீமாமிசமானது பசுபடுத்தியாகம்பண்ணி அந்தயாகபலத்தினால் தேவர்களாய் சுவர்க்கத் திருப்பதே மோட்சமென்றும் வேதாத்தியாயனம் பண்ணுஞ்சத்தமே பிரமமென்றுஞ் சொல்லும் பௌத்தமானது - இந்திரியங்களினறிவே ஞானமென்றும் பூதாகாசமேயாத்மா வென்றுஞ்சொல்லும் - சமணமாவது இந்திரியநிக்கிரகியாய்க் காமத்திற்புகுதாமலிரவுணவுகளை மறுத்து உடலையொறுத்துச் சிகைபறித்திருப்பதே பொன்னெயில்வட்டத் தருகருடன் சேர்வதென்றும் சொல்லும் - பாஞ்சராத்திரமானது - ஆதிமூலமானவிஷ்ணுவே தமதுவாயையினால் உலகுயிரெல்லாமுண்டுபண்ணி னாரென்றும் அந்தமாயையேயவருக்குவடிவமென்றும் வசுதேவர் முதலான நால்வர்களின் சமராதனத் தாற்சீவர்கள் பௌத்தம் விட்டுப்பரமபதம் பெறுவார்களென்றும் சொல்லும் மாயாவாதமானது நானென்னு மகங்காரியேபிரமம் அவருக்கு ஒருவிசாரமுமில்லை அவர் சன்னிதான விசேடத்தால் மாயை சேடித்துநின்று உலகுயிருண்டு செய்ததென்றும் பந்தமோட்சமில்லை - யென்றுஞ் சொல்லும் - இந்தப்பன்னிரண்டினுள் பாஷாண்டம் விரோசனம் சாருவாகம் உபாசகம் க்ஷணிகவாதம் அந்தராளம் ஆகமம்தி கம்பரம்பிரபாகரம்தார்க்கீகம் பாட்டம் சாங்கியம் யோகம் பதஞ்சலியம் விஸ்வரூபம் பிரசாபத்தியம் காணாபத்தியம் கௌமாரகம் பௌராணிகம் கன்சாஸ்திரம் என்று சொல்லப்பட்ட அனேக் மதங்களுண்டு அவர்களெல்லாம் தங்கள் தங்கள் மதாபிமானமே மேற்கொண்டு மந்திரவாதப்ர சவாதமுதலிய சாஸ்திரங்களைத்தொடுத்து னின்று பிராந்தர்களா யலைந்து போனார்களென்று பஞ்சதசப்பிரகரணத்திற் பிரமாண மிருக்கின்ற படியினால் சமயிகளுக்கு முத்தியில்லை.

### வினா.

சீவவாதிகளுடனே ஈஸ்வரவாதிகளையும் பிராந்தர்களென்று சொல்லலாமோ வென்னில்.

### விடை.

சொப்பனத்திற் பிச்சையெடுக்கிறவனிலும் அரசனாயிருக்கிறவனதிக மானாலும் விருத்தபிறகு இரண்டி சொப்பனமும் பொய்யானது போல இருவகை வாதிகளும் கற்பிதத்தில் தாரதன்மியமா யிருந்தாலும் ஞானம் வந்தவனைக்குறித்து இருவகைவாதிகளும் பிராந்தர்களென்றே சொல்லவேண்டும்.

### வினா,

இப்படி வேதாந்த விசாரத்தினால் வஸ்து நிண்ணயம் பண்ணுவதானால் அந்த வாதிகளுக் கெல்லாம் விரோதமல்லவோ வென்னில்.

**விடை.**

ஒன்றே பொருளென்ற வேதாந்தத்திற்கும் அதைத்தானே குருடர் யானை கண்டது போற் கண்டிருக்கின்ற மதவாதிகளுக்கும் சற்றும் விரோதமில்லை,

**வினா.**

ஒன்றே பொருளென்னும் வேதாந்தத்திற்கும் மற்றுள்ள மதங்க ளெல்லா வாயாமய மென்பதற்குப் பிரமாண முண்டோ வென்னில்.

**விடை.**

முப்பத்திரெண்டு உபநிஷத்துமே பிரமாணமென்று பஞ்சதசப் பிரகரணத்தில் நிரூபித்திருக்கின்றதே பிரமாணசித்தம்.

**வினா.**

விசாரஞானத்தினால் வஸ்து நிர்ணயம் பண்ணுவ தெப்படியென்னில்.

**விடை.**

ஷட்லிங்கதாற் பரியங்கொண்டு வேதாந்தவிசாரம் பண்ணின சிரவண பலத்தினால் வஸ்து நிர்ணயம் பண்ணவேண்டும்.

**வினா.**

அதெப்படியென்னில்,

**விடை.**

உபக்கிரமம் உபமங்காரமென்றொன்று அப்பியாசம் அபூர்வதைபலம் அர்த்தவாதம் உற்பத்தி என்றறுவகைகளாம்,

**வினா.**

உபக்கிரமமாவதேதென்ளில்,

**விடை.**

அகண்டபரிபூரண சச்சிதானந்தபிரமத்தினிடத்தில் ரச்சுவிற் சற்பந்தோன்றினது போல சகலபிரமாண்ட பிண்டங்களாகிய சகத்துண்டாயிற்று, இந்தச் சிருஷ்டிக்கு முன் பிரமஞ்சத்தாமாத்திர மாயிருந்ததென்று பிரதிவாதிக்கப் படுவதே உபக்கிரமம்,

**வினா.**

உபசங்காரமாவதேதென்னில்.

**விடை.**

உற்பத்தியான சகலசெந்தும் அபவாதக்கிரமமாக வொடுங்குகையால் பிரமாண்ட பிண்டங்களென்னு முபாதியிற் கூடஸ்தருக்கும் பிரமத்துக்குமுள்ள வுபாதிகளை.யொழித்து ஏகத்துவ அயிக்கத்தைக் கூறப்படுவதே யுபசங்காரம் இவ்விரண்டு மொரேலிங்கமாம்.

**வினா.**

அப்பியாசமாவதேதென்னில்.

**விடை.**

பிரத்தியேகான்மாவாகிய நீயேபிரம மென்றொன்பது பிரகாரமாகவுபதேசிப்பது அவ்வுபதேசம் சேதன்னைக்கூட்டிச் சொல்வதினாலும் சேதனனுக்கே அத்தொய்த ஆத்துமதத்துவம் போதிப்பதினாலும் அஃதே அப்பியாசம்.

**வினா.**

அபூர்வதையாவதேதென்னில்.

**விடை.**

அஷ்டப்பிரமாணங்களினுள் உபனிஷப் பிரமாணத்தினாற் பிராதியேகாத்ம லட்சணத்தையறியப்படுவதன்றி மற்றைப்பிரமாணங்களினா லறியப்படாதென்பது.

**வினா.**

அஷ்டப்பிரமாணமாவதே தென்னில்.

**விடை.**

பிரத்தியட்சம் அனுமானம் உவமானம் ஆகமம் அருத்தாபத்தி ஐதீகம் சம்பவாய் என்றெட்டுவிர்ஞுண்டு.

**வினா.**

அவற்றுள் பிரத்தியட்சப் பிரமாணமேதென்னில்.

**விடை.**

பிரத்தியட்சத்தில் சந்தேகப் பிரத்தியட்சம் விபரீதப் பிரத்தியட்சம் யதார்த்தப் பிரத்தியட்சமென்று மூன்று விதமாயிருக்கும் அவற்றில் கட்டையைக் கண்டு கட்டையோ கள்னனோவென்று சங்கற்பித்தது சந்தேகப் பிரத்தியட்சம் - கள்ளனென்றே விகற்பித்தது விபரீதப் பிரத்தியட்சம் கட்டையென்றறிந்தது யதார்த்தப் பிரத்தியட்சமென்று சொல்லப்படும்,

### வினா.

இவற்றிற் சொரூபவபிப்பிராயமே தென்னில்.

### விடை.

யதார்த்தப்பிரத்தியட்சத்திற் கொருபிரமாணமும் வேண்டுவதின்று சந்தேக விபரீத புத்தி நிவிர்த்திக்கே பிரமாணங்கள் வேண்டுவதாகையால் ஆசிரியர் பிரஞ்ஞானம் பிரமமென்று இருக்குவேத மகாவாக்கியத்தை யுபதேசிக்கச்சீஷனும் அறிவே பிரத்தியக்ஷத்திற் பிரகாசிக்குமானால் தேகாசெகத்தெல்லாம் பிரத்தியட்சத்திற் காணப்படுகின்ற தாகையால் நான் தேகமோ அறிவோ யென்றதே சந்தேகப் பிரத்தியட்சம் நான் தேகமென்றுருதி கொண்டதே விபரீதப் பிரத்தியட்சம் நான் பிரமமென்று நிலைத்ததே யதார்த்தப்பிரத்தியட்சம் இவ் யதார்த்தப் பிரத்தியட்சத்திற்கு வேறு பிரமாணங்கள் வேண்டுவதின்று சந்தேகவிபரீதபுத்தினி விர்த்திக்கே அனுமானப்பிரமாணமும் விசாரிக்கவேண்டும்.

### வினா.

அனுமானப்பிரமாணமேதென்னில்.

### விடை

அனுமானத்தில் பிரதிக்கினை ஏதுதிருஷ்டாந்தமென மூன்று விதமுண்டு அவற்றில் பர்வதங்களிலக்கினியுண்டென்பதுவே பிரதிக்கினை தூமமுள்ளது காரணமென்பதேயேது, மகானசத்திலக்கினி யுண்டென்பதுவே திருஷடாந்தமாம்.

### வினா.

இவற்றுள் பிரதிக்கினையிற் சொரூபவபிப்பிராயமேதென்னில்.

### விடை.

பூதங்களானது தடித்து பவதீகசராசர மானவோர் தேகத்தைக்குறித்து இவ்வுடம்பின் கண்ணறிவாகிய பிரமமிருக்குமென்று நிச்சயிப்பதே பிரதிக்கினை.

### வினா.

ஏதுவிற்சொரூபவபிப் பிராயமே தென்னில்.

### விடை.

தேகேந்திரியாதிகளி லறிவுநின்று பகுத்தறிகின்றது தேகேந்திரியாதிகள் சடமாகையால் அறியச்சகதியில்லை தேகேந்திரியாதிகளே யறிவதானால் சுழுத்தி மூர்ச்சை சமாதியினிடத்து மறியவேண்டுமே அங்ஙனமறியாமையினால் இந்திரியங்களிற் பகுத்தறி விருப்பது கொண்டு இவ்வறிவுக்காதாரமான பிரமமொன்றிருக்கு மென்பதே ஏது.

### வினா.

திருஷ்டாந்தத்திற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

### விடை.

பிரத்தியட்சத்திலெழும்பின புகையைக்கண்டு அப்பிரத்தியட்சமான அக்கினி யிருக்குமென் றறிந்ததுபோல தேகேந்திரியாதிக ளினின்றறியு மறிவைப் பிரத்தியட்சத்திற்கண்டு யாவராலு மறியப்படாததாய் அவாங்மனாதீதமான பிரமமொன் றிருக்கின்றென்றறிவதே முக்கியப்பிரயோசனமென்று சொல்லப்படும் - பூதபவுதீகசராசரங்களிலும் அறிவாகியபிரம மிருக்கின்றதென் றனுமானத்திற் காணப்பட்டதன்றிப்பிரத்தியட்சத்திற் காணப்படவில்லை அஃதென்ன லட்சண முடையதா யிருக்குமோவென்றபுத்தி விருத்திபரிகரிக்க வேண்டி உவமானப் பிரமாணமும் விசாரிக்கவேண்டும்.

### வினா.

உவமானப்பிரமாணமாவதேதென்னில்.

### விடை.

மரைமிருகமென்று ஒன்றுண்டென்று கேள்விப் பட்டவன் அதை அறிய வேண்டிய ஆவலினாலறிந்தபேர்களைவினவ அவர்களுமேக தேசதிருஷ்டாந்தமாய் இந்தப்பசுப்போ லிருக்குமென்பது உவமானப்பிரமாணம்.

### வினா.

இதிற்சொரூபவபிப் பிராவமேதென்னில்,

### விடை.

பிரமத்தையறிய விரும்பினவன் பிரமசொரூப மெப்படியிருக்குமென்று பெரியோர்களை வணங்கிக்கேட்க அவர்கள் அதற்கோருவமையினாலும் ஏகதேச திருஷ்டாந்தத்தினாலு மறிவிக்க வேண்டியதினால் அந்தப்பிரமம் சச்சிதானந்த சொரூப லட்சணமாய் இந்தப்பூதாகாசம்போல வியாபகப்பட்டிருக்கு மென்று சொல்ல ஆகாசலட்சணமென்ன வென்று வினவ ஆகாசம் நான்குபூதங்களுக்கு மாதாரமாய் தானொன்றோடும் பற்றாதி ருக்கையாலும் நான்கு பூதங்கட்கும் ஆகாசத்தைத்தவிர விருப்பிடமின்மையாலும் நான்குபூதமு மாகாசமே யாதாரமாயிருந்தது கொண்டு அந்த ஒரு ஆகாசத்தையே கடாகாசம் மடாகாசம் சலாகாசம் மகாகாசமென்று உபாதிவசத்தாற்கண்டு கூறப்பட்டபோதும் அவ்வாகாசத்திற்கு இந்நான்கு பூதங்களைக் குறித்து வந்தவுபாதிகள் சற்றுமின்றி இந்நான்கு பூதங்களையுங் கவளீகரித்ததிக்கிறமித்து அவயவமின்றி நிரவவயமாயிருக்கு மென்னக்கேட்டு அந்தப் பிரமமும் இவ்விலக்கணமுடையதா யிருக்குமென்று பரோட்சமாயறிந்ததே அபிப்பிராயம் இவ்விலக்கணமுடைய பிரமமானது இருக்குமிடந் தெறிய வரவில்லையே யென்றபுத்தி விருத்திபரிகரிக்க வெண்டி ஆகப்பிரமாணமும் விசாரிக்கவேண்டும்,

## வினா.

ஆகமப்பிரமாணமாவதேதென்னில்.

## விடை.

சொர்க்கலோகத்தில் அமிர்தமிருக்கின்றதென்றுங் காசியிலரிச்சந்திரன் மயானங்காத்த பரண்காலின்ன மிருக்கிறதென்று மாகமஞ் சொல்லக் கேட்டு அதில் நிச்சய புத்திவந்ததே ஆகமப்பிரமாணம்.

## வினா.

இதிற்சொரூபவபிப்பிராயமே தென்னில்

## விடை.

ஏகமேவாத்துவிதம்பிரமமென்ற சுருதிவாக்கியமும் மேனியிற் புறத்தினு ள்ளின் மேலோடு கீழிற்றிக்கில் வானில் வையகத்தி லெங்கும்யானிலாவிடமு மில்லை யென்ற ஸ்மிருதி வாக்கியமும் சோதிதானாயிருந்தாற் பிரமமதாமென்ற வுபனிஷத்வாக்கியமும் பிரமாணமாகச்சொல்ல, சுரோத்திரவிடயமாய்க்கேள்வியுற்று தன்னிடத்தில் அந்தச்சச்சிதானந்தசொரூப லட்சணமிருக்கிறதாவென்று விசாரிக்குமளவில் சென்மாந்தரகன்யத்தாலிந்தச்சரீரம் இப்போது வந்ததென்றும் இப்போது செய்கிற கன்மத்தினாலினிவருங்காலத்திலும் தேவ மனுஷ திரியக்ககாதி ஜென்மங்கள் வருமென்றும் அனுபவமிருப்பதால் சத்தாச்சுது மேலும் - திரிகாலத் தினுமுண்டான சரீராதிகளழிவதும் அவற்றால் வரும் சுகதுக்கமானாவமான ஹானிகவிருத்திலா பாலாபங்களையும் அறிவாயிருந்தறிகின்றதால் சித்தாச்சுது - மேலும் - சத்து வேறு சித்து வேறென்று பிரித்துப் பார்க்கவிரண்டில்லாமையினா லானந்தமாச்சுதுபின்னும் அறிவானது பற்றற்றிருக்க தேகேந்திரியாதி கரணங்கட்கு மவ்வறிவைத்தவிர விருப்பிடமின்மையாலும் அறிவே யவைகட்காதார பூதமாயிருப்பதினாலும் இந்தத் தேகேந்திரியாதி கரணங்கட்கு மவ்வறிவே யாதாரமாயிருந்தது கொண்டு அவ்வறிவுதானே கூடஸ்தரென்றுஞ் சீவனென்று மீசுரனென்று முபாதிவசத்தினாற்பின்னமாகக் கண்டம் பரிச்சின்னம் போலுங் காண்பித்த விடத்திலும் அவ்வறிவாகிய பிரமத்திற்குத்தேகேந்திரியாதிகரண சீவனையுங்கவளீகரித்ததிக்கிரமித்தும் அவயவமின்றி நிரவயவமாயிருப்பதினாலும் முன்பரோட்சமா யறியப்பட்ட சச்சிதானந்த சொரூபத்தைத்தானென்று அபரோட்சமா யறிந்ததே ஆகமப்பிரமாண நிர்ணயம் முற்கூறிய மூன்று பிரமாணங்களினாலும் வஸ்து நிச்சயங்கூடாது - இந்தப்படி எப்போதுஞ் சச்சிதானந்த சுபாவமாயிருக்க முன்பெத்ததிசையி லிந்தலட்சணமறியாமற்போன தென்னவென்று வருகிற புத்தி விருத்தி பரிகரிக்கும் பொருட்டு அருத்தாபத்திப் பிரமாணமும் விசாரிக்க வேண்டும்,

## வினா.

அருத்தாபத்திப் பிரமாணமேதென்னில்,

### விடை.

திருஷ்டவருத்தாபத்தியென்றுங் கேள்வி யருத்தா பத்தியென்று மிரண்டுவிதம் இதில் நித்திய வுபவாசியென்று பேரிட்டிருக்கிற ஒருவனது தேகபீனத்தைக்கண்டு இவனேகாந்தத்திற் பொசிப்பனென்றறிகிறதே திருஷ்டவருத்தாபத்தி,

### வினா.

இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

### விடை.

முன்பெத்தத்திசையினுஞ் சச்சிதானந்தமென்றறிந்துந் தன்னைத் தெரிய வொட்டாமல் மறைத்ததே யருத்தாபத்தி - அதற்குச் சகல பிராணிகளு மனுபவமாக நான் பூர்வசென்மத்திற் செய்யா நின்ற புண்ணிய பலத்தினால் இந்தச் சென்மத்திலும் நல்லசாதிகுல கோத்திர வருணதேகரூப ஐஸ்வரிய கன்மத்தினால் இனிமேலுந் தேவமனுஷராய்ப் பிறப்பேனென்றும் முன்சென்மத்திற்கொடுத்து வைக்காத பாவியாகையால் இப்போதுந் தரித்திரனாயிருக்கிறேன் இந்தச் சென்மத்திலும் ஒருவருக்குங் கொடாததரித்திரனாயிருப்பதினால் வருசென்மத்திலும் தரித்திரனாய்ப் பிறப்பேனென்றும் இன்னவருடம் இன்னமாதம் இன்னதிதி இன்ன நட்சத்திர யோக கரண வாரத்திற் பிறந்தேனென்றும் இந்த மட்டும் சவுக்கியத்தை யனுபவித்தேன் இனி பொல்லாத கஷ்டம் வரப்போகுதென்றும் அந்தக் கஷ்டத்துக்குமே லிந்தச்சரீரனில்லாதென்றும் இப்படி திரி காலங்களினுமுண்டான ஆனிவிருத்தி சுகதுக்கலாபாலாப மானாவமானங்களையு மறிந்திருக்கிறதினால் தான் சச்சிதானந்த லட்சணமாயிருந்து தெரியவில்லை என்றதே யஞ்ஞானம் அதுவே யஞ்ஞான மானால் தெரியவில்லையென்ற வறிவுவரக்கணக்கில்லை ஈதரிவுதா னென்றால் அறியே னென்னுமஞ்ஞானம்வரக்கணக்கில்லை ஆகையால் இந்த அருத்தாபத்தியே சுத்தமான தன்னைத் தெரியவொட்டாது மறைத்த தலைமைபெற்ற வஞ்ஞானம் னித்தியவுபவாசி யென்பவனுடைய சரீரமிளையாததுகண்டு ரகசியத்திற் பொசிப்பனென்றறிவது போல தான் சச்சிதானந்த லட்சணமென்பது தோற்றாதி ருந்தாலுந் தன்னனுபவத்தினாலூன்றி விசாரித்தறிந்தால் தானே சச்சிதானந்த சொரூபமாவன் இதுவே திருஷ்டவருத்தாபத்தி இப்படி சச்சிதானந்த சொரூபமென்பது அனுபவமாயறிந்திருந்தும் முன்போலவே நாமரூபாதிகள் தோற்றுவதன்றி அந்தலட்சணமிருந்தால் தோற்றாதாவென்று வருகிறபுத்தி விருத்தி பரிகரிக்கும் பொருட்டு கேள்வியருத்தாபத்திப் பிரமாணமும் விசாரிக்க வேண்டும்,

### வினா.

கேள்வியருத்தாபத்தியாவதென்னவென்னில்,

### விடை.

ஓர்புருஷன் அடுத்த கிராமத்திலிருக்கும் ஒருவனைக் காண வேண்டிவந்து அவன் மனைவாயினின்று இந்தக் கிரகவாசி யிருக்கி றாராவென்று அம்மனையிலுள்ளவர்களை வினவ அவனில்லையென்று சொன்ன

அபாவசத்தங்காதிற் கேட்டும் அவனிறந்து போகவில்லை அன்னியதானங்களிற் போயிருப்பானென் றறிந்துகொண்டதேகேள்வி யருத்தாபத்தி,

**வினா.**

இதிற்சொரூப வபிப்பிராயமேதென்னில்,

**விடை..**

நாமரூபாத்மகங்களினு மாத்மாவில்லையென்றறிந்த வறிவுமாத்திர மிச்சமாயிருக்கக் கண்டதே இல்லையென்ற கேள்வி யருத்தா பத்தியின் பிரயோசனமாம் - அறிவேவடிவாயிருப்ப தாத்மாவானால் அறிபொருளைக்குறித்தே யறிவென்ற பேரிருக்கிற தாகையால் அறிபொருளாகிய சீவேஸ்வரசகத்தும் அதன் காரணமான மாயையும் அனாதியாயிருக்கவேண்டும் அப்போது அதுகளுக்கு னித்தி தத்துவம் வருமேயென்னும் புத்திவிருத்திபரிகரிக்கும் பொருட்டு அபாவப்பிரமாண மும் விசாரிக்கவேண்டும்,

**வினா.**

அபாவப்பிரமாணமாவதே தென்னில்,

**விடை.**

பிராகபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னியோன்னியாபா வம் அத்தியந்தா பாவம் என நான்குவிதம்.

**வினா.**

இவற்றுள் பிராகபாவமாவதேதென்னில்,

**விடை.**

குலாலன் சக்கரத்திருக்குமிருத்திகா பிண்டத்தைப்பார்த்து இதிற்கடமில்லை யென்றது பிராகபாவம்,

**வினா.**

இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

**விடை.**

கடமில்லையென்ற அபாவத்திற்கு அனாதித்துவ மனந்த கற்பங்களாயிருந்தும் னித்தியத்துவஞ் சித்திக்கவில்லை - எப்படியென்றால் குலாலன்சக்கரத்தைச் சுற்றி மிருத்திகாபிண்டத்திற் கைவைத்தபோது முன்னில்லாத கடகம் உற்பத்தியாயிற்று ஆதலால்முன்னில்லையென்ற பாவத்தீற்கனாதீத்துவமிருந்தும் அனித்தீயத்துவஞ் சித்தீச்சுது அதுபோல மாயையும் தன்காரியமான சீவேசுரச கத்தும் அனாதீத்துவமென்று சிறிது சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருந்தாலும் விசாரஞானமான விருத்தி ஞானத்தினாற் றகிக்கப்பட்டு அனித்தியமாய் விடுமென்பதே

பிராகபாவப்பிரயோசனமாயிற்று விருத்தியிற்பிரதிபலிக்கும் விருத்திஞானத்தினாற் றகிக்கப்பட்ட மாயையும் அதன்காரியமான சீவேசுரசகத்தும் விருத்திஞான மொழிந்தவிடத்து முன்போலப் பிறத்தியட்சமாய்த் தோற்றுமே யென்றபுத்தி விருத்தி பரிகரிக்கும் பொருட்டு பிரத்தொம் சாபாவமும் விசாரிக்க வேண்டியது.

### வினா.

பிரத்தொம்சாபாவமாவதேதென்னில்.

### விடை.

ஒர் தரித்திரனானயாசகன் ஓர்கடமே ஆசத்தியாய்க்கொண்டு பாவவசத்தினால் மனைகடோறுமிரந்துண்ணுங்காலத்தில் அம்மனைகளிலுள்ள சிறுவர்கள் அஞ்ஞான சிரேஷ்ட வுச்சாகத்தினால் கற்கொண்டெறிய அவ்விரப்பன் கடவாஞ்சையினால் அக்கல்லெறிகளனைத்தும் தன்சரீரத்திற்றாங்கி மறித்துஞ் சகிக்கமாட்டாமல் அவனுக்கே விரத்திதோன்றி அக்கடத்தை ஒர்கற்பாறையின் மோத அக்கடமுடைந்து சில்லுகளாய்ச் சிதறிவிட்டது பிறகுகடவாஞ்சையினால் அவன் புரண்டு புரண்டழுதாலும் உடைந்த கடம்வரமாட்டாதென்பதே பிரத்தொம்சாபாவம்.

### வினா.

இச்சொரூபவபிப்பிராயமேதென்னில்,

### விடை.

முன்விசாரஞானத்தாற் றகிக்கப்பட்ட மாயையும் அதன்காரியமான சீவேசுரசகத்தும் மீண்டுகற்பகாலத்தினும் உண்டாகமாட்டாதென் றறிவதேயபிப்பிராயம் கடமுடைந்தும் அதன்காரியவுபாதி காண்பதுபோல விருத்திஞானத்தாலழிந்த மாயையும் அதன் காரியமான சீவேசுரசகத்தும் காரணமான் பிரமமாத்திரமாய்ப்போகாமல் மாயாகாரியமான சீவேசுரசகத்தொன்று அறிவிற்றோற்றக்கண்டிருப்பதால் அந்தமாயையும் வஸ்துத் துவயமாயிருக்கும் ஆகையால் பிரமத்தில் மாயையுண்டு மாயையிற்பிரமமிருக்குமென்ற புத்தி விருத்தி பரிகரிக்கும் பொருட்டு அன்னியோன்னியா பாவமும் விசாரிக்கவேண்டியது.

### வினா.

அன்னியோன்னியாபாவ மாவதேதென்னில்.

### விடை.

படத்திற்கடமும் கடத்திற்படமுங் காலத்திரயத்திலு மில்லை யென்றறிவதே அன்னியோன்னியபாதம்.

### வினா.

இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

### விடை.

அத்துவிதம் - அவிநாசம் - உவமாளரகிதம் - அவாங் மனோ கோசாம் மவுனாதீதம் - அத்திபாதிப்பிரியலட்சணம் ஆகிய குணங்களையுடையதே பிரமசொரூபம் - துவிதம் திரிசமயம் மனவாக்கு கோசரம் அனிர்வசனம் ஆகிய குணங்களையுடையதே மாயாசொரூபம் அம்மாயா சொரூபத்திற் பிரமசொரூப மில்லை - பிரமசொரூபத்தில் மாயாசொரூபமில்லையென் றறிகிறதிடம்வந்ததே யபிப்பிராயம் - இதுநாமரூபமென்றும் மாயையென்றும் நினைவில்தோற்றுகிறது - அந்த மாயையில்லாவிட்டால் நினைவில் தோற்றமாட்டாது ஆகையினால் மாயையுமிருக்குமென்று வருகிற புத்திவிருத்தி பரிகரிக்கும் பொருட்டு அத்தியந்தா பாவமும் விசாரிக்கவேண்டியது.

### வினா.

அத்தியந்தபாவமாவதேதென்னில்.

### விடை.

ஒருபுருஷன் தனது செப்பனத்தில் தான்சாகவும் தன்னை தகனஞ்செய்யவும் மறுநாள் காடாற்றி அஸ்தியெடுத்துக்கும் பத்திலடக்கிக்கங்கையில் விடவுங் கண்டபிறகு விழித்தசாக்கிரத்தில் மனத்தால் நினைக்க வாக்காற் சொல்ல வந்தும் மெய்யாகாமற்பொய்யென் அறிவதே அத்தியந்தாபாவம்,

### வினா.

இதிற்சொரூபவபிப் பிராயமேதென்னில்.

### விடை.

மாயையென்றும் சீவேசுராய ளென்றும் நாமரூபங்களாய்ச் சொன்னாலும் நினைத்தாலும் சுத்தமித்தையே எப்படியென்றால் ஆகாசத்தில் தாமரைபூத்ததென்று நினைவில் தோற்றினாலும் அது எப்படியில்லையோ அது போல மாயையென்று நினைவில்வந்தாலுங் காலத்திரயத்திலு மில்லையென்ற திடம்வந்ததே யபிப்பிராயம் மாயை யென்பது காலத்திரயத்தினுமில்லா திருக்கச் சகல தேவிகளுக்கும் நானாவாய் பிரசித்தமாய் உண்டுபோலத் தோற்றுகிறதற்குக் காரணமேதென்று வருகிறபுத்தி விருத்திபரிகரிக்கும் பொருட்டு ஐதீகப் பிரமாணமும் விசாரிக்கவேண்டியது,

### வினா.

ஐதீகப்பிரமாணமாவதேதென்னில்.

### விடை.

ஒருவன் ஒரு ஆலமரத்திலேறி இலையும்விற்கும் தனக்குப் போதுமான மட்டும் பறித்துக் கொண்டு இறங்குஞ் சமயத்தில் வேறொருவன் வந்து ஆரடாபயித்தியக்காரா இந்த மரத்தில் மகாயட்சனென்றும் பசாசிருக்கின்றதே

இதினிடத்தில் ஒருவருஞ்சேருகிறதில்லையே நீ இதிற் கால்வைத்தேறலாமா வென்றசத்தங்கேட்ட மாத்திரத்தில் மனத்திற் பயமும் சரீரத்தில் நடுக்கமுமுண்டா யொடித்த்தவிறகும் பறித்த இலைகளையுமெறிந்து விட்டு மரத்தி லிருந்திறங்கக் கால் தடுமாறிக் கீழே விழுந்து மூர்ச்சை யானதே ஐதீகப் பிரமாணம்,

**வினா.**

இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

**விடை.**

மாயையும் மாயாகரியங்களும் காலத்திரயத்தினுமில்லாத சுத்தமித்தை யானாலும் பிரத்தியட்சமாய்க்காணாத யட்சவிஷயம் அன்னியன்சொற் கேட்ட மாத்திரத்தில் இருக்கிறதென்று சத்தியபுத்தி வந்தது போல அந்த மாயாகாரியமான சீவேசுரசகத்துக்கள் பிரசித்தமாயுண்டு போல அசம்பாவனையாகிய பிராந்தி மூலப்பிரமையால் தோற்றுமென் றறிகிறதேயபிப்பிராயம் - மாயை யென்பதில் லையானால் மாயாகாரியமான நாமரூபசகத்தென்றும் சத்தபரிசரூ பரசகந்த கரணமென்றும் அனேகவிபரீதங்கள் தோற்றுகிறதற்கு காரணமேதென்று வருகிற புத்திவிருத்தி பரிகரிக்கும் பொருட்டு சம்பவப்பிரமாணமும் விசாரிக்கவேண்டியது,

**வினா.**

சம்பவப்பிரமாணமாவதேதென்னில்,

**விடை.**

ஆயிரமென்னுங்கணக்கில் ஒன்று இரண்டு அஞ்சுபத்து நூறென்னுங்கணக்கு மிருக்கிறதென்றறிவதே சமப்பிரமாணம்.

**வினா.**

இதிற்சொரூபவபிப்பிராயமேதென்னில்.

விடை.

சத்தமென்றறியும்போது அவ்வறிவேசத்த ரூபமாயிருக்குமன்றிப்பரிசரூபர சகந்தக ரணதேகங்களுமில்லை - பரிசமென் றறியும் போது அவ்வறிவே பரிசரூபமா யிருக்குமன்றிச் சத்தரூப ரசகந்த கரண தேகங்களுமில்லை - ரூபமென் றறியும் போது அவ்வறிவே ரூபமாயிருக்குமன்றிச் சத்த பரிச ரசகந்ததேக கரணங்களுமில்லை ரசமென்றறியும் போது அவ்வறிவேரசரூப மாயிருக்கு மன்றிச்சத் தபரிசரூபகந்த கரணதேகங்களுமில்லை - கந்தமென்றறியும்போது அவ்வறிவே கந்தரூபமாயிருக்குமன்றிச்சத்தபரிசரூப ரசகரணதேகங்களுமில்லை - ஆகையால் இந்திரியசபளிதமாய் சத்தபரிசரூப ரசகந்தங்களாய்த் தோற்றின வெல்லாம் அவ்வறிவாகியபிரமமே யதுவதுவாகத் தோற்றியது ஆனபடியினால் அறிவாகிய பிரமத்தில் அனேகம் போல அறிவாகியதனக்கே தோற்றலாம் அன்றியும் தான் சர்வ சுத்திமானாகலின் அனேகமுமிருக்கலாம் அப்படி யிருக்கையால்

சர்வாதாபூதமான நிருபாதிகப்பிரமமே யிருக்கிறதென்றறிகிறதே யபிப்பிராயம் இதுவேயபூர்வதை.

**வினா.**

பலமாவதேதென்னில்

**விடை.**

இந்தச்சகவஸ்துக்களில் ஒருவஸ்துவையறிந்த மாத்திரத்தித்தில் சகலமு மிப்படிபே யிருக்குமென் றறிவதுபோல ஆத்மஞான மறிந்த மாத்திரத்தில் சகல பிரமாண்டங்களிலும் தானாய் விளங்கும் பிரமமே நாமென்றும் நாமே ஆத்ம சொரூபமாய் விளங்குவதென்றும் இந்தத்தேகேந்திரியாதிசகலசகத்தும் பிராரத்தமுள்ள மட்டும் மித்தையாத் தோற்றப்படுகின்றது பிராரத்தனாசத் தில்சர் வாதமகமாத் தோற்றாமல் அத்தொய்தாத்ம சொரூபமாத்திரமாய்ப் பிரகாசிக்கு மென்றும் பிரதிவாதிக்கப் படுகிறதேபலம்,

**வினா.**

அர்த்தவாதமாவதேதென்னில்.

**விடை.**

எந்தவஸ்துவைக் கேட்டமாத்திரத்தில் கேட்கப்படாத வஸ்து கேட்கப் படுகின்றது எந்த வஸ்துவை மனனம் பண்ணின மாத்திரத்தில் மனனம் பண்ணப் படாதவஸ்து மன்னபண்ணப்படுகின்றது எந்த வஸ்துவையறிந்த மாத்திரத்தில் அறியப்படாத வஸ்து அறியப்படுகின்றது அதுவே பஞ்சகிர்த்தியங்கட் காதாரபூதமான கர்த்ருத்வமாய் விளங்குவ தென்றும் பிரதிபாதிக்கின்றதே அர்த்தவாதம்.

**வினா.**

உபத்தியாவதேதென்னில்.

**விடை.**

கடத்திற்கு மண்ணும் தந்துவுக்குலண்டு ஆயுதங்களுக் கிரும்புங் காரணமாவது போலத் தோற்றப்பட்ட நாமரூபசெகத்துக்குப் பிரமமேகாரணமென்று செகத்துக்கும் பிரமத்துக்கும் அயின்னத்துவம் பிரதிவாதிக்கின்றதே உற்பத்தி இந்த அஷ்டப்பிரமாண ஷட்லிங்க தாற்பரியங்களைச்சற்குருசாஸ்திர முன்னிலையிற் கேள்

**வினா.**

மனனமாவதென்னில்.

### விடை.

வேதாந்தசாஸ்திரங்களினாற் சிரவணம்பண்ணின அத்துவிதமான பிரத்தியேகாதம சொரூபத்தை அனுகூலமானபுத்தி விருத்தியாலளப்பிட்டு நிச்சயிப்பதேமனனம்.

### வினா.

நிதித்தியாசனமாவதேதென்னில்,

### விடை.

விசாதிகமான தேகேந்திரியாதிகளைச்சுசாதிகமா அகண்டா காரவிருத்தி யோடு கூட்டி மலையினுச்சியில்விட்ட தயிலதாரை போல இடைவிடாமல் அகண்டாகார விருத்தியினாற் சதாதியானித்து நிற்பகத நிதித்தியாசனம், இப்படி ஷட்லிங்க தாற்பரியத்துடன் கேள்விப்பட்ட சிரவணத்தில் ஒருவனுக்கு எதுவரையில் அஞ்ஞான புத்தி நீங்கவில்லையோ அதுவரையினும் சிரவணம் பண்ணவேண்டும் - இப்படி சிரவணம் பண்ணி நிச்சயித்த பொருளில் எதுவரையில் சமுசயபுத்தி நீங்க வில்லையோ அது வரையிலும் யுத்திதர்க்கவனுமான வுதவிகளால் மனனம் பண்ண வேண்டும், இப்படி மனனம் பண்ணித் திடங்கொண்டவறிவில் எதுவரையில் யானென தென்னும் விபரீதபுத்தி நீங்கவில்லையோ அதுவரையிலும் மத்திரயோக முதலியவை வகையோகாப்பியாசவுதவிகளால் விதித்தியாசனம் பண்ண வேண்டும்.

### வினா.

அதேதென்னில்.

### விடை.

அபரோட்சசாட்சாத்காரசிரவணத்தில்குதர்க் கங்களுடன்கூடிய திரிசயமானது எவ்வளவு காலம் நாசப்படவில்லையோ அவ்வளவு காலமு மஞ்ஞானம் போகாது ஆதலால் மோட்சதாகங் கொண்டவன் தியான சமாதிகளை யவசியம் பண்ண வேண்டியது.

### வினா.

அந்தத் தியான சமாதிகளெத்தனை விதமென்னில்,

### விடை.

சவ்விகற்பசமாதியென்றும் நிருவிகற்பசமாதியென்று மிரண்டு விதமா யிருக்கும்.

### வினா.

சவ்விகற்ப சமாதியாவதேதென்னில்,

## விடை.

ஞாதுருஞானம்ஞேயம் என்னுந் திரிபுடிகளுண்டு அவற்றுள் தேகமே தானென்பது அதித்தஞாதுரு அறிவேதானென்பது சுத்தஞாதுரு இந்த ஞாதுருவே ஞானமென்னு மனத்தோடுகூடி ஞானேந்திரிய வழிகளால் விருப்பு வெருப்பென்ற றிவது அசுத்த ஞானம் - இந்திரிய வழிகளினறிவாகிய அசுத்த ஞானத்தைப் பொய்யறி வென்றறிந்ததே மெய்ஞ்ஞான துரியமாகிய சுத்தஞானம் - பூதங்களானது தடித்து பவுதிகங்களாய் எதிரேசத்தாதி விடயங்களாய்த் தோற்றுவது அசுத்தஞேயம் இந்தச் சத்தாதிவிடயங்களனைத்தையுஞ் சொரூபமாத்திரமாய்க் காண்பதே சுத்தஞேயம் ஆதலால் இவ்வசுத்தத் திரி புடிகளை லயம்பண்ணிச் சுத்தத்திரி புடிகளுக்கு லயம் வராதபடி ஞேயமாயிருக்கிற கேவலப் பரப்பிரமவஸ்துவினிடத் தில்மனம் நிலைத்துத்தான் பிரமமாரகா யிருப்பதே சவ்விகற்பசமாதி,

## வினா.

அதெப்படியென்னில்,

## விடை.

மண்ணாலாகியபாண்டம் மண்ணாயிருந்தும் பார்க்கிறவர் கண்களுக்குப் பாண்டமென் றெப்படி காணப்படுகின்றதோ அதுபோல ஞாதுருஞான ஞேயங்களான சுத்தத்திரி புடியான மனமும் சத்தாகிய சின்மாத்திரமான பிரமனிடத்தில் சின் மாத்திரமாகவே விளங்குகின்றதாதலால் சவ்விகற்ப சமாதியென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்,

## வினா.

நிருவிகற்ப சமாதியாவதேதென்னில்,

## விடை.

ஞாதுரு ஞானஞேயங்களான சுத்தத்திரிபுடியென்கிற மனோ வாசனையு நீங்கி ஞேயமாத்திரமான பரப்பிரமசொரூபந் தானுனதே நிருவிகற்பசமாதி

,

## வினா.

அதெப்படி யென்னில்,

## விடை.

அப்பிற்கரைந்த வுப்பானது உப்பென்றுவேறாகாமல் அப்பு மாத்திரமே யிருந்தது போல - பிரமாகாரமான மனம் பிரமமாத்திரமாய் நிலைத்துத் திரிபுடி முதலான சங்கற்பவிகற்பக்களின்றிச் சத்தாமாத்திரமான பிரமசொரூபமாய் விளங்குகின்றதால் நிருவிகற்பசமாதியென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் - இவ்விருவகைச் சமாதிகளில் மனோபேதமிருப்பதினாலும் சமாதிசுழுத்தியிரண்டி னுள் மனோகாசஞ் சமமாய்க் காணாமையாலும் சுழுத்தியில் அஞ்ஞானங் காணப்படுகையினாலும் சமாதியில் அஞ்ஞானங் காணப்படாமையிலைலும்

அஞ்ஞானமும் அஞ்ஞானகாரியமான சந்தேகவிபரீதமு மற்றுப்பிரமஞானத்திற்கு ஒரு விக்கினமுமின்றிச் சதாசொரூபானந்த முண்டாகும் பொருட்டு மோட்சதாகியானவன் அகம்புறமென்னும் பேதத்தால் அருவகைப்பட் டிருக்கின்ற ஷட்வித சமாதிகளிலும் அவசியம் சூம்பியாசம்பண்ணவேண்டும்.

### வினா.

ஷட்விதசமாதிகளாவதேதென்னில்.

### விடை.

அந்தர்திரிசயானுவித்தம் அந்தர்சத்தானுவித்தம் அந்தர்னிரு விகற்பம் பாகிய திரிசயானு வித்தம் பாகியசத்தானுவித்தம் பாகியனிருவிகற்பம் என அருவகைகளாம்.

### வினா.

அந்தர்திரிசயானுவித்தமாவதேதென்னில்.

### விடை.

அறிவுதானே திரிசயங்களாகிய காமக்குரோதாதி விருத்தியிற்கூடி அவ்விருத்திகட்குச் சாட்சியாகத்தானே யிருக்கிற சொரூபானுசந்தானம் பண்ணுகிறதே அகத்திரிசயானுவித்தம் மேலும் நான் எனக்கு ஈதென்கிற காமக்குரோதாதி விருத்திகளை எந்த அறிவினா லறியப்படுகிறதோ அந்தத் திருக்குரூபமான வறிவுக்கு அகங்காரமுதடிய காமாதிகனே திரிசயங்கள் இந்தக் காமாதிவிருத்திகளையும் அவிகாரியாகப் பார்க்கிற சாட்சியாகத் தன்னைப் பார்க்கிறவன் னிஷகிரியனாகவேயிருப்பான் இந்தக்காமாதிவிருத்திகட்கெல்லாம் நான்சாட்சி என்னாலிந்தவிருத்திகள் காணப்படுகிற தென்று தன்னைச்சாட்சியா யறிந்தவன் சாட்சியாகவே யிருப்பான் ஆதலாற்றிரிசயமாயிருக்கிற தேகாதி சகத்தையும் ஆத்மாவாயிருக்கிற தன்னிடத்திலே லயம்பண்ணவேண்டும்.

### வினா.

லயம்பண்ணு மனுபவமெப்படியென்னில்,

### விடை.

நான் தேகமும் பிராணாதிவாயுக்களும் அகங்காரமும் மனமும் யுத்தியும் சித்தமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களுமல்ல இவைகளுக்கெல்லாஞ் சாட்சியாகியும் னித்திய மாகியுமிருக்கிற பிரத்தி யேகாத்மசொரூபமே நான் நான் ஸ்தூலமும் சூட்சுமமும் வளர்ந்தவனும் குறைந்தவனும் பாலனும் எழ்வர்ணனும் விருத்தனும் ஊமையும் நொண்டியும் முக்கரையனும் வந்தவனும் போனவனும் கொன்றவனும் கொல்லப்படாதவனும் கர்த்தாவும் போக்தாவும் சொல்லுகிறவனுஞ் சொல்லப்படுகிறவனும் சுகியும் துக்கியும் யோகியும் னியோகியும் ராகியும் விராகியும் காமியும் குரோதியும் லோபியும் பந்தனும் முத்தனுமல்ல

இதுகளுக்கெல்லாஞ் சாட்சியாகியு னித்தியமாகியுமிருக்கிற பிரத்தியேகாத்த சொரூபமே நான் - நான் உட்பிரக்கியனுமல்ல வெளிப்பிரக்கியனுமல்ல அறியப் படுகிறவனுமல்ல அறியப்படாதவனுமல்ல இந்தத் தேகேந்திரி யாதிகளுடைய கூட்டரவுமெனக்கில்லை புண்ணியபாவங்களுமில்லை பசிதாகமுதலான ஷடுரமிகளுக்குமப்பாற்பட்ட சதாவிமுத்தமான கேவலசித்து ரூபமேநான்யென்று தன்சொரூபத்தைத் தானே கண்டு கொண்டுகாணப்பட்ட திரிசயங்களெல்லாம் தனக்குள் லயம்பண்ணிக் கொண்டிருக்க வேண்டும் பிராந்தியினாற் காணுகிற விபரீத பாவனைகளை விவேகிநிங்கி நிற்பன்.

## வினா.

அதெப்படியென்னில.

## விடை.

செகத்விபரீத பாவநீங்கிச் சுயம்பிரகாசமான ஆத்ம சொரூபமான தேமுத்தியென்று சுருதி ஸ்மிருதிகள் சொல்லுகின்றபடியால் சதாமனசை யொடுக்குகிறவனுக்கே இந்தச்சமாதி சித்திக்கும் இல்லாவிட்டாற் சித்தியாகாது ஆகையால் சதாமனசை யொடுக்க வேண்டும் இதுவன்றி ஒரு வேஷத்தினாலுப் பாஷையினாலும் இந்த அகண்டசச்சிதானந்த வனுபவஞ்சித்திக்க மாட்டாது அதுசித்திக்கும் பொருட்டு அத்தியாதிப்பிரியமான தன்னிடத்தில் அகங்காராதிகளையு மதன் விகாரங்களையும் லயம்பண்ணவேண்டும் எவனொருவன் ஆத்தும தத்துவத்தை யபேட்சித்து பிரகிருதியை நாசம்பண்ணுகிறானோ அவனே முத்தன் அதுவல்லாமல் கோடிசற் கருமங்கள் பண்ணினாலு முத்தனாக மாட்டானென்று எசுர்வேதத்திலும் சுவேதஸ்வதாவுபநிஷத்திலுஞ் சொல்லுகின்றது அன்றியும் சுயம்பிரகாசமான வாதமாவை யறிந்தவன் சகல அஞ்ஞான பாவங்களையு மறுத்து செனனமரணசம்சாரமான கிலேசங்களை விடொழிவாவென்று சகல வேதாந்த சாஸ்திரங்களுஞ் சொல்லுகிறபடியால் சகலகிலேசங்களையும் விட்டொழிகிறதே சென்மமொழிகிறது அஃதேமீண்டும் பிறவாதமுத்தி.

## வினா.

கிலேசத்தையொழிக்கும் விதமெப்படியென்னில்.

## விடை.

ஆதமனிஷ்டையினா லொழிக்கவேண்டுமாகையால் மோட்சதாகியானவன் சதாகாலமுனிஷ்டைபண்ணவேண்டும் சென்ம வாசனையைத் தவிரப் புருஷனுக்கு வேறு விரோதிகளில்லை ஆதலாற் சகல வாசனைகளும் சமாதினிஷ்டையாகிய ஞானாக்கினையினால் தகிக்கப்பட்டால் மீண்டுஞ்சென்மத்திற் கேதுவாக மாட்டாது

## வினா.

அதெப்படியென்னில்.

### விடை.

அக்கினியினால் வறுபட்டவித்துமுளைக்கிறதற் கேதுவாகாதது போல ஞானாக்கினியினால் தகிக்கப்பட்டவாசனாரூபமான கிலேசங்கள் மறுசென்மத்திற் கேதுவாக மாட்டாது ஆதலால் முமூட்சு வானவர்கள் அசேஷ்வாசனாட்சயமும் விபரீதபாவனி விர்தியும் உண்டாகும் பொருட்டு பிரயத்தினம் பண்ணியாரூலும் சதாஞான சமாதியிற்பழகவேண்டியது - இப்படிப்பட்ட ஞானனிஷ்டை யுடையவனுக்குக் கன்மம்வேண்டுவதில்லை கன்மத்துக்கும் ஞானனிஷ்டைக்கு மொன்றான கூட்டரவு சித்தியாது.

### வினா.

அதெப்படியென்னில்.

### விடை.

தேகாதம்புத்தியோடு கூடின கர்தருதவ பாவனையைக் கெடுப்பது ஞானம் ஆதலாலொன்றுக் கொன்று விரோதமான ஞானகன்மங்களுக் கெப்படி அபிக்கியங் கூடும் தேஜசதிமிரங்களுக்கெப்படி கூட்டரவில்லையோ மேற்கு முகம் பார்க்கிறவனுக்கு கிழக்கு முகம் பார்க்கிற கண்ணிமைத்து விழிக்கிறதற்கெப்படி கூட்டரவில்லையோ அப்படியே அந்தர்முக திருஷ்டியான ஞானனிஷ்டர் பரனுக்குப் பகிர்முக திருஷ்டியான கன்மங்களிற் கூட்டரவில்லை ஆதலால்னிஷ்டா பரனாயிருக்கிறவனுக்குக்கன் மதந்திரத் தொழிலிலவகாசமில்லை.

### வினா.

மற்றெதினாலுண்டென்னில்.

### விடை.

திரிகரணத்தாற் சாதிக்கப்படுகிற கன்மங்களெல்லாம்சத்தாகையால் சுத்த மித்தையே யென்று சகலதிரிசயங்களையுந் தள்ளிதிருக்காகிய சிற்சொரூபத்தில் நிலைத்திருப்பதால் அந்தனிலையே சந்தியாவந்தனம் அதுவே யனுஷ்டானம் அதுவே விரதம் அதுவே சகலரமிப்பு மாகையால் சுத்தசத்துவமான பரமார்த்தத்தை யடைந்திருக்கிற சற்புருஷாளுக்குச்சகலமும் ஞானநிஷ்டையைத்தவிர வேறில்லை சகலமும் விட்டு துறந்து ஞானநிஷ்டாபரராயிருக்கிற சந்நியாசிகளுக்கு வேறே கிரியாசாதனங்க ளொன்றுமில்லை ஆதலால் கிரியாந்தரங்களான தொழில்க ளெல்லா மொழித்து நிஷ்டாபரனாகவே யிருக்கவேண்டும் ஞானமேடையிலேற வேண்டி யபேக்ஷித்திருக்கிற முமூட்சுவானவன் ஆத்மநிஷ்டையாகிற கன்மஞ் செய்து கொண்டு சஞ்சலரகிதமாய் சதா ஆத்மபராயணனாய் ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருக்கவேண்டும் ஞானமேடையி லேறவேண்டி யபேட்சை யுள்ள அப்பியாசிக்கு ஞானனிஷ்டா சாதனங்களே கன்மங்கள் யோகமான மேடையி லேற வேண்டின முமூட்சுவுக்குயோகத்தை தவிர வேறு கிரியாந்தரங்க ளெள்ளளவு மில்லை ஒருவன் யோகியாயிருந்து வேறே கிரியாந்தரங்களை னினைத்தால் மரத்தின்மேலேறித்தவறினவனெப்படி கீழேவிழுவானோ அப்படியே யதோகதியில்

விழுந்து விடுவான் ஞானமேடையிலேறி யிருக்கிற கிருதகிருத்தியயனான விவேகிக்கு வெளியில் செய்காரியமொன்றுமில்லை இதுவே அந்தர்திரிசயானு வித்தசவிகற்பசமாதி.

### வினா.

அந்தர்சத்தானுவித்தமாவதேதென்னில்.

### விடை.

சுத்த சின்மாத்திரமாய்ச் சேஷ்டிக்கப்பட்ட சத்தத்துடன் கூடி தரன் அசங்கன் சுயம்பிரகாசன் அத்தொய்தனென்கிற சத்தங்களைப் பொருந்தி அந்தச் சத்தங்களைத் தானாகப் பாவித்த பாவனையெதுவோ அதுவே அந்தர்சத்தனுவித்தம்,

### வினா.

இதற்கனு பவமெப்படியென்னில்.

### விடை.

நான் சுத்தன் சாந்தன் அனந்தன் முன்பின்னெதிரில்லாதவன் உள்ளும்புறனு நிறைந்த பரிபூரணன் ஆனந்தனாபிருக்கிறவன் செனன மரணமில்லாதவன் நித்தியானந்தமான அத்தொய்தன் என்றும் பிரத்தியேகவ பின்னமென்றும் அகண்டமென்றும் சச்சிதானந்த லட்சணமென்றும் சுத்தமென்றுஞ் சுருதிகளிற் சொல்லப்பட்ட பரஞ்சோதியான பிரமமெதுவோ அதுவே நானென்னுஞ் சத்தாமாத்திர மாயிருக்கிற விருத்தியோடுகூடி சத்த சாமானியமான சத்தத்தைப்பொருந்தி சஞ்சலமில்லாமல் சமாதி திரிசயங்களைச்சொரூபத்திலே லயம்பண்ணி சுத்தோகமுதலான சத்தங்களுடன் திருக்கேபிரதானமான பாவனையைச் சாதிக்க வேண்டும் இதுவே அந்தர் சத்தானுவித்த சவிகற்பசமாதி.

### வினா.

அந்தர்நிருவிகற்பமாவதேதென்னில்.

### விடை.

திரிசயானுவித்தம் சாத்தானுவித்த மிரண்டும் விட்டொழிந்து மனோ வியாபாரத்தையுங் கட்டோடே விட்டொழிகிறதே அந்தர்நிருவிகற்பம் எவனொருவன் முன்சொன்ன சவிகற்பசமாதியையன்புடன்கூடி யிடைவிடாமல் நெடுநாள் பழகுகிறானோ அவனுக்கு வாசனாட்சயமுஞ்சித்தலயமுந் தடையற்ற நிரதிசய வானந்தமுஞ் சித்திக்கும் இந்த லட்சணம் பொருந்தின யோகியானவன் உள்ளும் புறனுங்காணாமல் ஆனந்தாமிர்தக் கடலிலமுழ்ந்தினவனாய் தன்னை விட வன்னியமில்லா தவனாயிருப்பன் ஆதலால் நிருவிகற்பமாகிய பரப்பிரம சொரூப நிஷ்டையைப் பொருந்தினவர்களே சீவன்முத்தர்கள் அவர்களே சீவத்தன்மை பொருந்தியும் பொருந்தாமலிருக்கிறவர்களென்றறிக, ஒருவன் இந்த

மூவிதசமாதியும் அகமுகத்திற் பழகினது போல பகிர்முகத்திலும் துவிதநிவர்த்தியாகும் பொருட்டு பாகியதிரிசயானுயித்த சத்தானுவித்த நிருவிகற்பமென்னு மூவிதசமாதிகளையும் பழகவேண்டும்.

**வினா.**

பாகியதிரிசயானுவித்தமாவதேதென்னில்.

**விடை.**

அதிஷ்டானமாய்ச் சச்சிதானந்தமான பரப்பிரமவஸ்துவில் கற்பிதமாக நாமரூபாதி செகத்துவிளங்குகிற எப்படியென்றால் குளிர்ச்சிவெண்மை நெகிழ்ச்சி நுரை திவலை யென்கிற பேரு மொன்றாய்க் கூடினசலத்தை அலையென்பதுபோல சச்சிதானந்தநாமரூங்களைந்து மொன்றாய்க்கூடின சொரூபத்தைப் பிரபஞ்சமென்று சொல்லப்படுகிறதென்று ஆரோபிதமான நாமரூபமிரண்டையுந்தள்ளி அதிஷ்டான மான சச்சுதானந்த சொரூபமாத்திரமாய்க் காண்பதே பாக்கியதிரிசயானுவித்தம் மேலும் சச்சிதானந்த பிரமத்தைத்தவிர நாமரூபங்களில்லையென்று நாமரூபங்களை வேறுபடுத்தி அதிஷ்டான சொரூபத்தி லாரோபிதங்களை லயம்பண்ணி அத்தொய்தவஸ்துவே நாமென்று சதாபஜனை பண்ணவேண்டும்.

**வினா.**

பாகியசத்தானுவித்தமாவதேதென்னில்.

**விடை.**

அதிஷ்டானமான சச்சிதானந்தத்தில் கற்பிதமான நாமரூபங்களை லயம்பண்ணி நிருமலமாகியும் அத்தொய்தமாகியும் பரமானந்த மாகியு மிருக்கிற பிரமமே நானென்கிற பாவனையைப் பொருந்திநிற்பது பாக்கியசத்தானுவித்தம்.

**வினா.**

பாகியனிருவிகற்பமாவதேதென்னில்.

**விடை.**

பிரமானந்த பரவசத்தினால் சொரூபத்தோடேகமாய்க் கலந்து புறத்திற் சகல கிரியைகளுமற்று னிச்சலமாயிருப்பதே பாகியனிருவிகற்பம் இப்படிப்பட்ட யோகி யானவன் எழுந்திருக்கும் போது இருக்கும் போது மறவாமலிந்திரிய னிக்கிரகம்பண்ணிச் சாவதானமாய் இந்தச்சமாதியாறையுஞ் செய்யவேண்டும்.

**வினா.**

எவ்வளவுகாலஞ்செய்யவேண்டுமென்னில்.

**விடை.**

எவ்வளவுகாலம் விபரீதபாவனை போகவில்லையோ அவ்வளவுகாலஞ் செய்ய வேண்டும் மேலும் மோட்சதாகியானவன் அந்தர்பாகியமான ஷட்வித சமாதிகளையும் ஒருக்காலுமறந்திருக்கப்படாது மறப்பானானால் சூரியனில்லாத விடத் திருள் மூடுவதுபோல சொரூபமான தற்பிரகாசத்தைமாயையாகிய இருள் மூடிக் கொள்ளும் ஆதலால் மறதியின்றிச்சதாகாலமும் அறுவகைச்சமாதிகளையும் நன்றாய் அப்பியாசித்து இருதயக் கிரந்தியை ஞானாக்கினியினால் தகித்துனிரந்தரம் பிரமானந்தாமிர்த சமுத்திரத்தில் அழுந்திவிளையாடிக்கொண்டு சந்தோஷகரமாய் விருத்தி சஞ்சலமின்றித் தாகாரமாயிருக்கிறதேனிருவிகற்பசமாதி - இந்தினிருவி கற்பசமாதியிலிருப்பவனே குணத்திரயங்களையுங் கடந்தவன் இஃதில்லாதவன் யோகியாயிருந்தாலும் குணத்திரயவசத்தனாய் சமசாரத்திற் சுழன்று திரிவன்.

## வினா.

குணத்திரயங்களைக் கடப்பதெப்படியென்னில்.

## விடை.

நேத்திரங்கண்ட மிருசயமான சாக்கிர சொப்பன சுழுத்தி யாகிய வவஸ்தாத் திரய விலட்சணனாயிருப்பது, இப்படி குணாதீதமான சுகசமாதியானது சீவன்முத்தனுக்கே சித்திக்குமன்றி மற்றொருவருக்குஞ் சித்தியாது அசத்தாகிய விடயங்களை யனுசந்தானம் பண்ணுகிறவன் பந்தன் சத்தாயிருக்கிறவஸ்து சொரூபத்தை யனுசந்தானம் பண்ணுகிறவன் முத்தனென்று சுருதிகளிற் சொல்லுகின்றது ஆதலால் மோட்சதாகியானவன் பிரயாசைப்பட்டாகிலும் சதா பிரயத்தனம்பண்ணி னிருவிகற்பசமாதி யடைவேண்டும் - இதையடைந்தவனே பவபந்தச் சுழலினின்று விடுபட்டவன்.

## வினா.

பவபந்த மாவதே தென்னில்.

## விடை.

அவித்தை ஆகம்கன்மமாகிய மூன்றும் சீவர்களுக்குப் பவபந்தமென்று சொல்லப்படும். இதுனிருவிகற்ப சமாதியினாலன்றி வேறொன்றினாலும் நீங்காது இதற்கு நான்கு விரோதமுண்டு.

## வினா.

நான்குவிரோதமாவதேதென்னில்.

## விடை.

லயம் விட்சேமம்காஷயம் ரசாஸ்வாதம் என்பதுகளாம்.

## வினா.

லயமாவதே தென்னில்,

**விடை.**

அகண்டாகார விருத்தி தமோகுணத்துடன் கூடி அகண்டவஸ்துவிற் கூடாமல் னித்திரை வருகிறதேலயம்.

**வினா.**

இதற்குள் விர்த்தியெப்படியென்னில்,

**விடை.**

யூகபுத்தியினால் லயத்தைபோக்கி விருத்தியைனிருமலம்பண்ணிப் பிரத்தியேகாத்ம அபிமுகமாய் நாட்டவேண்டியது.

**வினா.**

விட்சேபமாவதே தென்னில்.

**விடை.**

அப்படி வஸ்துனிலையில் நாட்டுகிறபோது அகண்டாகாரவிருத்தி ராதசகுண தோஷத்தினால் அந்த நாட்டத்தில் னிலைக்காமல் விடய நாட்டத்தி லபிமுகப் படுவதே விட்சேபம்.

**வினா.**

இதற்குனிவிர்த்தி யெப்படியென்னில்.

**விடை.**

அகண்டாகார விருத்தியில் தானே விடயங்களிலுள்ள தோஷங்களை யாரோபித்து அதைப்பிரத்தியேகாத்ம வபிமுகப்படுத்தி னிற்கவேண்டும்.

**வினா.**

இதற்குனிவர்த்தி யெப்படியென்னில்.

**விடை.**

அகண்டவஸ்துவின் சுகத்தையும் அதன் மகிமையையும் சொல்வதாகவும் திரிசயங்களெல்லாந் துச்சமென்று போதிப்பதாகவு மிருக்கிற வேதாந்த சாஸ்திரார்த்தங்களை அடிக்கடி வாக்கினாற் சொல்லவேண்டியது.

**வினா.**

ரசாஸ்வாதமாவதேதென்னில்.

**விடை.**

அகண்டாகார விருத்தியானது தான்வைத்த நாட்டத்திலிராமல் பூர்வவாசனா வேகத்தினால் சகவிகற்பமான விஷயரசங்களைப் பொசிக்கப் போகிறதே ரசாஸ்வாதம்,

**வினா.**

இதற்குனிவர்த்தி யெப்படியென்னில்.

**விடை.**

வயிராக்கிய புத்தியினால் விஷயங்களி லபிமுகப்பட்ட விருத்தியைத் திருப்பிப் பிரத்தியேகாத்த வபிமுகமாய்னிருத்த வேண்டும் இந்த விரோதங்களன்றிப் பின்னும் பலவிரோதங்கள் வந்தாலும் தியானசமாதிகளால் இந்த விக்கினங்களைப் போக்கி நிருவிகற்ப சமர்தியையே அப்பியாசிக்கவேண்டும், விடயங்களில் இந்திரியங்கள் சொல்லாதபடி மனோ நிக்கிரகம் பண்ணுகிறவனே தீரன் அவனே தீவிரதாமோட்சதாகியும் சகல விருப்பும் வெறுப்பற்றவனுமாயிருப்பன் - அவனைக் கண்டமாத்திரத்திற் றாபத்திரயாதி சோக மோகங்களெல்லாம் பரந்தோடிப்போம் - அப்பால்சகல விக்கினங்களையும் போக்கிரட்சிக்கிறவராயிருக்கின்ற பரமேஸ்வரன் அவனிடத்தில் எப்போதும் உன் மன்னியராய் நின்று அவனா லருச்சிக்கப்பட்டு விளங்குவர் ஆதலால் மோட்சதாகியானவன் சகலவிக்கினங்களையு மொழித்து ஈஸ்வரனைப் பரமாகவைத்துக்கொண்டு ஈஸ்வர சகாயத்தினால் நிருவிகற்ப சமாதியைச் செய்ய வேண்டும் இப்படிப்பட்ட ராசயோகியானவன் உள்ளும் புறம்புஞ் சொரூபத்தைத் தவிர அன்னியமில்லாத பரப்பிரம சொரூபந்தானேயாய் சகல தொழிலு மற்றுச் சும்மாவிருப்பன் இதுவே முத்திசாதனனிலை இதை உன் மன்னியாவஸ்தையென்று சொல்லப்படும்.

**வினா.**

உன்மன்னியாவஸ்தை யாவதேதென்னில்,

**விடை.**

நிருவிகற்பமாயிருக்கிற ஆத்மாவினிடத்தி லாத்மாகாரமாய் ஏகரூபமா யிருக்கிற அகண்டாகாரவிருத்தி ஞானமே யுன்மன்னியா வஸ்தையென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் இந்தப் பிரகாரம் அத்தொய்த பரப்பிரமப் பிரகாசத்தினால் அஞ்ஞானாந்தகார நிவிர்த்தியாகி தானே பரப்பிரம சாட்சாத்கார சொரூபமாய் விளங்கும்போது தேகேந்திரியாதிகளில் நானெனதென் றெழுகிற இருதயக்கிராந்தியும் சொரூபத்தை தெரியவொட்டாமன் மறைத்திருந்த சம்சயங்களும் சகல கன்மங்களும் அஞ்ஞான துக்கமாதலா லதை யடியோடு நாசம் பண்ணினவனே பிரமவித்து அவனே சிரேஷ்டன் அவனே சகலபந்தங்களுமொழிந்த வன் இந்த நிருவிகற்ப சமாதியினால் தொய்த தோற்றங்கள் லேசமுமில்லாமல் விடுபட்டு கேவல சொரூபானந்த மாத்திரமாய் னினைப்புமறப்பாகிய சுத்தத் திரிபுடியுந் தோற்றாதிருப்பதே அபரோட்ச சாட்சாக்காரனிலை இந்தச் சுவானு

பூதியாகிய நடுனிலையில் விடமுமில்லை புசிப்பவனுமில்லை யாதலால் இதைத் தானே பதிஞான மென்றும் பரஞானமென்றுஞ் சொரூபா ஞானமென்றுஞ் சொல்லுவார்கள்.

### வினா.

இன்னம் பலவகையாகச் சொல்லுகின்ற முத்தினிச்சயங்களேதென்னில்,

### விடை.

அசைவறத் தெளிந்த விடமே முத்தியென்றும் மும்மல நீங்கினவிடமே முத்தியென்றும் சாக்கிராதீதமே முத்தியென்றும் நினைப்பற னினைத்தழுந்திப் பரமாணுவாய் பேரொளியாய்னின்ற விடமே முத்தியென்றும் முப்பாழுங்கடந் தவிடமே முத்தியென்றும் சுத்தத் திரிபுடி நீங்கினவிடமே முத்தியென்றும் சகலகேவலமாகிய னினைப்புமறப்பற்றவிடமேமுத்தியென்றும் மனோலயமான விடமே முத்தியென்றும் இன்பாதீதமே முத்தியென்றும் காமம் வெகுளி மயக்க மென்னு முக்குற்றங்களு நீங்கினவிடமே முத்தி யென்றும் பலஞானசாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது இதுகளெல்லாம் அபரோட்ச சாட்சாத்கா ரவானந்தானுபவத் திற்சமமாயிருக்கும் - இதுவுமல்லாமல் வேதபாகியமாகிய புறமதங்களில் ஸ்தீரீ சையோகமே முத்தியென்றும் கந்தமைந்துமறிவதே முத்தியென்று திரிகுண மடங்குவதே முத்தியென்றும் இருவினையுங்கெடுவதே முத்தியென்றும் பாஷாண மாயிருப்பதே முத்தியென்றும் விவேகமுண்டாவதே முத்தியென்றும் சீவதத்துவங் கெடுவதே முத்தியென்றும் பலவிதங்களாகச் சொல்லுவதெல்லாம் முத்தியல்ல வென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அபரோட்ச சொரூப சாட்சாத் காரமாகிய பிரமானந்த பரவசத்தினால் சொரூப வியாபகத்திலே கீபாவமாய்புறம்பிற் சகல தொழிலுமற்று னிச்சலானந்தமாயிருப்பதே மவுனாதீதமாய் விளங்கும் னிருவிகற்பமான விவேகமுத்தியென் றறியவேண்டியது - சித்தம், மோட்ச விருப்பங் கொண்ட அதிதீவர பக்குவனான ஒருவன் னிஷ்காமியமாய் சிவ புண்ணியங்களைச் செய்ய வதனால்யிருவினை யொப்புண்டாகி மலபரிபாகம் பிறந்து அதனாற் சத்தினி பாதம் பதிந்து சற்குருதரிசினவட்சையுண்டான காலத்தில் அவனுக்குயிர்க்குயிராய் கின்ற ஆனந்த தீதமான பிரமமே கிருபையினாற் சகளீகரித்து ஆசிரியமுர்த்தமா யெழுந்தருளி வந்து பிரமோபதேசமான ஞான தீக்ஷை செய்து ஞான சாஸ்தி ரார்த்தங்களைப் போகித்தருளும் அதைக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து ஞானனிஷ் டைகூடி னிருவிகற்ப சமாதிபொருந்தி மோக்ஷசாந்தியடைந்து தான் பெற்றபேறு உலம்பெற வேண்டு மென்னுங் கருத்தால் உலகத்தில் சதா னிஷ்டாபரனாகிய சீவன்முத்தனாய் வசித்திருப்பன் அந்த மகானுபவனால் பின்னுள்ள பக்குவர்களுக்கும் உபதேச முதலானதுக ளுண்டாம் இதிற் சந்தேககமில்லையென் றறிய வேண்டியது சித்தம்.

# ஆத்மா.

**வேதாந்திகள்.--** ஞெப்த்தி மாத்திரமே, ஆத்மா வென்றுரைபர்.

**கூடஸ்தன்.-** பிரமம் விடயங்களை தெறிந்து அவைகளிள் மறைந்தபிறகு அவைகன்ன ரூபமென்று அறிவதே ஆத்மா விஷயசிதாகாசசீவன்.

**பாசுபத கபாலிகாவிரதர்.--** நித்திய வியாபக சைதன்னியமே ஆத்மா.

**சாங்கிய பாதஞ் சலிகர்.-** அசங்கசின் மாத்திரமே ஆத்மா.

**நியாயவே சீடிகர்.--** கானம் போல் மகத்பரினாமநாய் பாஷாணம்போல் சடரூபநானாலும் மனது சம்யோகத்தில் சித்து சம்யுகத்தனா யிருப்பது ஆத்மா.

**சைனன்.-** தேகாதிவிலக்ஷணனாய், தேகபரிணமிதனாய், பரிணமிக மத்தியில் சாங்கோசவிகாச தர்மமே ஆத்மா.

**கெவுளயாமள சாத்வீகர்.-** ஆனந்தமாகநிற்றலே ஆத்மர்.

**லொகீகன்.-** தேகபுத்திர களத்ராதிரூபமே ஆத்மா.

**உலகவாசிகள்.** - தூலசரீரமே ஆத்மா.

**சாரவாகன்.-** தேகம் நீங்கிய போது பார்த்தேன் கேட்டேன் யென்று சொல்வது நீங்குவதால்பஞ்சேந்திரியமே ஆத்மா.

**சாரவாகயேகதேசன்.-** பிராணவாயு போனபின்பு யிந்திரியமில்லாமை யால் பிராணவாய்வே ஆத்மா,

**உபாசகன்.-** மனதில்லாதபொழுது பிராணவாய்வு நீங்களால் மனதே ஆத்மா.

**சணிகவாதி.-** புத்தியில்லாதபோது மனஞ்சலிக்கிறபடியால் புத்தியே ஆத்மா.

**பௌத்தன்.--** சுழுபத்தியில் அந்தகரணமுதல் சகலயிந்திரியங்களும் லயமடைகின்றமையால் சூன்னியமே ஆத்மா.

**பாட்டசாரியன்.-** சுழுபத்தி சூனியமென்று அரிந்துசாக்கிரத்தில் வந்து சொல்வதால் சத்தே ஆத்மா,

**அந்தராளன் ஆகமஸ்தன்.**- சூஸ்தநாடி மூலமாய் சஞ்சரிப்பதால் அணுவே ஆத்மா.

**டிகம்பரன்.**- பதாதிகேசமுதல் அறிவு வியாபித்திருப்பதால் புஷரூபமே ஆத்மா.

**தார்கீகன்.**- பிரபாகரன் ஆத்மா கண்டமா யிருந்தால் ஆத்மா நசித்துவிடுமாதலால் ஆத்மம் பரிபூரண மென்றும் சடமென்றும் புகல்வர்.

**பாட்டன்.**- ஆத்மா சுழுபத்தியில் சடமாயும் சாக்கிரத்தில் அறிவாயு மிருப்பதால் ஆத்மா சடசித்தெனப் புகல்வர்.

**சாங்கியன்.**- பரிபூரணத்திற்கு யிரண்டுலக்ஷணம் கூடாதாகையால் ஆத்மா அறிவாயும் பரிபூரணனாயுமிருக்கும். சுழுத்தியில் காணப்படும் சடம் அந்தந்த ஆத்மாக்களுக்கு சுக துக்கத்தை கொடுப்பதால் ஆத்மா சுபாபம்.

**யோகி.**- பிரகிருதி என்னும் சுபாபத்திற்கு நடத்துவோனில்லாவிடில் சேஷ்ட்டியாதாகையாலும் ஆக்கினை செய்து காப்பாற்றுகிறவ னில்லையாகில் சீவர்களுக்கு பந்தமோக்ஷ மில்லாமையால் மீஸ்வரன் சீவர்களுக்கு அன்னியமா யிருக்கிறார்.

**பஞ்சலி மதத்தோர்.**- பிராணிகள் மனதில் அந்திரியாமியாக ஆத்மா,

**தார்க்கீகன்.**- அந்தகரணமில்லா விட்டால் சங்கல்பமில்லை ஆனபடியால் அந்தகரண மொற்றுமை பட்டபோது யிரண்ணிய கற்பனாக யிருப்பதே ஆத்மா.

**விஸ்வருபன்.**- தூலத்தைவிட்டு சூக்ஷமமிருக்கா தாகையால் கிருஷ்ணன் விஸ்வரூபமெடுத்து எங்கும் காலை நாட்டியபடியால் விறாட்டு விஸ்வரூபமே ஆத்மா.

மதாபிமானிகள் கூறுவதி லுண்மை யின்னதென் றுணர்பவர் ஞானிகள்.

# உலகபேதம்.

**வேதாந்திகள்.-** ஆணவம் மாயை காமியம் இந்தமும் மலங்களும் நீங்கி ஆத்மா அருளோடு கூடி நிற்பதேமுத்தி பிரமாத்தும ஐக்கிய ஞானத்தால் விவகாராதி சம்சா ரபந்த நிவர்த்தியே மோக்ஷம்.

**பாதஞ்சலிகர்.-** யோக அப்பியாச பலத்தால் மனோலயத்தால் அஞ்ஞான மழிந்ததே.

**சாங்கியன்.-** பிரகிருதி புருஷ விவேகத்தால் அவித்தை நாசமானதே.

**சங்கிராந்திவாதி, பாலிகமாவிரதி.-** பசுகரணம் கெட்டு சீவகரணமாகிறதே, நர்த்ரூவமான சம்சாரபாவத்தைவிட்டு ஞப்திமாத்திரமா யிருப்பது.

**பார்க்கரியன், பேதவாதி.-** ஆத்மா கெடுகிற தென்றும் ஆணுவ மலம் மெடுகிறதும்.

**மாயாவாதி.-** சரீர தொந்தனை பட்டு நிற்கிற சீவாத்மாவிற்கு விவேகஞான முண்டாகிறதே.

**பிரபாகரன், அமணன்.-** எங்குமரிந்த காமியகன்மங் கெடுகிறதென்றும், முக்குணங்கள் கெடுகிறதென்றும்.

**பத்தன்.-** உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் கெடுகிறதே.

**சமவாதி.-** சுத்த மாயாசரீர மழியாதாகையால் நித்தியமாயிருப்பதே.

**பாஷாணவாதி.-** ஆத்மா கேவலத்தில் கிடக்கும் தன்மையை போல் முத்தியிலு ஒன்று மரியாம லிருப்பதே,

**சாத்வீகன், சார்வாகலௌகீகர்.-** ஆனந்த விராப்தியென்றும், மரணமே மோக்ஷமென்றும்.

**பூர்வமீமாங்கிசிகள், உலகாயுதர்.-** சுவர்க்காதிலோகபிராப்தி என்றும், மகளீரிடத்துண்டான போகமென்றும்.

**சைனன், கௌளயாமளர்.-** ஆகாசமத்தியத்து ஞத்திரோத்ரக மனம், ஆகாசக மனாதி சித்தி பிராப்த்தி,

**பௌத்தன்.-** சுகதுக்காதிகளால் மயக்கப்படாம லிருக்கும் சுத்தபுத்தி சந்ததியே.

**பாஞ்சராத்திரிகள்.-** வாசுதேவாத்துமகப் பிரகிருதியில் சொரூப ஆணியில்லாம லடங்குவது.

**லௌகீகர்.-** இகத்தில் புத்திராதிக ளுடன்கூடி வியாதி துக்கமில்லாமல் சுகத்திலிருப்பது.

**நியாயவைசேடிகர்.-** ஆத்மஞ் சரீரேந்திரியாதி, 211 துக்க ஆத்தியந்த நாசத்தால், பாஷாணம்போ லிருப்பது.

**பாசுபதர்.-** பிரவாகேஸ்வரத்தால், யீஸ்வரத்துமம் அன்னியருக்கு கொடுத்து ஆத்மன் ஞப்திமாத்திரமாயிருப்பது.

# காயசித்தி.

அடியிற்கண்ட ஔஷதங்கள் உபயோகப்படுத்தும் போது அறுசுவை, புகையிலை, அபினிகள், சாறாயம், ஸ்ரீபோகம்மச்சமாமிஷங்கள், கோடம், அதிக நித்திரைநீக்கவும்.

1. மேகநீர்நீங்கி சுத்த உதிரம்பெருக. - பாலில்வெகித்த நெல்லிகா சூரணம், சுத்திசெய்த நெல்லிகாகெந்தகதூள் சமநிடையாககூட்டி ½ - விராகனிடை தேனில் குழைத்து இருவேளையாக மண்டலம் கொள்ளவும்.

2. மலக்குற்றம் நீங்க - கடுக்கா 4, திருப்பிலி 1, சுக்கு 1, சீரகம் 1, ஓமம் 1, திப்பிலிமூலம் 1, யிந்துப்பு 1, சூரணங்கள் தனித்தனி செய்து மேல்கண்ட யிடைகளாக்கூட்டி கடிகை சூரணம் வென்னீரில் கொள்ளவும்.

3. அய்யசீதம் கழல. வெள்ளை காக்கனாவேர், கடுக்கா, நெல்லிவத்தல் வொவ்வொன்றும் புன்னைகாயளவு 4 - பலம் சித்தா மணக்கு யெண்ணையில் கலந்து காலையாக 3 - நாள் உள்ளுக்கு கொள்ளவும்.

4. தேகத்திலிருக்கும் சுண்ணாம்புநீங்க. பச்சைமஞ்சள் சமூலம் - 8-1 - ஆக கிழாழம்வடித்து கூர் எள்ளு எண்ணைபலம் 3 - விட்டு யிவ்விதம் 3 - நாள் கொள்ளவும்.

5. தேகத்தில் எண்ணைநீங்க - விரைநீக்கிய சீக்காதூள் விலுப்பையெலை, தாளியெலை வகை பிடி 1 யிவைகள் அமுரியில் கிழாழம் - 8-1 - ஆகவடித்து பூநீர்களஞ்சி ½ படிகாரசுன்னம் களஞ்சி ½- கூட்டிகொள்ள யிவ்விதம் 3 - நாள் கொள்ளவும்.

6. வாய்வு நீங்க. - சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், யிந்துப்புகரிவேப்பிலை சூரணம் வகை பலம் 1 பொரித்தகாயம் பலம் ½ கூட்டி கடிகைபிரமாணம் அன்னத்திலிட்டு புசிக்கவும்,

7. தாகம், மயக்கம், சூடு, மூர்ச்சைக்கு. தாளிசபத்திரி, சுக்கு, சீரகம் வகை பலம் ¼ கிழாழம்வடித்து கொள்வதாலும் அதிமதுரம், சிருதேக்கு, பனங்கற்கண்டு கிழாழம் தவத்து கொள்வதாலும்.

8. மேகவெட்டை, மூலசூடு, காந்தல், பித்தவெறி, கபாலபித்தம் தீர. -- சுத்திசெய்த சீந்தில்கொடி சூரணம் கற்கண்டும் கூட்டி (கடிகை) நெய்தேனில் மண்டலம் கொள்வதாலும், கரந்தை சூரணம் 4 சீனி 1 கூட்டி கடிகைபிரமாணம் 10 - நாள் கொள்வதாலும் நீங்கும்.

**9.** மேகநீறால் சர்மத்தில்காணும் வியாதிக்கு. - கீழாநெல்லி சமூலசூரணம், சீனி, நெய், தேன்கூட்டி பாகப்படுத்தி தாணிக்கா பிரமாணம் 6 - மாதம் வருடம் கொண்டுவர குஷ்ட்டவியாதியும் தீரும்.

**10.** கண் துலக்கமாய் நரை வறாதிருக்க. - காக்கனா மேனி கரந்தை, வல்லாரை, அவுரி, பொற்றலை, பொடுதலை, பிரமிசம நிடைகள் தனித்தனிசூரணம் செய்துகூட்டி கடிகைபிரமாணம் தேனில்கொள்ள மண்டலம்.

**11.** மந்தபுத்தி, மதிமயக்கம், சோகை, எரிபித்தம், நீர்கட்டு, மலபந்தம், பித்தமூற்சை நீங்க - மேனி, சிருசெருப்படை, கரிசலைசமனிடை சூரணம் கூட்டி, இவைகளுக்கு 4 - க்கு 1, கற்கண்டுகூட்டி மண்டலம் கொள்ளவும்.

**12.** உதிரத்தில் மேகநீர் நீங்க. - திரிகடுகும் ஓமமும்வறுத்து தூளாக்கி பனைவெல்லப்பாகில் கிளரி உதயத்தில் கழற்சிக்கா பிரமாணம் கொண்டுவரவும்.

# ஆகாரம்.

கருங்குருவை பச்சமுதும் சிருபயருங் கூட்டிபொங்கி சர்க்கரை தேன் ஆவின் பால் முப்பழங்கட்டி உண்பதும், மேல்கண்ட அமுதும் பசும்பால்கூட்டி பொங்கி தேங்காதிருவலும் சர்க்கரையுங்கூட்டி உண்பதும் முன்னமுதும் துவரைபருப்பும் பொங்கி தேங்காதிருவல் சர்க்கரைநெய்கூட்டி உண்பதும், அமுது பொங்கியேலரிசி தூளும் சர்க்கரைகூட்டி உண்பது முண்டு, கிறாம்புகியாழத்தில் அமுதிட்டு பொங்கி சர்க்கரைகூட்டி உண்டுவர மூலவியாதி தீரும். பருத்திக்கொட்டையில் பால்யெடுத்து அமுதிட்டு பொங்கி சர்க்கரை தேன்கூட்டி உண்டுவர மேகம் நீங்கி தாதுகள் வலிவு படும்.

பழயகம்பு. தினை பசும்பாலில் பொங்கி சர்க்கரைகூட்டி உண்டுவர தசையிலுள்ள பித்தநீர்கள் நீங்கி குளிர்ச்சியாகும். அமுதும் பயரும் ஆவின்பாலும் பொங்கி கறிவேப்பிலை மிளகு சூரணம் அமுரி உப்புகூட்டி உண்பதும் இதில் கண்டவைகளில் தனது சரீரதன்மைக்கு ஒற்றுமையானதாக பாகப்படுத்தி உச்சி காலபோஜனம் செய்து இரவில் ஆவின் பாலை கொண்டு தனது சாதனத்திலிடை விடாம லிருப்பவர்கள் சத்வகுண முடையவறாவர்களென்று கர்ப்பனூவில் அனுபவிகள் கண்டிருக் கின்றனர்.

கண்டத்தில் கபம் காலனாகயிருப்பதால் ஆவின் நெய்யுடன் பொற்றலைரசம் சமனாககூட்டி ரவியில்வைத்து சுண்டியபிறகு காலை உதயத்தில் பெருவிரலில் கொஞ்சம்யெடுத்து உண்ணாவிடம் தேய்த்துவர கபங்கள் நீங்கும்.

கபாலகொதிப்பும் நேத்திரயெரிவும் சூடாகயிருந்தால். - ஆவின்பால் படி 3 - பொன்னாங் காணிரசம்படி 1 கூட்டிகாய்ச்சி யிரக்கி கீள்வைத்து ஆறியபிறகு புரை மோர் விட்டு மறுநாள் மத்திட்டு கடைந்து வெண்ணையெடுத்து உறிக்கிநெய்யாக வடித்துவைத்துக்கொண்டு பக்ஷத்திற்கொருதரம்சிரசிற்குதேய்த்து ஸ்த்தானஞ் செய்துவர குணமாகும்.

பஞ்சகர்ப்பஸ்தானம். - நெல்லிபருப்பு வேம்புபருப்பு மிளகு கஸ்தூரி மஞ்சள் கடுக்கா இவ்வைந்தும் பசும்பாலி லரைத்து சற்று கொதிப்பித்து சிரந்தேய்த்து ஸ்தானஞ் செய்துவரவேண்டும்,

# பிராரத்வம்.

இயாதாமொருவன் ஜெனனகாலத்தில் லக்கினாதிபதியும், கன்மாதிபதியாகிய பத்தாமிடத்திற்குடையவனும், சந்திரனும் இம்மூவரும் நட்பாகக் கலந்திருக்க ஜெனித்தவன் நரை திரை நீங்கி பூரண ஆயுளோடிருந்து மோட்சமும் பெறுவன்.

குரு கோபுராம்சம்பெற்று கேந்திரத்தில் நிற்க சுக்கிரன் பருவதாம்சம் பெற்று திருகோணத்தில் நிற்க, கடகலக்கினமானால் யுகாந்தம்வரையில் மரணமில்லா திருப்பன்.

கடகலக்கின ஜெனனமாகி அதே கடகலக்கினத்தில் மதி, குரு இருக்க, கேந்திரத்தில் வெள்ளி, புதனிருக்க, மற்ற கிரகங்கள் 3,6,11 - ல் இருக்க, ஆயுள் இவ்வளவென்று முடிவே யில்லை.

ஜெனனமாகும் லக்கினத்தில் சூரியனிருக்கவும், குருவும், சனியும் ஒரு பாகைக்குட்கூடி பாக்கியத்திலிருக்கவும், இவர்களை நற்கோள்கள் பார்க்கப் பிறந்தவன் முனீஸ்வரனாவான்.

சந்திரன் உதயத்திலிருக்க குரு, புதன், ராகு மூவருங்கூடி பாக்கியத்திலிருந்து சனியங்கிச மேவாதிருந்து தனது அங்கிச மேற சமயாசாரிகள் போல் யுகாந்த காலம் வரையில் யாவருக்கும் குருவாயிருப்பான்.

இராகு, குஜன், சனி மூவரும் சராங்கிசமேற குரு, வெள்ளி இருவரும் ஸ்திராங்கிசமேற, மற்ற கிரகங்கள் உபய அங்கிசத்தி லிருக்கப் பிறந்தவன் சகல சித்துகளும் பெற்று ஆயிரம்வருடம் யிருப்பன்.

ஜெனலக்கினம் உபயராசியாகவும், உபயத்தோன், கேந்திரம், உச்சம், திருகோணத்திலேறவும், சனி அட்டமத்திலிருக்கவும் ஜெனித்தவன் பரமஞானியாகியும், ஜெகத்குருவாகியும் ஆயிரமாண்டிருப்பன்.

ஜெனன ராசிக்காரனாகிய லக்கினாதிபதிக்கு 6, 8 - மிடத்தில் பாபிகள் நிற்க, ஒன்பதாமிடத் ததிபதியும், சுபர்களும் 9 - ல் இல்லாமலும், பார்க்காமலும் மறைந்திருக்கப் பிறந்தவன் பரதேசியாகியும், மிகு தாரித்திரியமுமடைவன்.

லக்கினாதிபதிக்கு 6, 8 - ல் பாபக்கிரகங்கள் நின்றிருந்தபோதிலும், ஒன்பதாமதிபன் அதேயிடத்திலுமிருந்து சுபக்கிரகங்கள் பார்வையுமிருந்தால் சாஸ்திர வுபதேசம், மந்திர வுபதேசம் செய்யத்தகுந்த திறமுடையவனாவான்.

இராகு உச்சமாகவும், சந்திரலக்கினத்தை சுபர்கள் பார்க்கவும் பிறந்தவன் மாந்திரவாதியும், இனிவருங் காரியத்தையெடுத்துச் சொல்லுந் திறமுடையவனுமாவன்.

அங்காரகன், சனி, சூரியன், குரு இந்நால்வரும் லக்கினத்தி லிருக்க, திருகோணகேந்திரங்களில் சுபக்கிரகமில்லாமலும், சுபர் பார்வை யில்லாமலும் பிறந்தவன் சன்னியாசியாவன்.

சூரியன், சந்திரன், குரு இவர்காளிலொருவர் லக்கினத்தைப் பார்க்கவும், அல்லது 10 - மிடத்திலிருக்கவும், சனி 12, 2 - லிருக்கவும் பிறந்தவன் சன்னியாசியாவன்.

சுக்கிரன் பகை நீச்சம்பெற்று அவருக்கு 5, 9 - ல் பாபக்கிரகம் நின்றும், லக்கினத்தை சுபக்கிரகம் பார்க்காமலுமிருந்தால் அந்த ஜாதகன் வேதாந்த சித்தி பெற்று கடைசியில் மோட்சம் அடைவன்.

ஐந்தாமிடத்ததிபன் இராகுவாயிருந்து அவன் ஒன்பதாமிடத்தி லேறியிருந்தால் அந்த ஜாதகன் ஆகாயகவனசித்தி யடைவான். அவன் சந்திரனாயிருந்தால் காந்தர்வசித்தியடைவான். புதனாகில் அவிழ்தப்பிரயோகசித்தி யடைவான். குரு, சுக்கிரன், சனியாகில் ரசவாதசித்தியடைவான்.

இராகு, கேது ஒன்பதாமிட மேறியிருந்தால் புராணிகனாவான். செவ்வாய் ஆட்சி உச்சம் கேந்திரம் பெற்றிருந்தால் பெருந்தவசியாவான்.

துலாராசியில் ஜெனனமாகி பாபக்கிரகங்கள் நோக்கியிருந்தால் வாசி தேவியோகம், மந்தரம், குளிகை, வாதம், காயசித்தி யாகும். கன்னி மீனமாகில் மத்திபசித்தி. கற்கடகம் சிங்மாகில் சத்திபூசைசெய்து அதினால் பலசித்திகளடைவர்.

**வேதாந்த ஜட்ஜிமெண்டு,**

முற்றுப்பெற்றது.